# வெற்றி

டாகுர் சிறு கதைகள்



மொழிபெயர்ப்பு

த. நா. குமாரஸ்வாமி

# வெற்றி

டாகுர் சிறுகதைகள்

மொழிபெயர்ப்பு :
த. நா. குமாரஸ்வாமி





புத்தக நிலையம்
இராயவரம்
புதுக்கோட்டை ஸ்டேட்

# முகப்பு

'சின்ன பத்ர' என்ற பெயர் ஏற்ற ரவீந்திரரின் கடிதக் கோப்பிலிருந்து கொய்த இவ்விரு தளிர்களும் அவரது சிறுகதை எழுந்த சூழ் நிலையை உங்களுக்கு எடுத்துச் சொல்லும்:

"சிலாஇதஹ்
மே, 1893.

இப்பொழுது படகுதான் என் வீடு. இதை என் சொந்த இடமாகவே பாவிக்கிறேன். இங்கே நானே யஜமானன் எல்லாம். எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். என்னைத் தடுப்பார் இல்லை. நான் உடுத்துப் பழகியிருக்கும் பழைய 'கௌன்' போன்றது இந்தப் படகும். எனக்குத் தோன்றும்பொழுது இதனுள் புகுந்து கொள்ள முடியும். மனம்போன வழி பாவனைகளுக்கு இடம் தரவோ, கல்பனையில் திளைத்திருக்கவோ, நினைத்த ஸமயம் படிக்கவோ, எழுதவோ; ஒன்றுமே பிடிக்காது போனால் மேஜைமேல் ஹாய்யாகக் கால்களை நீட்டிய வண்ணம், சலிக்கும்வரை பரந்த ஆற்றையே பார்க்கவோ, விண் நிறைந்த ஒளி நிரம்பிய, ஓய்வு மல்கிய பகல் வேளைகளில் மெய்ம் மறந்து இருக்கவோ வாகான இடம், இந்தப் படகு.

பழைய நண்பர்களுடன் மீண்டும் தொடர்பு வைத்துக் கொள்ளச் சில நாட்கள் பிடிக்கும். இது முடிந்ததும் வழக்கத்தை யொட்டி ஏதாவது இரண்டு எழுத எனக்கு அவகாசம் கிட்டும். என்னைச் சுற்றி இலங்கும் காட்சிகள் யாவும் பாந்தமாகிவிடும், முன்போல். உண்மையில்

பத்மா நதியின்மேல் எனக்கு அளவற்ற ஆசை. இந்தி ரனுக்கு ஐராவதம் எந்த மாதிரியோ, பத்மாவும் எனக்கு அதேமாதிரி. அவள் அடக்க ஒடுக்கமான நதி அல்ல. சற்று முரடு. இருந்தாலும் அவள் அலைத்தோளினை ஆதரவுடன் தடவித் தட்டிக் கொடுப்பதென்றால் எவ் வளவு ஆனந்தம் தெரியுமா எனக்கு? இன்று அத்தகைய பத்மாவின் சாயலே மாறிவிட்டது. ஓட்டம் சுருங்கி தெளிந்து ஓடுகிறாள். பசலை எக்கர் அவள் நலனை உண்ட தனால் மெலிந்து விட்டாள். தெள்ளிய நீராடையும் அவள் உடலோடு ஒட்டிக் கொண்டிருக்கிறது. அவள் போகும் எழிலே ஒரு கண்கொள்ளாக் காட்சி. அவளது புனலாடையும் அந்த உடல் வளைவிற்கேற்ப நெளிகிறது. நான் படகில் வசிக்கும் காலங்களில் பத்மா என் வரைக் கும் வேறுவிதமான ஆளாகவே உறவாடி வந்தாள். அவளை நான் மிகைபடக் கூறுவதாக நினைக்கலாம் நீங்கள். எனக்குச் சொந்த மென்றே கருதும்பொழுது அவளை எப்படி வர்ணித்தாலும் பொருத்தமாகவே இருக் கும். இங்கே வந்தவுடன் ஒரே நாளில் கல்கத்தாவில் நான் கொண்டிருந்த நோக்கே முற்றிலும் மாறிவிட்டது. நேற்று மாலை நான் அந்நகரில் என் வீட்டு மாடிமீது உட்கார்ந்து எண்ணமிட்டது ஒரு மாதிரி. இன்று பகல் படகில் அமர்ந்து நான் சிந்தனை செய்யும் விஷயமோ வேறு மாதிரி. கல்கத்தாவில் இருக்கையில், காவியச் சுவையும் உணர்ச்சிப் பெருக்கும் இழைந்ததோர் அனுப வம் இவ்வாற்றிடையே எவ்வளவு உண்மையுடனும் உயிருடனும் திகழ்கிறது! 'பப்ளிக்' (பொதுஜனம்) என்னும் கியாஸ் வெளிச்சம் கொண்ட அந்த நகர் அரங் கில் நடிக்கப் பிடிக்கவில்லை. இந்த இடத்தில், பளிங்கு போன்ற பகலவன் விடும் ஒளியில், தனிமையாக அளவற்ற ஓய்வுக்கிடையே யாருக்கும் தெரியாமல் என் பணியைச்

செய்வதே எனக்கு இன்பம். பட்டணத்துச் சந்தடியி லிருந்து தப்பி ஓடிச் சாயங்களை முகத்திலிருந்து கழுவி விட்டு இந்த ஏகாந்தத்தில் அடைக்கலம் புகுந்து அமைதி யைக் காண்பது போன்றது ஒன்றில்லை. 'ஸாதனு' பத்திரிகைக்கு ஏதாவது எழுதுவது, பலவிதமான ஜோலி களில் தலையிட்டுத் தவிப்பது போன்ற தொல்லைகள் இல்லை. அதனால் நான் அடைந்த லாபம் என்ன? அசல் பொன் அல்ல. பொன்போல் ஒளிரும் புழுதியேதான்! வரம்பற்ற ஆகாயம், அளவில்லாத அவகாசம். இதற்கிடையே நான் என் வேலையில் கருத்தாய் வேறுவழியில் கண்ணோட்டா மல் இருந்தால் அதைவிட வேறு என்ன வேண்டும்?"

* * *

"ஸாஜாத்பூர்
28, ஜூன் 1895.

'ஸாதனு'வுக்குக் கதைகள் எழுதிக் கொண்டிருக் கிறேன்: மழைநாளுக்கு ஏற்ற கதைகள். கொஞ்சங் கொஞ்சமாக எழுதிக்கொண்டு போகிறேன். எனக்குப் புறம்பாக நிலவும் இயற்கையின் நிழலும் ஒளியும், வர்ண மும் ஓசையும் என் எழுத்துக்களில் தோய்ந்து விடு கின்றன. மழையும் வெயிலும், ஆற்றின் சலசலப்பும், அதன்மேல் அசையும் நாணலின் வெள்ளிய பூவும், கார் வானமும், நிழல் கவிந்த ஊரும், மடை நீர் பாயும் பள்ள வயல்களும் நான் வனையும் கதாபாத்திரங்களுக்கும் புனை யும் ஓவியங்களுக்கும் ஓர் உண்மையையும் அழகையும் தருகின்றன. ஆனால் இந்த விருந்தில் வாசகர்களுக்குக் கிடைக்கும் பங்கு சொல்பமே. அவர்கள் பெறுவ தெல்லாம் அறுவடையாகி மிகுந்த தாளே தவிர முற்றிய கதிர்கள் அல்ல. அந்தப் பழனத்தின் பசுமையும், அந்த ஆகாயத்தின் விசாலமும், அந்தக் காற்றின் இனிமையும்,

அந்தப் பனித்துளியின் அழகும் அவர்களுக்குச் சிக்கும் பொருள்களா ? ஒன்றுவிடாமல் அவற்றை யெல்லாம் படம் போல் காட்ட நான் என்னவோ விழைகிறேன்: என் மனத்துள் கண்ட ஒரு விந்தைக் காட்சியை நீங்களும் காண்பதற்கே. ஆனால் இந்த அபூர்வமான சுவை மனத்துள்ளேயே தங்கி விடுகிறது. ஒன்றை நுகர்ந்து இன்புறும் அளவோடு மனிதனுக்குள்ள சக்தி நின்று விடுகிறது. பிறருக்கு அதை வழங்கும் ஓர் ஆற்றலைக் கடவுள் அவனுக்குத் தரவில்லையே!"

* * *

என் இளைய சகோதரன் 'ஸேனு'வும் நண்பன் ரங்கநாத ஆத்ரேயனும் என்னைத் தூண்டியிராது போனால் இந்தக் கதைகள் வெளிச்சத்தைக் கண்டிரா. என் வேலையில் இவர்கள் இருவரும் அளித்த கூட்டுறவு மறக்கக் கூடியதன்று. விசுவபாரதி கழகத்தார், என் வேண்டுகோளுக்கு இணங்கி விசேஷ உரிமை எனக்கு வழங்கியதைக் குறித்து அவர்களுக்கு என் நன்றி.

திருவலிதாயம்,<br>கார்த்திகைத் தீபம்<br>விய வருஷம்

இங்ஙனம்,<br>தண்டலம் நா. குமாரஸ்வாமி<br>ஆக்கியோன்.

# பொருளடக்கம்

# வெற்றி

## 1

இளவரசியின் பெயர் அபராஜிதா. ராஜா உதய நாராயணனின் ஆஸ்தான கவி சேகர் அவளை என்றுமே கண்டதில்லை. ஆனால் என்றைக்காவது ஒரு புதுக் கவிதையைப் புனைந்து அரசனுக்கு அதைப் படித்துக் காட்டும்பொழுது, இளம் புலவனின் மதுரமான குரல் சாலேக வாயில் அருகே காத்திருக்கும் ஓர் உள்ளத்தில் இன்பத் தேனை ஊற்றும். நெருங்க முடியாத ஒரு நக்ஷத்திர உலகை நோக்கிச் சேகரின் தேமதுர கீதம் எழும்பும். அந்த ஜோதி மண்டலத்தின் நடுவில் அல்லவோ அவனுடைய அதிர்ஷ்ட தேவதையான அபராஜிதா வீற்றிருக்கிறாள்?

எப்பொழுதாவது ஒரு நிழல்போல் கவியின் கண்ணில் படுவாள். ஒரு ஸமயம் அவள் அருகில் எங்கேயாவது இருப்பதைக் கலீரென நூபுரத்தின் ஓசை காட்டிவிடும். "மலரோ பஞ்சோ அவள் மஞ்சு சீறடிகள்? தென்றலின் இசையோ, அருவியின் ஒலியோ மடவரலின் பொற்சதங் கையின் நாதம்? அந்தச் சரண தாமரை தொட்ட இடந் தான் என்ன புண்ணியம் செய்ததோ?" என்றெல்லாம் இளம்பாவலன், தன் உள்ளத்தில் அவளது மலர்த்தாளிணை இறுத்தி, அவள் கால்சிலம்போசைக்கு இசையப் புதுப் புதுக் காவியங்களைப் பொழிவான்.

இத்தகைய மோகத்தில் அலைபவருக்கு, தாம் கண்ட நிழல் யாருடையது, சதங்கையின் ஒலி எவர் காலிலிருந்து வருவதென்ற ஞானமே உதயமாவதில்லை.

இளவரசியின் பணிப்பெண் மஞ்ஜரி, நீராடத் துறைக்குச் செல்லும் வழி, சேகரின் அழகிய குடிலுக்குப் பக்கத்தில்தான். இளம் பாவலனுடன் மனங்குளிர இரண்டு வார்த்தை பேசாமல் அவள் போகவேமாட்டாள். மனிதர் நடமாட்டமிராத அந்தி நேரங்களில் சேகரின் அறைக்குள் நுழைந்து ஏதாவது ஸரஸமாடிக் கொண்டிருப்பாள். அவள் நாள்தவறுமல் சேகர் குடிலின் பக்கமாகச் செல்வதற்கு ஏதோ காரணம் இருக்க வேண்டும். நீராடிவிட்டுத் திரும்பும்பொழுது விண்ணீல மேலார்ப்பும், காதில் மலர்க்குழையும் அவள் அணிவதின் கருத்தென்ன ?

ஊரில் அலர் எழுந்தது. அவர்கள்மீது என்ன தவறு? மஞ்ஜரி தூதி; சேகருக்கு இன்பச் செய்திகளை ஏந்தி வருபவள். இளங் கவி தன் உணர்ச்சிகளை மறைத்துக் கொள்ளவில்லை. பகிரங்கமாக அவளோடு பழகி வந்தான். போதாக்குறைக்கு மஞ்ஜரி என்ற பெயரில் புதுமையும், காதலின் இனிமையும் மண்டியிருந்தன. இது போதாதா கதை திரிப்பவர்களுக்கு? சேகரும் கூச்சமின்றி எல்லாரும் அறிய அவளுக்கு வஸந்தமஞ்ஜரி என்ற பெயரையும் சூட்டியிருந்தான். கேட்பானேன் ஊர் வாயை ?

வேனில் விடுதூது என்ற ஒரு சிறு காவியத்தில் 'இன்சொலாள் என் நெஞ்சுலாவு மஞ்ஜரி' என்று எதுகை நயம் வைத்துப் பாடுவான். நாடறிந்த இந்த அம்பல் அரசன் செவிக்கும் எட்டியது.

இளங் கவியின் சுவைமிக்க இந்தப் போக்கு உதய நாராயணனுக்கு விகல்பமாய்ப் படவில்லை. ரஸிகனுயிற்றே! ஸந்தோஷமே கொண்டான். இதைக் குறித்துச் சேகரை எப்பொழுதாவது வேடிக்கையாகக் கிண்டுவான்; பாவலனும் கலந்து கொள்வான். "அஞ்சிறைத் தும்பி இளவேனிலைத்தான் பாடுமோ?" என வேறு கருத்துப்பட

உதயநாராயணன் கேட்பான். கவி விட்டுக் கொடுக்காமல், "இணரிலும் கொங்கு தேரும்" என்பான். சபையினர் இந்தமாதிரி சமத்காரமான பேச்சுக்களைக் கேட்டு இன்புறுவர். சாலேகத்தின் மறைவில் இளவரசி அபராஜிதாவும் மஞ்ஜரியைக் கேலி செய்வாள். இதற்காக மஞ்ஜரி கலக்கமுறுள்.

இப்படியெல்லாம் பொய்யும் உண்மையும் கலந்தே மனிதர் வாழ்வு கழிந்துவிடுகிறது. இறைவன் ஆக்கியவை சில. மனிதன் தானே செய்து கொள்வன சில. உலகத்தவர் உருவாக்குவது கொஞ்சம். வாழ்வே ஒரு ரஸ கதம்பம். பல சரக்குகள் குழைத்த ஒரு கலவை. வாஸ்தவமும் கல்பனையும், இல்லாததும் பொல்லாததும் சேர்ந்ததோர் விசித்திரக் கூட்டு.

கவி பாடும் கீதங்களில் வரும் விஷயம் ஒன்றுதான் உண்மையானது; நிறைவானது. அவனுடைய கவிதையின் உட்பொருள் ராதையும் கிருஷ்ணனுமே. நித்திய புருஷன்; அழியாப் பெண்மை. முடிவில்லாத இன்பமும் துன்பமும். இதைப்போன்ற தத்துவங்களை விளக்குவது தான். தன் கவிதையின் மூலம் கவி தன்னை உணர்ந்தான். அந்தக் கீதங்களில் மண்டியிருந்த அபூர்வமான சுவையை அரசன்முதல் ஆண்டி ஈறுக உள்ளமதில் நுகர்ந்து மெய் மறந்தனர். தேசத்து மக்களின் நாவில் சேகரின் திவ்ய கானமே உலவி வந்தது. நிலா மகிழ்விரிக்கும் இரவுகளில், நறுந்தண் காற்று மூச்சு விடும்பொழுதும், சந்தி சதுக்கம், மாளிகை, மாடம், ஆற்றின் நடுவே தெப்பங்கள் எங்கும் சேகருடைய இன்னிசைப் பாட்டுகளே பல கண்டங்களிலிருந்து எழும். அவ்வளவு புகழ் அந்தப் பாவாணனுக்கு.

கவி அற்புதமான சிறு காவியங்களைப் புனைவான்; அரசனும் கேட்டு மகிழ்வான்; ரஸிகர்கள் அதன்

பொருட்செறிவைக் கண்டு வியப்பர். மஞ்ஜரியும், கவியைக் கண்டு இரண்டு இனிய வார்த்தைகள் பேசாமல் போகமாட்டாள். அந்தப்புரத்தில் ஒரு நிழல் உருவம் அரங்கேற்றும் சமயங்களில் பலகணிமூலம் பார்க்கத் தவறவே தவறாது. கல்லென்று கால் சதங்கையை ஒலித்து அபராஜிதா தன் உள்ளக் கிளர்ச்சியைக் காட்டுவாள்.

## 2

நாட்கள் இவ்வாறு செல்ல, தக்ஷிணத்திலிருந்து எட்டுத் திசையும் சென்று வெற்றி விருது வாங்கிய, சந்தப் பாக்களை வீசிடும் டிண்டிம கோலாஹலச் சூறாவளிப் புலவனொருவன் அரசனுடைய கீர்த்தியைப் பாடிப் பரிசு பெற ஆடம்பரமாக ராஜதானிக்கு வந்தான். எத்தனையோ சபைகளில் ஆஸ்தான வித்வான்களை வாதுக்கு அழைத்து வென்ற சண்டப்பிரசண்டன். கடைசியாக அமராபுரத்திலும் தன் கொடியை நாட்ட விரும்பினான் அவன்.

ராஜா உதய நாராயணன் அரியாசனத்திலிருந்து எழுந்து, "வாரும் மஹாகவியே!" என்று உபசரித்தான். அதற்கு அந்தக் காளமேகம், "வந்தேன், போரை விரும்பியே" என்றான்.

அரசன் தன் மானத்தைக் காப்பாற்ற வேண்டியிருந்தது. வாதுக்கு அழைத்தான் தக்ஷிணத்துக் கவி. சொற்போர் எப்படியிருக்குமென்று சேகருக்கு ஒன்றுமே தெரியாது. சிந்தாகுலம் கொண்டான். இரவில் தூக்கம் வரவில்லை. புதிதாக வந்திருக்கும் அந்தச் சந்தப் புலி புண்டரீகனின் திடகாத்திரமும் வளைந்த நாசியும் வெற்றியின் பீடம்போன்ற மேடான நெற்றியும் எந்தப் பக்கம் பார்த்தாலும் தென்படுவதுபோன்ற கிலி அவனுக்கு.

பொழுது விடிந்தது. உள்ளத்தில் நடுக்கம். கவிதைப் போர் துவங்க அவைக்குள் வந்தான் சேகர், மருண்ட மான்போல். எள் விழ இடமில்லை; அவ்வளவு கூட்டம் ஓலக்கத்தில். கத்து கடல்போல ஒரே ஆரவாரம். வீட்டில் ஒருவர்கூடத் தங்கவில்லை. நகரமாந்தர் தம் வேலைகளை நிறுத்திவிட்டு அங்கே குழுமியிருந்தனர்.

இளங்கவி சேகர், உள்ளம் திடுக்கிட்டாலும் வெளிக்கு இன்முகத்துடனே தன் எதிரியான கவி புண்டரீகனுக்கு முகமன் கூறினான். செருக்குமிகுந்த அந்தத் தென்னாட்டுப் புலவரேறும் ஒருதரம் தலையை வணங்குவதுபோல் பாணி செய்து ஏளனமாகச் சிரித்துவிட்டுத் தன் பரிஜனங்களை நோக்கினான்.

சேகரின் கண் அந்தப்புரத்தின் பக்கமாக இருக்கும் பலகணியின்மேல் விழுந்தது. அங்கு நூற்றுக்கணக்கான கயல்விழிகள் கீழே இந்தக் கவிதைப் போட்டியைக் கவனிக்குமென்று எண்ணிக் கொண்டான். மனத்தைச் சிதறவிடாமல் நிரட்டித் தொலைவில் இருக்கும் தன் பாக்கிய தேவதையை ஒருதரம் ஸ்மரித்தான்: "இன்று நான் வெற்றி பெறுவேனாயின், ஹே தேவி! ஹே அபராஜிதா! எல்லாம் உன் கடாக்ஷத்தின் மகிமையால்தான். உன் பொன்னடியிலேயே என் பாமாலையைச் சூட்டுவேன்."

தூரியங்கள் விம்மின. முரசு இடிக்குரலுடன் முழங்கியது. வானைப் பிளக்கும் ஜயகோஷத்திற்கிடையே அரசன் நாள் ஓலக்கத்துள் நுழைந்தான். வெள்ளைக் கலை உடுத்து உதயநாராயணன் சரத்காலத்து வெண்முகில் போல் கம்பீரமாக அரசுகட்டிலில் அமர்ந்தான்.

கவி புண்டரீகன் ஸிம்ஹாஸனத்தை விநயத்துடன் அணுகும்போது மழை ஓய்ந்தாற்போல் சபையினரின் ஆரவாரம் அடங்கியது.

மார்பு அகலமாக விரிய, தூக்கிய தலையுடன் மலையென விளங்கும் புண்டரீகன் திக்கெட்டும் கிடுகிடுக்கும் குரல் எடுத்து உதய நாராயணனின் மெய்கீர்த்தியைப்பாடினான். தூண்கள் நிரம்பிய அந்தப் பெரிய மண்டபம் திரை கடல்போல் எதிரொலித்தது. இவ்வதிசயத்தைக் காண வந்தவர்களின் இதயம் படபடத்தது. சிலேடை, யமகம், திரிபு, அந்தாதி போன்ற அலங்காரங்களில் பல்வேறு சந்தங்களில் உதயநாராயணனுடைய வென்றி, கொடை, வாள், குதிரை, யானை, அவன் நாட்டுவளம், நகரின் சிறப்பு ஒன்று பாக்கி இராமல் புகழ்ந்து பாவினங்களை நின்ற இடத்திலேயே கவனம் செய்தான்.

மடை விண்டதுபோல் புண்டரீகனின் செய்யுள் பெருக்கு நின்றதும் சபை சற்று நேரம் பிரமித்துப்போய் நிச்சப்தத்தில் ஆழ்ந்திருந்தது. அவன் பாடிய பனுவலின் கம்பீரமான ஓசை அலைபோல் இன்னும் ஒவ்வொருவர் காதிலும் கும்மென்று கேட்டுக்கொண்டே இருந்தது. மயக்கம் தெளிந்து வந்திருந்த ரஸிக சிகாமணிகளும் பண்டிதர்களும் "பேஷ் பேஷ்" என்று ஒருமுகமாகப் புண்டரீக கவியை வியந்து பாராட்டினர்.

ஸிம்ஹாஸனத்திலிருந்து அரசன் தன் ஸபா கவியான சேகரை நோக்கினான். இளம்பாவலனும் தன் புரவலனை நன்றி துளிக்கும் கண்களால் நிமிர்ந்து நோக்கினான். நாணிக் கூசிக்கொண்டே எழுந்தான். உலகத்தவர் நம்புவதற்காக ராமபிரான் தன் அன்பிற்குரிய ஸீதையை மறு தடவை அக்கினிப் பிரவேசம் செய்யத் தூண்டியபொழுது அந்தப் பேதையின் கண்களில் என்ன வேதனை மூண்டதோ அதே துயரம் சேகருக்கும். சபைநடுவே மருண்டுபோய் நின்றான்.

மௌன பாஷையில் சேகரின் கண் அரசனை விளித்து "நான் உனக்கே உரியவன் இப்படி என்னை அம்பலமாக்கு

வது உன் திருவுள்ளமானால் அவ்வாறே செய். ஆனால்—" என்றதும் தரையை நோக்கியது.

வயப்புலிபோல் இறுமாந்து நின்றான் புண்டரீகன். பேதுற்ற ஒரு மானை ஒத்துச் சேகர் அசையாமல் இருந்தான். இளங்கவி அவன். காவிய ஸாதனையில் ஊடாடிய பழக்கம் இன்னும் முதிரவில்லை. பெண்களுக்குரிய நாணம் தலைகாட்டியது அவனிடம். அன்பே வடித்தெடுத்த வதனம். பீதியினால் வெளுத்து இருந்தன கன்னங்கள். ஒல்கி ஒசிந்த தேகம். உன்னதமான பாவங்கள் தீண்டிய மாத்திரம் துடிக்கும் மழலைவீணை.

சேகர் நிமிர்ந்து பாராமலே தனக்கு இயல்பான மணிக் குரலில் அலங்கார நகாசு இராத சின்னஞ் சிறிய ஒரு காப்புச் செய்யுளைப் பாடினான். நெஞ்சில் திடம் ஊற ஊற முகத்தைத் தூக்கினான். கண்ணுக்கு எட்டிய வரை விரியும் அந்த ஜனத்திரளைத் தாண்டி அவனுடைய நினைவு, அவன் இதயத்தில் ஒலித்த நம்பிக்கை யாவும் தொலைவில் எங்கோ வருங்காலத்தில் ஐக்கியமாயின. இனிமை பயக்கும் கண்டத்தில் நடுக்கம் சற்றுத் தொனிக்க, மெல்லிய கனல் பிழம்பென அவனுடைய புலமை வெளியே வந்தது. முதலில் அரசனுடைய சந்திர வம்சத்தையும் பாரம்பரியத்தையும் வர்ணித்தான். அப்புறம் அவன் நிகழ்த்திய சமர்கள், பயிற்றிய கொடை மடம், அவனது வேலின் சிறப்பு, வழங்கிய பரிசில்கள், அவன் நடத்திய வேள்விகள் ஒவ்வொரு விஷயத்தையும் அழகிய வழியில் திறம்படப் பாடி, அரசனுடைய புனித சரிதத்தை நிகழ் காலம் வரை கொண்டு வந்து நிறுத்தினான். தொன்மையான கீர்த்திகளில் நினைவைச் செலுத்திய சேகரின் கண் அந்தக் கீர்த்திக்கு உத்தராதிகாரியான உதயநாராயணன் பால் சென்றது. சபையிலிருந்த பிரஜைகள் உள்ளத்தில் பதியுமாறு ஓர் அற்புதக் காவியத்தைப் பாடி முடித்தான்.

அதன் இனிய சந்தம் மக்கள் ஒவ்வொருவர் இதயத்துள் ளும் இன்ப ஊறலைக் கிளறியது. அந்தப்புரத்தின் மறைவில் இரு சேல் விழிகளையும் பனிக்கச் செய்தது. ராஜலக்ஷ்மியான இளவரசியின் மலர்ப்பாதங்களை மொய்த் தது. அங்கிருந்து திரும்பி மன்னன் உள்ளத்தை உவகைக் காடாக்கியது; அவன் வீற்றிருந்த அரியணையைச் சூழ்ந்து சூழ்ந்து வலம் வந்தது. கடைசியில் சேகர், "அரசே! சொல் வறுமையால் நான் தோல்வியுறினும், உன்மீது எனக்குள்ள அன்பின் அருமையை யாரே உணர்வார்?" என்றான்.

தீவிரத்தினால் உடல் இலைபோல் நடுங்கச் சேகர் தன் இடத்தில் அமர்ந்தான். குரலில் கம்பலையும் கண்களில் நீரும் தோன்றச் சபையினர், "போற்றி போற்றி," "நாவலோ நாவல்" என்று வானகம் குலுங்கும்படி வாழ்த்தினர்.

மக்கள் குருட்டுப் பக்தியால் எழுப்பும் இந்த ஆரவா ரத்தைக் கண்டு இளக்காரமாகச் சிரித்தான் புண்டரீகன். மூரி நிமிர்ந்து எழுந்தான். காளைக்குரல் எடுத்து, "சொல்லைவிடச் சிறந்தது ஒன்றுண்டோ?" என்றதும் சபையிலிருந்த கலகலப்புச் சட்டென மறைந்தது.

பிரதிவாதி பயங்கரமான புண்டரீகன் தான் கற்ற கல்வியின் சரக்கூட்டிலிருந்து சொல்லம்புகளைத் தொடுத் தான். யாப்பை வளைத்துத் தன் சொற்பான்மையைக் காட்டினான். வேத சாஸ்திரங்களிலிருந்து வாக்கே பிர தானமென்பதற்கு மேற்கோள்களை எடுத்தான்: "சொல்லே உண்மை. நாதமே பிரம்மம். அதைவிட உயர்ந்ததொன் றில்லை. சதுர்முகம் படைத்த அயனாலும் அதை அளவிட முடியாது. ஆயிரம் நாப் படைத்த ஆதிசேஷனாலும் ஆகா தது. ஐந்து முகத்தோனான ஈசன் அதன் அடி நுனி அறி யாத குறையால் அல்லவோ ஆலின்கீழ் மௌனியாகி வீற் றிருக்கிறான்."

சாஸ்திரத்தில் தனக்குள்ள நுட்ப அறிவை வெளிப்படுத்தி, வாக்கே சிறப்பானதென்று நிலைநாட்ட சொல் சிற்பங்கள் நிரம்பிய ஒரு சித்தாந்தக் கோட்டையை நிருபித்தான். நாற்புறமும் பார்த்தான் வாதத்திற்குப் பிரதிவாதம் ஏதாவது வருமோ என்று. உம்மென்று ஒரு நாக்கூட அசையவில்லை. தெளிந்தவனாய்த் தன் பீடத்தில் உட்கார்ந்தான் புண்டரீகன். "அத்புதம்! அத்புதம்" என்று சபையினர் ஆர்த்தனர். அரசனும் பரவசமாகி, "புண்டரீகனின் கரைகடந்த புலமைக்கெதிரே இளைஞன் சேகரின் அறிவு எம்மாத்திரம்?" என்று நினைத்துக்கொண்டான். அன்று அத்துடன் வாதங்கள் ஓரளவுக்கு வந்து நின்றன. சபையும் கலைந்தது.

## 3

மறுநாள் சேகர் ஓர் அழகிய கோவைநூலை ரஸிக ஜனங்கள் முன்னிலையில் பாடினான். ராதை கிருஷ்ணன் இவர்கள் திருவிளையாடல்களைப்பற்றிய ஒப்பற்ற நூல்; அத்யாத்மப் பொருள் நிரம்பிய காவியம். பிருந்தாவனத்தில் மாயன் குழல் ஊதினான். கோபியருக்குத் தெரியாது அந்த இன்னிசை எங்கிருந்து வருவதென்று. ஒருவேளை மூங்கில் தொளையில் பிறக்கும் தென்றலின் மூச்சோ என்று திகைத்தனர். உதய வானத்தின் வரம்பில் நின்றுகொண்டு பேரின்பக் கலவிக்கு அழைப்பவன் யாரோ? குடதிசை வரையில் வீற்றுப் பிரிவினால் வாடும் ஒருவனுடைய வெய்துயிர்ப்போ என்று கலங்குவர். யமுனையின் ஒவ்வொரு அலைக் குரலிலும் அந்த இன்குழல் ஒலிக்கும். வானில் சிமிட்டும் ஒவ்வொரு தாரகைத் துளியும் அந்த மாயன் வேய்ங்குழலின் தொளையோ? ஒவ்வொரு புதலிலும் துறையிலும் மலரிலும் மண்ணிலும், புறத்திலும் அகத்திலும் அந்த வேணுகானம்

கேட்டது. அது என்ன சொல்லிற்றோ, அது யாருக்குத் தெரியும்? ஆன்மகோடிகளின் உள்ளம் ஏங்கின, குழல் ஊதுவோனைக் கட்டி அணைத்திட. எங்கே தேடியும் காணாது, பச்சை மெலியும் ஒளிமென் காந்தியும் கூடிய அந்தக் கூற்றுவன் பாசத்தில் கட்டுண்டு உயிர்வர்க்கங்கள் தவித்தன.

சபையை மறந்தான், அரசனை மறந்தான், தன்னையும் மறந்தான். வெற்றி தோல்வி, புகழ்ச்சி இகழ்ச்சி, தர்க்கம் விதர்க்கம் அனைத்தையும் மறந்தவனாய்த் தன் அந்தரங்கத்துள் துளித்த இன்ப ரஸத்தைப் பருகியவண்ணம் மாயன் குழலிசையைப் பாடினான் சேகர். சுடர் வடிவில் ஒரு தெய்வப்பாவை அவனது நெஞ்சகத்தில் நிரம்பி இருந்தாள். அவளுடைய காலின் தண்டையொலியே கவிதை பாட அவனுக்கு உணர்வைக் கொடுத்தது. இளம் பாவலன் மாயன் குழலிசையின் மகிமையைப் பாடி நிறுத்தியதும் மூர்ச்சையுற்றவன் போல் தன் இடத்தில் சாய்ந்தான். அச்சமயம் சொல்லுக்கு அடங்காத அமைதியும் களிப்பும் விரகத்தால் துடிக்கும் அந்தச் சபையினர் உள்ளத்தில் பரவின. இளங்கவியை எப்படிப் பாராட்டுவதென்று ஒன்றும் தோன்றாமல் சொக்கி நின்றனர்.

இந்தமாதிரி ஒரு பாவாவேசம் சற்றுத் தணிந்ததும் புண்டரீகன் ஸிம்ஹாஸனத்தின் அருகில் நின்றுகொண்டு அடுக்கான கேள்விகளை விடுத்தான். "ராதை யார்? கிருஷ்ணன் யார்?" என்று சொல்லிவிட்டுத் தன்னைச் சுற்றிலும் நோக்கினான். "இந்த ராதை யார்? கிருஷ்ணன் யார்?" என்று மீண்டும் எடுத்து விஸ்தாரமான வாக்கிய ஜாலவித்தைகளைக் காட்டிச் சேகரின் தத்துவத்தைக் கண்டித்தான்.

"ராதை, பிரணவம் ஓங்காரம்; கிருஷ்ணன், தியானம் யோகம்; பிருந்தாவனமோ, புருவ இடையில் இருக்கும் ஒரு

புள்ளி. இடை, பிங்கலை, நாபிக் கமலம், இதயத்தாமரை, பிரம்ம ரந்த்ரம் போன்ற யோக தத்துவங்களைப் புகுத்தி அனைவரையும் திகைப்புறச் செய்தான். ராதா என்பதில் ‘ரா’ என்ற எழுத்தின் கூடார்த்தத்தையும், ‘கிருஷ்ண’ என்ற பதத்தில் அடங்கியுள்ள அத்யாத்மிகக் கருத்தையும் விக்ரஹ பரிச்சேதம் செய்து தன் புலமையை வெளிப்படுத்தினான். ‘கிருஷ்ணன் வேள்வி; ராதை அக்னி ஸ்வரூபம்; கிருஷ்ணன் வேதம்; ராதை அதன் ஆறு அங்கங்கள்; கிருஷ்ணன் சித்தாந்தம், ராதை தர்க்கம்”—இவ்வாறெல்லாம் தன் வித்தையைப் புலப்படுத்தினான்.

வாதம் முடிந்ததும் புண்டரீகன் சேகரை நோக்கி ஏளனமாகச் சிரித்தான். அரசனோ புண்டரீகனுடைய சொல்வன்மையைக் கண்டு கட்டுண்டு நின்றான். சபையிலிருந்த வித்வான்களுக்கெல்லாம் தலை சுழன்றது. கண்ணனுடைய குழலிசை, கரிய யமுனையின் சலசலப்பு, பிரேமையின் மகிமாதிதம் யாவும் விழலுக்கிறைத்த மாதிரி ஆயின. மகா ஜனங்களின் மனம் பகட்டான விஷயங்களைக் கண்டே மயங்கிற்று. இளவேனிலின் பசுமையை அழித்து, யாரோ தரையை கோமயத்தைக் கொண்டு துடைத்து மெழுகியதுபோல் சேகரின் வாதம், அவன் பாடிய இன்னிசைப்பா யாவும் விருதாவாயின. அதற்குமேல் அவனுக்குப் பாட உத்ஸாஹம் கிளம்பவில்லை. காவியக் கனல் அவிந்தே போயிற்று. அத்துடன் அன்று சபை கலைந்தது.

## 4

அடுத்த நாள் புண்டரீகன், சித்திரப் பாவினங்களில் மாலைமாற்று, இரதபந்தம், பதுமபந்தம், எட்டாரச் சக்கரம், சக்கரபந்தம், ஒட்டியம், நீரோட்டியம், அக்கரச் சுதகம், அக்கரவர்த்தனை, வக்கிரவுத்தி, வினவுத்திரம்,

எழுகூற்றிருக்கை, சிலேடை, இணைமடக்கு, நிந்தாஸ்துதி போன்ற சாதுர்யங்களைப் பண்டிதர்கள் விலவிலக்க, பாமரர்கள் ஆச்சரியப்படக் காட்டினான்.

சேகர் புனைந்த பாவினம் யாவும் எளிய பொருள் ஏற்றிருந்தன. எல்லாருக்கும் தெரிந்த நித்திய லௌகீக துக்கங்களைப்பற்றிய விஷயங்களே. அவற்றுள் யாப்பு, அணியின் வேலைப்பாடு எதுவுமே இல்லை. பொது மக்களுக்கு அவை சுவை தருவனவாக இல்லை. சேகரின் காவிய லக்ஷ்மி வர்ண விசித்திரங்களைப் பூணாதவள். எளிய கருத்துக்களையே கொண்டு விளங்கினாள். கல்லாத மாந்தரும் கண்டுகொள்ளும் வகையில் வரைந்த சொல் ஓவியங்கள். ஆனால் புதுமையானதும் ஆடம்பரமானதையுந்தானே உலகத்தவர் விரும்புகிறார்கள்! முன்னாள் சேகர் விவரித்த விஷயத்தில் சிந்தனைக்குரிய உணவு மலிந்து இருந்தது. கடைசியில், புண்டரீகனின் பாண்டித்தியமே ஜனங்களுக்குப் பெரிதாகப் பட்டது. அதன் எதிரே சேகரின் கவிதை வெறும் குழந்தையின் மழலையாகவே தோற்றியது.

குளத்து நீரில் மீனொன்று வாலை விசிறும்பொழுது மெல்லிய அசைவு உண்டாகும். அந்த அதிர்ச்சியைத் தாமரை மலர் உணரும். அதேபோல் தன்னைச் சுற்றி இருக்கும் ஜனங்களின் மனோபாவங்களைச் சேகர் தன் இதயத்துள் ஓர்ந்தான்.

அன்று விவாதத்தின் கடைநாள். வெற்றி யாருக்கு என்பது தெரிந்துவிடும். அரசன் தன் ஆஸ்தான கவியை உருக்கமாக நோக்கினான். அந்தப் பார்வை, "இன்று நீ சும்மா இருந்தால் பலனில்லை. உன்னால் ஆனதைக் காட்ட வேண்டும்" என்று சொல்லுவதுபோல் இருந்தது.

சேகர் பீடத்தின் முன்னால் நின்றுகொண்டு இரண்டொரு வார்த்தையே பேசினான்: "வெள்ளைத் தாமரைப்

பூவிலிருப்பவளே! வீணை செய்யும் ஒலியில் உலவும் நாதரூபிணியே! என் நெஞ்சகம் படிந்த தாயே! உன் கல்பனைச் சோலையின் தண்ணிழலை மறந்து, நீ இந்தப் போர்க்களத்தை விரும்புவாயெனில், உன் சரண கமலங்களில் அமுதத்துளியை நச்சி வட்டமிடும் என்போல் ஏழைகளின் கதி என்னவாகும்?" முகத்தைச் சற்று மேலே தூக்கி இளகிய குரலில், "அதோ வெள்ளைக் கலைபூண்ட யாழிசை வல்லவள், அரசன் அந்தப்புரத்தின் சாலேக வாயிலருகே நிற்கிறாள். என் வேதனையைக் கண்டு கலங்குகிறாள்" என்றான்.

அச்சமயம், புண்டரீகன் கம்பீரமாக எழுந்து, "சேகர" என்ற பதத்தைச் சிதைத்து ஒவ்வோர் எழுத்திற்கும் விகடமான பொருளைச் சொல்லிக் கேலி செய்து சபையோரைச் சிரிக்கவைத்தான். "வாணி தாமரைக் காட்டில்தானே வசிப்பவள்? அந்த இடத்தில் 'கர'த்திற்கு (பன்றிக்கு) என்ன வேலை? ஸரஸ்வதியின் இருப்பிடம் புண்டரீகம் (தாமரை) அல்லவா?" என்றபடி திரித்துப் புதுப்புது அர்த்தங்களை வழங்கினான்.

சபையினர் விம்மிதம் கொண்டு கைகொட்டினர். எழுத்து வாசனை அறியாதவர்களும் இந்தக் குதூகலத்தில் கலந்து கொண்டனர்.

இதற்குச் சேகரிடமிருந்து ஏதாவது மறு மாற்றம் வருமோ என்று எதிர்பார்த்தான் அரசன். சுடுவதுபோல் சேகரை நோக்கினான். அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் இளம்பாவலன் தன் இடத்திலேயே கிடந்தான். அரசனால் பொறுக்க முடியவில்லை இந்த அவமானத்தை. சினந்து ஸிம்ஹாஸனத்திலிருந்து இறங்கி வந்தான். தன் கழுத்திலிருந்த விலையில்லா நித்திலக் கோவையைக் கழற்றிப் புண்டரீகனின் கண்டத்தில் இட்டான். ஜனங்கள் "தகும் தகும்" என்று ஆர்த்தனர்.

பலகணியின் பின்னால் நிற்கும் அரம்பையர் தம் காலிலுள்ள சதங்கையைக் குலுக்கினர், ஆர்வத்தால். இதைச் செவியுற்றதும் சேகர் தன் இடத்தை விட்டு எழுந்து மெல்ல மெல்லத் தலை சுழலமிடக் கடல் ஒத்த ஓலக்கத்திலிருந்து வெளியேறினான்.

## 5

நிலவொளி இல்லாத இரவு. கனத்த இருள் படர்ந்திருந்தது. இளந்தென்றல் பூவின் மணம் ஏந்தி, திறந்த சாளரங்கள் வழியாக நண்பனைப்போல் புகுந்து மக்களுக்கெல்லாம் மகிழ்வூட்டியது.

மரக்கோப்பிலிருந்து சுவடிகளை எடுத்துத் தன் எதிரே ஒன்றாக அடுக்கி வைத்துக்கொண்டிருந்தான் சேகர். தன் சொந்தக் காவியங்களைத் தேர்ந்து தனியாக ஓர் இடத்தில் குவித்தான்; அபூர்வமான மனநிலையில் உருவான கல்பனைக் கருவூலம். கண்களில் நீர்வடிய ஒருமுறை புரட்டிப் படித்தான். தொட்டு எத்தனையோ நாட்களாயின. மறந்தும் போயிற்று. இன்றோ அவை யாவும் ஸாரமற்றவையாகத் தோற்றின.

"வாழ்வு முழுவதும் நான் கண்டது இவ்வளவு தானா? வெறும் சொல், சந்தம், வேறொன்றுமில்லை." என்று வெய்துயிர்த்தான், அந்த அபூர்வ ரசனைகளில் மண்டிக் கிடந்த இன்பமோ, பேரிசையின் எதிரொலியோ, அழகோ இன்று சேகரின் உள்ளத்தில் படியவில்லை. உலகமே வெறிச்சென்றிருந்தது. நோயாளிக்கு எதுதான் ருசிக்கும்? எல்லாவற்றையும் உதறித் தள்ளினான்— அரசனுடைய நட்பு, நீடுபுகழ், ஆசை, காவியத்தின் மாயை யாவும்!

ஒவ்வோர் ஏடாகச் சுவடிகளைப் பிய்த்து நெருப்பில் போட்டான். சட்டென நகைச்சுவையை மூட்டும்

நினைவு ஒன்று வந்தது அவனுக்கு. தனக்குள் சிரித்துக் கொண்டான். "அரசர்கள் என்னென்னவோ யாகங்கள் அசுவமேதங்கள் செய்தார்களே! இந்தக் காவிய மேதத்திற்கு எதிரே அவை எம்மாத்திரம்?" என்று தான். மறுகணமே அந்த உவமை சரியானதன்றென அவனுக்குப் பட்டது. "அசுவ மேதத்தில் குதிரை யார் கைக்கும் சிக்காமல் வாகை சூடியே திரும்பும். நானோ, ஆற்றல் யாவும் முறிந்து போய் என் காவியங்களைத் தீக்கு ஆகுதி செய்கிறேன். இதை முன்னாலேயே செய்திருந்தால் நன்றாக இருந்திருக்கும்" என்று எண்ணினான்.

ஒவ்வொன்றாக அவன் எழுதிய பனுவல்கள் பொசுங்கிச் சாம்பராயின. காவியங்களைத் தின்று அக்கினி தேவன் திகுதிகுவென்று சுடர்விட்டான். அதை நோக்கிக் கவி, "உனக்கே ஸ்வாஹா, ஹே அக்கினியே! இத்தனை நாள் என் மனத்துள் நீ கனிந்து கொண்டிருந்தாய். மோகன காந்தி நிரம்பிய கனலே! நான் பொன்னாக இருந்தால், நீ தீண்டியவுடன் ஒளிமேனி படைத்திருப்பேன். ஆனால் இன்றோ நான் வெறுந் துரும்பு; ஏ கனலி ஆகவே உளம் வெந்து சாம்பராகிறேன்" என்றான்.

இரவு வெகு நேரமாயிற்று. அறையின் சாளரங்களை நன்றாகத் திறந்துவிட்டான் சேகர். தனக்குப் பிடித்த மலர்களை அன்று மாலைப் பொழுதிலேயே காவிலிருந்து கொய்து வைத்திருந்தான். முல்லை, மௌவல், குருக்கத்தி இவற்றைத் தன் பஞ்சணைமீது தூவி வீடெங்கும் விளக்கேற்றினான். அப்புறம் தேனுடன் விஷ மூலிகையின் சாற்றைக் கலந்து முகக்கடுப்பின்றி உட்கொண்டான். மெல்லத் தன் அமளிமேல் வந்து படுத்தான். கண்ணிதழ்கள் குவிந்தன. கலீரென நூபுரத்தின் ஒலி கேட்டது. யாருடைய கூந்தலிலிருந்தோ மென்மணம் கும்மென்று அறையினுள் பரவியது.

செருகலிடும் கண்களை விரித்துக் கவி, "தேவி, கடைசியிலாவது மனம் இளகியதா உனக்கு? இத்தனை நாட்களுக்குப் பிறகு இன்றுதானா உன் திவ்விய வடிவை நான் காணவேண்டும்?" என்று பிதற்றினான்.

"இனியனே, இதோ வந்துவிட்டேன்" என்றது ஒரு மதுரமான குரல்.

சேகர் திடுக்கிட்டு எழுந்து கண்கள் மலர நோக்கினான். பஞ்சணைக்கு முன்னால் ஓர் அழகிய பெண் வடிவம் நின்றது.

மறலியின் நிழல் கவிந்த கண்களில் நீர்த்திரை இட்டது. கவி சேகருக்கு எதுவும் தெளிவாகப் புலப்படவில்லை. கொஞ்சங் கொஞ்சமாக வெளிக் காட்சிகள் மங்கின. இதுவரைத் தன் இதயத்துள் உலவி வந்த ஒரு நிழல் உருவு மோஹினி இன்று தன் இறுதிநாள் அணுகும்பொழுது வெளியே வருகிறாளோ வென்று கவிக்குத் தோன்றியது. அந்த மாயா ரூபிணியின்மீது அவன் கண் நிலைத்தது.

"நான் இளவரசி அபராஜிதா. உங்களுக்குத் தெரியவில்லையா?" என்றாள் அவள்.

மரண வலியைத் தாங்கிக்கொண்டு கவி படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தான்.

"உமக்குரிய மதிப்பை அரசன் உணரவில்லை. வெற்றி உமக்குத்தான். இன்று, அதைத் தெரிவிக்கவே நான் கையில் ஜயமாலையுடன் வந்திருக்கிறேன்" என்றதும் அபராஜிதா தானே தொடுத்த அந்த புஷ்பஹாரத்தைக் கழுத்திலிருந்து எடுத்து கவியின் கண்டத்தில் சூட்டினாள். இளங்கவியின் உயிரும் கடைசித் துளி இன்பத்தைப் பருகியதும் மெல்லப் பிரிந்தது.

# அசட்டு ராமகாளுயி

குருசரணனுக்குக் கடைசி சுவாசம் வாங்கிக்கொண் டிருக்கும்பொழுது, அவனுடைய இரண்டாந்தாரம் பின் கட்டில் சீட்டாடிக் கொண்டிருந்தாள் என்று யாராவது சொன்னால் அது வீண் பழி. தினையளவு விஷயத்தைப் பனையளவாக்கிக் கயிறு திரிப்பவர்களின் வேலை. வாஸ்த வத்தில், அவள் ஒரு காலை மடக்கி உட்கார்ந்து, மற்றொரு முழங்காலை மோவாய்வரை தூக்கி வைத்துக்கொண்டு பச்சை மிளகாயும் முருங்கைக்காய் குழம்புடனும் பழைய தூ சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். ஆள் வந்து கூப்பிட்ட பொழுது, மென்று போட்ட சக்கைகளையும் வெற்றுத் தட்டையும் எறிந்துவிட்டு, "ரெண்டு வாய் சாதம் சாப் பிடக்கூட ஒழிவில்லையே, இந்தப் பாழும் வீட்டிலே." என்று விடுவிடுப்புடன் சொன்னாள்.

இந்தப் பக்கம் டாக்டர் போனதும், குருசரணனின் தம்பி ராமகாளுயி நோயாளியின் பக்கத்தில் உட்கார்ந்து, "ஏதாவது உயில் எழுத வேண்டுமென்றால் எழுதிவிடேன், அண்ணு" என்றான். குருசரணன் பலஹீனமான குரலில், "நான் சொல்கிறேன். நீயே எழுது" என்றான். ராம காளுயி பேனு, காகிதம் எடுத்துக்கொண்டு தயாராக வந்தான். குருசரணன் சொல்லிக்கொண்டு போனுன்: "என் ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் எல்லாம் என் தர்ம பத்தினி ஸ்ரீமதி வரதாஸுந்தரிக்கு எழுதி வைக்கிறேன்." —ராமகாளுயி எழுதினுன்—ஆனல் பேனு ஓடவில்லை. —தன்னுடைய ஒரே பிள்ளையான நவத்வீபனுக்குப் பிள்ளைப் பேறில்லாத பெரியப்பாவின்சொத்து கிடைக்கு மென்று. அவன் நம்பியிருந்தான். இரு சகோதரர்களும்

தனித்தனி விடுதிகளில் இருந்தாலும், இந்த நம்பிக் கையுடன் தான் நவத்வீபனின் தாய் அவனை எந்த உத்தி யோகத்திற்கும் விடவில்லை. இள வயசிலேயே விவாகத் தையும் முடித்துவிட்டாள். எவ்வளவோ தடைகள் மூண்டும் கடைசியில் கலகக்காரர்கள் வாயில் மண் விழுந்தது. அந்தக் கல்யாணம் வீண் போகவில்லை.

இருந்தும் ராமகானுயி எழுதினுன். கையெழுத்திட அண்ணுவின் கையில் பேனுவைக் கொடுத்தான். குரு சரணன் விரல்கள் நடுங்கிடக் கையெழுத்திட்டது கோணல் மாணலான கீற்ரு, அல்லது அவன் பெயரா என்று புரிய வில்லை.

பழையது சாப்பிட்டுவிட்டு ஸம்ஸாரம் உள்ளே வந்தபொழுது குருசரணனுக்கு நாக்குத் இழுத்துக் கொண்டு போய்விட்டது. வீட்டுக்காரி அழ ஆரம்பித் தாள். சொத்தின்மேல் ஆசை வைத்து ஏமாந்து போன வர்கள், "மாய்மாலம், வெளிவேஷம்" என்று எதை வேண்டுமானுலும் சொல்லிக் கொள்ளட்டுமே.

உயிலின் விஷயம் தெரிந்ததும் நவத்வீபனின் தாய் ஓடிவந்து பெரிய கலவரம் செய்தாள்: "சாகும்போது இப்படித்தான் புத்தி மாறிப்போகும். கூடப்பிறந்த தம் பிக்கு இப்பேர்ப்பட்ட தங்கமான பிள்ளை இருக்கச்சே..."

ராமகானுயிக்குத் தன் மனைவியிடத்தில் அதிக மரி யாதை உண்டு. அதாவது, அவளிடத்தில் நடுக்கம் என்று தான் அர்த்தம். அப்படியும் அவனுலேயும் பொறுக்க முடியவில்லை; எழுந்து வந்தான். "உனக்கு இன்னும் புத்தி கெடவில்லையே! பின் ஏன் இப்படி எல்லாம் செய் கிருய்? அண்ணுவோ போய்விட்டார். நான் இருக் கிறேன். நீ சொல்ல வேண்டியதை எல்லாம் என்னிடம் சொல். இப்போது தகுந்த சமயமல்ல" என்ருன்.

நவத்வீபனுக்கு விஷயம் தெரிந்து அவன் வருவதற்குள் அவனுடைய பெரியப்பாவின் உயிர் நீங்கிவிட்டது. அவன் பிணத்தை பிரட்டிஞன். "பார்க்கலாம். உனக்கு யார் கொள்ளி போடுவார்கள்! உன் வாய்க்குப் பிண்டம் போட்டேனே என் பேர் நவத்வீபன் அல்ல" என்ருன். மாண்டொழிந்த குருசரணன் இதைச் சட்டை செய்யவில்லை. அவன் 'டப்' துரையின் மாணவன். சாஸ்திரப்படி எதைச் சாப்பிடக்கூடாது என்று இருக்கிறதோ, அதைத் திருப்தியுடன் உண்பான். ஜனங்கள் அவனைக் கிறிஸ்தவன் என்ருல், "ராம, ராம! நான் கிறிஸ்தவன் என்ருல் மாட்டு மாமிசம் தின்ன வேண்டுமே!" என்று நாக்கைக் கடித்துக் கொள்வான். உயிருடன் இருக்கும் போதே இப்படி. செத்தபின் பிண்டம் கிடைக்காது என்று கவலைப்படப் போவதென்னவோ இல்லை. ஆனல் இப்போது இருக்கிற நிலைமையில் இதைத்தவிரப் பழிக்குப் பழி வாங்க வேறு வழி ஒன்றுமில்லை. அவன் மேலுலகம் போனலும் ஒருவாய்ப் பிண்டத்திற்குத் தாளம் போடுவான் என்று எண்ணி நவத்வீபன் ஆறுதல் அடைந்தான். இந்த லோகத்தில் இருக்கிறவரையில் பெரியப்பாவின் சொத்து இராது போனலும் வயிறு வளர்த்துவிட முடியும். ஆனல் பெரியப்பா போகும் மறு உலகத்தில் பிச்சை எடுத்தால் பிண்டம் கிடைக்காது. யாராவது போட்டால்தான் போய்ச் சேரும். பிழைத்திருக்க எவ்வளவு செளகரியங்கள் இருந்தால்தான் என்ன!

ராமகாஞபி வரதாஸுந்தரியிடம் போய், "மன்னி, அண்ணு உனக்குத் தன் சொத்தை எல்லாம் கொடுத்துவிட்டார். இதோ அவர் உயில். இரும்புப் பெட்டியில் பத்திரமாக வைத்துக்கொள்" என்ருன்.

அவள் அப்போது விதவிதமான சந்தங்களில் உரத்த குரலில் ஒப்பாரி வைத்துக்கொண்டிருந்தாள். இரண்

டொரு வேலைக்காரிகளும் நடுநடுவே பிலாக்கணம் பாடி நடுநிசியில் ஊராரின் தூக்கத்தைக் கலைத்தார்கள். நடுவில் இந்தக் காகிதம் ஒன்று குறுக்கிடவே அழுகையின் வேகமும் குறைந்தது. சோகமும் முன்போல் இராமல் வேறுவிதமாகியது. காவிய உருவில் அமைந்த ஒப்பாரி பின்கண்டவிதம் உரைநடையாக வெளிவந்தது :—

"ஐயோ! எனக்கு இந்தக் கதி வந்ததே! நான் என்ன செய்வது? யார் கையெழுத்து? உங்களுடையதா?—அவ்வளவு ஆதரவுடன் என்னை இனிமேல் யார் பார்த்துக் கொள்ளுவார்கள்?—என்னை யார் தலைநிமிர்ந்து பார்ப்பார்கள்?—கொஞ்சம் கம்மென்றிருங்கள்—விஷயத்தைக் கேட்கிறேன்—கூச்சல் போடாதீர்கள். நான் ஏன் முன்னாலேயே போய்விடவில்லை?—ஏன் பிழைத்தேன்?—"

ராமகானாயி பெருமூச்சுடன், "ஊம்—நம் தலையெழுத்து" என்றான்.

வீட்டுக்குத் திரும்பியதும் நவத்வீபனின் தாய் அவனைப் பிடித்துக் கொண்டாள். நிறைபாரத்துடன் உளையில் இறங்கிய வண்டியை இழுக்கும் எருது, வண்டிக்காரனின் அடிகளை எல்லாம் வாங்கிக்கொண்டு அசையமுடியாமல் நிற்பதுபோல ராமகானாயி வெகுநேரம் கம்மென்று எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டான். கடைசியில் பரிதாபமான குரலில், "என்மேல் என்ன தப்பு? நானென்னவோ அண்ணா அல்ல" என்றான்.

நவத்வீபனின் தாய் சீறி விழுந்தாள்: "ஊம்—ரொம்ப ஸாது. ஒன்றுமே தெரியாது. அண்ணா எழுது என்றார்—எழுதிவிட்டீர்கள்—நீங்கள் எல்லாருமே இப்படித்தான். சமயத்தில் நீங்களும் இந்தமாதிரி ஒன்று செய்து வைப்பீர்கள். நான் செத்ததுமே யாராவது ராக்ஷஸியைக் கொண்டுவந்து வீட்டில் வைத்துக் கொள்வீர்கள். என் தங்கம் நவத்வீபனுக்கு நடுத் தெருவைக்

காட்டுவீர்கள். ஆனுல் அதற்காக யோசிக்க வேண்டாம் நான் சீக்கிரத்தில் சாகமாட்டேன்."

ராமகாணுயி இனிமேல் செய்யப்போகும் அட்டூழியங் களை நினைக்க நினைக்க வீட்டுக்காரிக்குக் கவலை இன்னும் அதிகமாயிற்று. இந்த மாதிரி அவள் கவலைப்படுவதைத் தடுக்கப் போனுலோ போக்கு விபரீதமாகி விடுமென்று ராமகாணுயிக்குத் தெரியும். ஆகவே குற்றவாளி போல கம்மென்று உட்கார்ந்திருந்தான். தன் பொன்னுன நவத்வீ பனுக்குச் சொத்தைக் கொடுக்காமல் அவள் சொல்லுவது போல் தனக்கு வரப்போகும் இரண்டாந் தாரத்துக்கு எழுதி வைத்துவிட்டுச் சாக இருக்கும் குற்றத்தை ஒப்புக் கொள்ளாமல் வேறு வழி என்ன இருக்கிறது?

இதற்குள் நவத்வீபன் புத்திசாலிகளான சில நண்பர் களுடன் ஆலோசனை செய்து அம்மாவிடம் வந்து சொன் ஞன்: "நீ கவலைப்படாதே. அந்தச் சொத்து என் னுடையதுதான். அப்பாவை இங்கிருந்து சில நாட்களுக்குக் கிளப்பிவிட வேண்டும். அவர் இருந்தால் எல்லாம் குட்டிச் சுவராகி விடும்" என்ருன். நவத்வீபனின் தந்தைக்கு மூளை இல்லை என்று அவன் தாய்க்கு நன்ருகத் தெரியும். ஆகவே அவன் சொன்னது சரியென்றே அவளுக்குப் பட்டது. கடைசியில் அம்மா தூண்டவே, அனுவசியமாகக் காரியங்களைக் கெடுக்கும் அப்பா ஏதோ சாக்கின்பேரில் சில நாட்களுக்குக் காசியில் அடைக்கலம் புகுந்தார்.

சில தினங்களுக்குள் வரதாஸுந்தரியும், நவத்வீ பனும் கள்ள உயில் வைத்திருப்பதாக ஒருவர்மேல் ஒருவர் குற்றஞ் சாட்டிக்கொண்டு கோர்ட்டுக்கு வந்துநின்ருர்கள். நவத்வீபன் பெயருக்கு எழுதிய உயிலில் குருசரணனின் கையெழுத்துத் தெளிவாக இருந்தது. உயிலுக்கு இரண் டொரு அநாமத்து ஸாக்ஷிகளும் கிடைத்துவிட்டார்கள்.

வரதாஸுந்தரியின் பக்கம் ராமகானுயி ஒருவன்தான் ஸாக்ஷி. கையெழுத்தும் யாருக்கும் புரியவில்லை. அவள் வீட்டில் வளர்ந்த அம்மான்சேய்ஒருவன் இருந்தான். "அக்கா, நீ கவலைப்படாதே. நான் ஸாக்ஷி சொல்லு கிறேன். இன்னும் ஸாக்ஷிகளும் சேர்த்து வைக்கிறேன்" என்றான்.

விஷயம் நன்றாகப் பழுத்து வரும்போது நவத்வீபனின் தாய் ராமகானுயிக்குச் சொல்லி அனுப்பினாள். அந்தப் பெரிய மனுஷ்யன், பையையும் குடையையும் கையில் மாட்டிக்கொண்டு சமயத்தில் வந்துசேர்ந்தான். கை கூப்பிச் சிரிப்புடன், "அடிமை வந்தேன். மகாராணியின் உத்தரவு என்னவோ?" என்றான்.

வீட்டுக்காரி தலையசைத்து, "போதும் போதும். ஏளனம் செய்ய வேண்டாம். இத்தனை நாள் காசியில் ஜம்மென்று இருந்தாச்சு. ஒருநாளாவது என் நினைவு வந்ததா?" என்றாள்.

இப்படி இரு சாராரும் வெகுநேரம் ஒருவர்மேல் ஒருவர் செல்லமாகக் குறைகூறிக் கொண்டனர். கடைசி யில் குறைகூறுவது ஆளைவிட்டு ஜாதியில் வந்துமுடிந்தது. "புருஷனுக்குப் பெண்டாட்டிமேல் உள்ள ஆசையும், துருக் கனுக்குக் கோழிமேல் இருக்கும் ஆசையும் ஒன்றுதான்" என்றாள் நவத்வீபனின் தாய். ராமகானுயி, "பெண் களுக்கு நாக்கில் தேன், உள்ளத்தில் அவ்வளவும் விஷம்" என்றான். வாய் தந்த அந்த இனிமை ராமகானுயிக்கு எப் போது கிடைத்ததோ, தெரியாது.

இதற்குள் ஒருநாள் திடீரென்று ராமகானுயிக்கு ஸாக்ஷி ஸம்மன்ஸ் ஒன்று கோர்ட்டிலிருந்து வந்தது. எதுவும் தோன்றாமல், அதன் உள் அர்த்தம் என்ன என்று யோசிக்கும்பொழுது, அவன் ஸம்ஸாரம் வந்து ஓலம்

வைத்தாள் "அந்தத் துக்கிரி—கள்ளி—என் பிள்ளைக்கு அவன் பெரியப்பா சொத்து வராமல் செய்வது போதா தென்று அவனை ஜெயிலுக்கு அனுப்பவும் பார்க்கிருளே!" என்ருள்.

கடைசியில் கொஞ்சங்கொஞ்சமாக விஷயம் எல்லாம் தெரிந்தது. ராமகானுயியின் கண்கள் ஒரே நிலையில் இருந் தன. உரத்த குரலில், "இதென்ன காரியம்?" என்ருன். வீட்டுக்காரி எடுத்துக் கொண்டாள், தன் சுயரூபத்தை. "ஏன், என்ன தப்புச் செய்தான் நவத்வீபன்? பெரியப்பா வின் சொத்து அவனுக்கு வராதா? ஒரு வார்த்தையில் விட்டுவிடலாமா?" என்ருள்.

எங்கிருந்தோ ஓர் எரிமூஞ்சி, புருஷனின் உயிருக்கு உலையாக வந்த ஒரு கள்ளி, அஷ்டதரித்திரம் சொத்துக்கு உரிமையாக வந்து உட்காருவது, நல்ல குலத்தில் வந்த எந்தப் பிள்ளைக்குத்தான் பொறுக்கும்? சாகுங் காலத்தில் சிறுக்கியின் பேச்சைக் கேட்டுப் பெரியப்பாவின் அறிவு பிசகியது. தம்பியின் பிள்ளை அப் பிசகைத் தன் கையால் திருத்துவது தவருன காரியமா?

தன் மனைவியும் பிள்ளையுமாகச் சேர்ந்து மிரட்டி, அதட்டி, அழுது பலவாருக அவனைத் தொந்தரை செய்த பொழுது ராமகானுயி ஒன்றும் தோன்ருமல் தலையில் அடித்துக்கொண்டான். ஊண் உறக்கத்தை மறந்தான். ஜலத்தைக்கூடத் தொடவில்லை.

இவ்வாருக இரண்டு நாட்கள் உணவின்றியே கழிந் தன. விசாரணை நாள் குறுகியது. இதற்குள் நவத்வீபன் வரதாஸுந்தரியின் அம்மான்சேயைப் பயமுறுத்தி, ஆசை காட்டித் தன்வசம் செய்துகொண்டதில், அவன் அநா யாஸமாக நவத்வீபனின் பக்கம் ஸாக்ஷி சொன்னுன். வெற்றி மகள், வரதாஸுந்தரியை விட்டு மறுபக்கம்

போக இருக்கும்பொழுது ராமகானுயிக்கு அழைப்பு வந்தது.

உணவின்றி, இறக்குந் தறுவாயில் நா உலர முகம் வாடி, கிழவன் விரல்கள் நடுங்க ஸாக்ஷிக்கூண்டைப் பிடித்துக் கொண்டான். திறமைவாய்ந்த பாரிஸ்டர் தந்திரமாக விஷயத்தை வரவழைக்கக் குறுக்குக் கேள்வி போட்டார். சுற்றி வளைத்துக்கொண்டு உண்மையான விஷயத்தைக் கிளறினார்.

ராமகானுயி நீதிபதியைக் குறித்து, "துரையே, நான் கிழவன்; பலமற்றவன். அதிகம் பேச எனக்குத் திறமை இல்லை. நான் சொல்ல வேண்டியதைச் சுருக்கமாகவே சொல்கிறேன். என் அண்ணா, காலம் சென்ற குருசரண் சக்ரவர்த்தி, மரணத் தறுவாயில் தம்சொத்தையெல்லாம் தம் மனைவி வரதாஸுந்தரிக்கு எழுதிவைத்தார். அந்த உயிலை நான் என் கையால் எழுதினேன். அண்ணா அவர் கையால் கையெழுத்துப் போட்டார். என் பிள்ளை நவத்வீபசந்திரன் தாக்கல் செய்தது கள்ள உயில்" என்றதும் தாங்காமல் மூர்ச்சையுற்று விழுந்தான்.

பாரிஸ்டர் ஸந்தோஷமாகத் தம் பக்கத்திலிருந்த அட்டர்னியை நோக்கி, "பை ஜோவ்! ஆளை எப்படி மடக்கிவிட்டேன்! " என்றார்.

அம்மான்சேய் அக்காவிடம் ஓடிப் போய், "கிழம் எல்லாவற்றையும் நாசமடித்தது—என் ஸாக்ஷியமாக்கும் கேஸ் ஜயித்தது" என்றான்.

"நிச்சயமாகவா!—ஆமாம். ஆஸாமி இப்படி என்று யார் கண்டார்கள்? நான் நினைத்தேன், நல்லவன் தானாக்கும் என்று" என்றாள் அவள்.

சிறைக்குச் சென்ற நவத்வீபனுடைய நண்பர்கள், இந்தக் காரியத்தைக் கிழவன் பயந்துதான் செய்திருக்க

வேண்டும் என்று முடிவுகட்டினர். ஸாக்ஷிக் கூட்டினுள் கிழவனின் புத்தி தடுமாறியது. இவனைப் போன்ற அசடு ஊரெல்லாம் தேடினுல்கூட அகப்பட மாட்டான்.

வீட்டுக்கு வந்ததும் ராமகாணுயிக்கு நல்ல சன்னி ஜுரம் கண்டது. தன் பிள்ளையின் பெயரைப் பிதற்றிய வாறு, காரியத்தை நாசமடித்த அந்த உதவியற்ற தகப்பன் உலகைவிட்டு மறைந்தான். உறவினருள் சிலர், "இன்னும் கொஞ்ச நாட்களுக்கு முன்னுலேயே போயிருக் கக்கூடாதா?" என்றுர்கள். அவர்கள் பெயரைச் சொல்ல எனக்கு இஷ்டமில்லை.

# சீட்டு ராஜ்யம்

## 1

நெடுங்கடல் நடுவே ஒரு தீவு. சீட்டு ராஜா, ராணி ஜாக், ஏஸ் இவர்கள் வசிக்கும் இடம். இரண்டு மூன்றி லிருந்து ஒன்பது பத்தாம் பந்தியார் வரை இங்கு வாழ்ந்து இருந்தனர். ஆனால் அவர்களெல்லாம் உயர் குலத்தோர் அல்ல.

அந்தச் சீட்டு நாட்டில், ராஜா, ஜாக்கி, ஏஸ் இவர்கள் மூவருமே முதல் வர்ணத்தார். ஒன்பது பத்தாம் பந்தி யினர், இவர்களுக்குச் சமமாக ஒரே ஆசனத்தில் உட்காரத் தகுதியற்றவர்கள். கைகட்டி வாய் பொத்தி நிற்க வேண்டியதே கீழ்த்தரத்தாரின் தலை எழுத்து.

ஆனால் அந்த ராஜ்யத்தில் கலகமென்பதே இல்லை. நாட்டு நடப்பு யாவும் ஒழுங்காகவே செல்லும். அவரவர் களுக்குரிய மதிப்பும் கௌரவமும் வெகு நாட்களுக்கு முன்னரே பட்டாங்கில் வகுத்திருந்தனர். உற்ற காலத்தில் அளவு பிரகாரம் தத்தமக்குரிய வேலைகளைச் செய்து வந்தனர், எல்லா வர்ணத்தாரும். சீட்டு ராஜ்யத்தில் இந்தப் பழக்க வழக்கங்கள் பரம்பரையாகவும், வாழை அடி வாழையாகவும் வந்துகொண்டிருந்தன.

இவர்கள் சாதிப்பது ஒரு பெரிய காரியமா என்ன வென்று வெளியிலிருந்து பார்ப்பவர்கள் நினைக்கலாம். இவர்களது நடைமுறையைப் புரிந்துகொள்வது கடினம். எல்லாம் ஒரு வேடிக்கை, ஓர் ஆட்டம்போல் தோன்றும். நடை உடை பாவனை யாவும் ஒரு கட்டுப்பாட்டிற்கு

அடங்கியவை. மறைவிலிருந்து ஒரு கை இந்த விசித்திர மக்களை ஸூத்ரப் பாவைகளைப்போல் ஆட்டி வைக்கும்.

இவர்கள் முகத்தில் பொலிவோ, உணர்வோ ஒரு மாறுதலும் தென்படுவதில்லை. என்றென்றும் ஒரேவித பாவந்தான் அச்சடித்திருக்கும். படத்தில் நாம் காணும் கண் சிமிட்டாத பொம்மைகளிடம் தோன்றும் ஒரு பாவம். மாந்தாதா காலம் தொடங்கி இவர்கள் அணியும் உடையோ நகையோ இதுவரை ஒருவித மாறுதலுமின்றி நிலைத்திருக்கின்றது.

எதைப்பற்றியும் சிந்தனை செய்யவேண்டிய அவசியமோ தலைவலியோ இவர்களுக்கு இல்லை. உயிரற்றவர்கள் போலவே சந்தடி சச்சரவு இராமல் திரிவார்கள். இவர்கள் தரைமீது சாயும்பொழுதும் ஓசை இராது. மல்லாந்து இருக்கையில் ஆகாயத்தை நோக்கி விழிப்பார்கள்.

ஆசையோ, பாசமோ, அச்சமோ, புதுவழியில் செல்ல ஆர்வமோ இவர்களுக்குத் துளியேனும் இல்லை. சிரிப்பு இல்லை, அழுகை இல்லை. ஒருவர் மீது ஒருவருக்கு அவநம்பிக்கை இல்லை. பகையும் இல்லை. கூட்டுப் பறவை சிறகை அடித்துக்கொள்கிற மாதிரி, இந்தப் பொம்மை மாந்தர் உள்ளத்தில் எந்தப் புள்ளும் விடுதலை பெற மூச்சு விடுவதாகத் தெரியவில்லை. ஆனால் ஒரு காலத்தில் இந்தக் கூட்டினுள்ளும் ஜீவன் துடித்துக் கொண்டிருந்தது. அப்பொழுது அதன் அசைவினால் கூடே குலுங்கிற்று. சிறையிலிருந்து வெளியேறச் சிறகொலியும் குரலிசையும் கேட்டன. காட்டில் வாழ்ந்திருந்த நினைவும், வானில் உலவிய கனவும் அடிக்கடி வந்து போகும். இன்றோ கூட்டின் குறுகிய இடமும் அதன் ஒழுங்கான கம்பி வேலியும் இவர்களுக்குப் பிடித்திருந்தன. இவர்கள் உள்ளத்தை விட்டுச் சுதந்தரப்புள்

பறந்துபோய் எக்காலமாயிற்ருே; இல்லே, அது மரித்தே ஒழிந்ததோ, அல்லது உயிரில்லாமல் உடல் மட்டும் கிடக்கிறதோ யார் அறிவார்? இந்த நாடெங்கும் வியப்பைத் தரும் மோனம்–அமைதி—சூழ்ந்திருந்தது. ஒரே மாதிரியான போக்கு, எக்காலமும். வீடு வெளி, வழி துறை எங்கும் ஒரே நியமம். பேச்சில்லே மூச்சில்லே; போட்டி இல்லே பொல்லாங்கு இல்லே; அவாவுமில்லே அவதூறுமில்லே. வெட்டிப் பொழுது போக்குவதும் படுத்துறங்குவதுமே இவர்கள் செய்யும் வேலே.

ஓய்வின்றி ஒரே குரலில் முழங்கும் கடல் கரையைத் தன் நுரை மென்கையால் வருடி அந்த தீவகத்து மாந்தரைத் தாலாட்டித் தூங்கப்பண்ணும். மாப்பறவையின் சிறகுபோல் வானம் இவர்களேக் கட்டியணேத்து திக்கெட்டும் அமைதியைப் பரப்பும். வானத்திற்கு அப்பால் நீலக்கீற்றெனக் காணுததோர் புது உலகு எட்டிப் பார்க்கும். அங்கே நிகழும் கள்ளமும் கரவும், பகையும் பாபமும் ஸமுத்திரத்தைக் கடந்து இவர்கள் நாட்டிற்கு வரச் சாத்தியமில்லே.

## 2

அக்கரையிலுள்ள அந்தப் புதிய தேசத்தில் இளவரசன் ஒருவன் இருந்தான். அந்நாட்டரசனின் பட்ட மகிஷி மகன். அரசன் வெறுக்கவே இளவரசன் நாட்டைத் துறந்து தன் அன்னேயுடன் கடற்கரையில் குடில் அமைத்துக்கொண்டு இளம்பிராயம் தொட்டு வசிக்கலாஞன்.

ஏகாந்தமான அந்தக் கடற்கரை மேட்டில் சாய்ந்து நீலக்கடலிடைக் கண்ணேச் செலுத்தி மனக்கோட்டைக் கட்டிக்கொண்டிருந்தான். கல்பனே வலேயை வீசி உலகத்து ரகஸியங்களே தன்னிடம் இழுத்துக்கொள்ளப் பார்த்தான்.

அவன் மனம் ஆழ்கடலினைத் தாண்டி, வானம் வளைந்து மறையும் இடத்திற்குத் தாவிப் புதுமையைக் காண அலைந்தது. பாம்பின் முடிமீது உள்ள மாணிக்கம் எங்கே, நினைத்த இடத்திற்கு எடுத்துச் செல்லும் யந்திரப் பறவை எங்கே, ஸ்வர்க்க லோகத்தில் இருக்கும் பாரிஜாத மலர் அகப்படுமோ, கேட்டதைத் தரும் வெள்ளி மாயக்கோல் அகப்படுமோ, ஏழ்கடலுக்கு அப்பால் அரக்கர் மாளிகையில் இன்துயிலில் ஆழ்ந்திருக்கும் அரசிளங்குமரியை எழுப்பும் அதிசய மந்திரத்தை யார் சொல்லுவாரென்றெல்லாம் அவன் உள்ளம் தேடியது.

அரசகுமாரன் பள்ளிக்குப் போவான், படிக்க. அங்கே பாடங்கள் முடிந்ததும் அவன் நண்பனை செட்டி மகன் பல நாடுகளைப்பற்றி விசித்திரக் கதைகள் சொல்லுவான். அவ்வூர்க் கொத்தவாலின் பிள்ளையும் கூடப் படிப்பவன். ராஜா மந்திரி, தாள வேதாளக் கதையெல்லாம் எடுப்பான்.

சோ வென்று மழை இறங்கும். காரிருள் உலகைக் கவிந்துகொள்ளும். அரசகுமாரன் வீட்டில் தங்கிச் சாளரத்தின் மூலம் கொந்தளிக்கும் கடலைச் சுட்டி. தொலைவிலுள்ள தேசங்களைப் பற்றிக் கதை ஏதாவது சொல்லென்று தன் தாயைக் கேட்பான். இள வயதில் தான் கேட்ட ஓர் அபூர்வமான நாட்டைப் பற்றி அவள் வெகு நேரம் சொல்லுவாள். நடுநடுவே மழையின் ஒலியும் கதையின் ஸ்வாரஸ்யமும் கலந்து இளவரசனின் உள்ளத்தை மயக்கிவிடும். வெளியுலகைக் காண அவன் உள்ளம் ஏங்கும். இருண்ட கடலைத் துருவிக்கொண்டு அவன் கண்கள் ஓடும்.

ஒரு நாள் வணிக மகன், இளவரசனிடம் வந்து, "என் படிப்பு முடிந்து விட்டது, வெளியுலகத்தை ஒரு தரம் சுற்றிப்பார்க்க நான் புறப்படுவதாயிருக்கிறேன். உன்னிடம் விடை பெற்றுக் கொள்ளுகிறேன்" என்றான்.

“நானும் உன்னுடன் வருகிறேனே” என்ருன் இளவரசன். இதற்குள் கொத்தவால் மகனும் அங்கே தோன்றி, “என்னை விட்டுவிட்டா நீங்கள் இருவரும் செல்கிறீர்கள்? என்னையும் சேர்த்துக் கொள்ளுங்கள் என்ருன்.

துயரின் வடிவான தன் அன்னையை அணுகி அரச குமாரன், “அம்மா, நான் வெளி உலகைக் காணப் புறப் படுகிறேன். உத்தரவு தா. உன் நெடுநாள் துயரைப் போக்க வழி தேடிக்கொண்டு வருகிறேன்” என்ருன்.

மூன்று நண்பர்களுமாகப் பிரயாணமாஞர்கள்.

## 3

கடல் நீரில் வணிக மகனின் பன்னிரு வங்கங்களும் நிர்த்தமாடின. மூன்று பேரும் ஏறிக்கொண்டனர். தென்ற லும் வீசியது, கூம்பில் சிலையும் ஊதியது. கலங்கள் யாவும் இளவரசனின் மனோரதம்போல் ஒய்யெனச் சென்றன.

பவளத் தீவை நண்ணி ஒரு கப்பலில் செம் பவளங்களை நிரப்பிக் கொண்டனர். சந்தனத்திட்டை அணுகித் தண்மணம் தரும் சாந்தத்தை ஏற்றிக் கொண்டனர். ஒரு கலத்தில் சங்குத் தீவில், விலையில்லா வலம்புரியும், ஸ்வர்ணத் தீவகத்தில் அரிய கிளிச்சிறைத் தங்கமும் நிறையக் கொண்டனர். பிறகு நான்கு வருஷ காலம் பல நாடுகளில் சுற்றினர். யானைக்கோட்டிலுள்ள முத்தும் தந்தமும் மான்மதமும் இலவங்கமும், சீனத்துப் பட்டும் நான்கு கப்பல்களுக்குச் சரியாக இருந்தன. நாடு திரும்ப வேண்டியதுதான். ஆனால் எதிர்பாராத இடை யூறு குறுக்கிட்டது. கடல் நடுவே சூருவளி ஒன்று தோன்றியது. பதினொரு கப்பல்களும் ஆழ்கடலுக்கு இரையாயின. எஞ்சி நின்ற கலத்தில் நண்பர்கள் மூவரும் தொற்றிக்கொண்டு முன்பின் தெரியாத ஒரு நாட்டின்

கரையைக் காணும் ஸமயம், பாறையில் மோதுண்டு அவர்களிலிருந்த கலம் சிதைவுண்டது. நீந்திக்கொண்டு கரையை அடைந்தனர்.

அவர்கள் கரைதட்டிய தீவுதான் சீட்டு ராஜ்யம்.

## 4

அதுவரை அந்த ராஜ்யத்தில் எந்த விதமான கிளர்ச்சியும் உண்டாகவில்லை. இந்த மூன்று பேரும் கால் வைத்ததுமே கலக்கம் மூண்டது.

சீட்டு ராஜ்யத்தில் வாழ்ந்த முதல் வர்ணத்தாரிடையே பெரியதோர் வாதம். சமுத்திரக்கரையில் தென்படும் புதுவிதமான இந்த மூன்று பேரையும் எந்த வகுப்பில் சேர்ப்பதென்ற கேள்விதான்.

முதலாவது, இவர்கள் எந்த ஜாதியைச் சேர்ந்தவர்கள்? ஏஸா ராஜாவா, ஜாக்கா-இல்லை கீழ்ப்பட்ட ஒன்பது பத்தாம் பந்தியா?

இரண்டாவது, இவர்களுடைய கோத்திரம் என்ன? *இஸ்கபன், சிடிதன், ஹரதன், ருயிதன்* இவற்றுள் எது?

இந்த இரண்டு விஷயங்களில் சந்தேகம் தீர்ந்து தெளியும் வரை இவர்களுடன் எந்த விதமான உறவோ, பேச்சோ வைத்துக்கொள்ளக் கூடாது. இவர்கள் யாரோடு உண்பார்களோ, எவர் வீட்டில் தங்குவார்களோ, இவர்கள் படுக்கும்பொழுது தலையை எந்தத் திசையில் வைத்துக்கொள்வார்களோ? ஈசானியமூலையிலா, வாயு மூலையிலா, அக்கினி மூலையிலா? நின்றுகொண்டே தூங்குவார்களோ?—இவையெல்லாம் சீட்டு நாட்டினருக்குப் புரியாத விஷயங்கள்.

இந்த மாதிரி ஒரு தொல்லை இதற்கு முன் சீட்டு ராஜ்யத்தில் ஏற்பட்டதே இல்லை. ஆனால் பசியால்

---

*இஸ்பேட், டைமண்ட், ஆடுதன், க்ளாவர்.

துடிக்கும் அந்த அயலார் மூன்று பேரும் துளிக்கூட சிந்தனை செய்யவே இல்லை. எந்த வழியிலாவது உணவு கிடைத்தால் போதுமென்று இருந்தார்கள். அவர்களுக்கு ஆகாரம் தரச் சீட்டு நாட்டினர் தயங்கிக்கொண்டிருந்தனர்; நாலு கோத்திரத்தைச் சேர்ந்த ஜாக்கிகள் மகா நாடு ஒன்றைக் கூட்டினர்; இதற்குள் கரைதட்டிய மூன்று பேரும் கிடைத்ததை நின்ற இடத்திலேயே புசிக்க லாயினர்.

கீழ் ஜாதியான இரண்டாம் மூன்றும் பந்திகள், அவர்களுடைய விசித்திரப் போக்கைக் கவனித்து திடுக்குற்றுப் போயின. மூன்று இரண்டைப் பார்த்து, "தம்பி! இந்தப் புது ஆசாமிகளுக்கு விதிவியவஸ்தை ஒன்றுமே தெரியவில்லையே" என்றது. நாலு குறுக்கிட்டு, "நம்மை விட இவர்கள் ஒரு படி தாழ்வு என்றே எண்ணுகிறேன்" என்றது.

சாப்பிட்டானதும் மனங்குளிர்ந்தவராய் மூன்று நண்பர்களும் சுற்றுமுற்றும் பார்த்தார்கள். எல்லாம் விசித்திரமாக இருந்தன. தலைகால் இல்லாமல் இங்கே உள்ளவர்கள் நடமாடினர். யாரோ ஒரு மாயாவி ஆட்டிவைக்கும் பொம்மைகள் மாதிரி திடுமென எழும்புவதும் படுப்பதுமாக இருந்தனர். இவர்கள் முகங்களில் ஒருவிதக் களையோ, உணர்வோ ஒன்றுமே இல்லை. நிச்சப்தமாக, ஒரே வழியில் முறை தவறாமல் சென்றனர். புதிதாக வந்த நண்பர்களுக்கு இது விந்தையாக இருந்தது.

நாலு பக்கமும் உயிர் இருந்தும் உயிர் அற்றது போன்ற இந்த நூதனமான ஜீவன்களைப் பார்த்ததும் இளவரசனுக்குத் தாங்க முடியாத சிரிப்பு வந்தது. கொல்லென்று நகைத்தான். அந்தக் குதூஹலச் சிரிப்பு சீட்டு ராஜ்யத்தின் மூலைக்குமூலை எதிரொலித்தது. மோனமே திகழும் அந்த ராஜ்யத்தில் என்றுமே புகாத இந்தச் சிரிப்பு

எப்படித் திடுமென எழுந்ததோ அப்படியே அடங்கிவிட்டது. சீட்டுமாந்தர் யாவரும் முன்னைவிட இருமடங்கு மௌன விரதம் பூண்டனர். கொத்தவால் மகனும் வணிகன் மகனும் வெறுப்புற்று இளவரசனிடம், "இந்தப் பாழும் தேசத்தில் யாருமே வாய்திறந்து பேச வில்லையே. எனக்குச் சகிக்கவில்லை, இந்த நிச்சப்தம். இங்கேயே இன்னும் இரண்டு நாள் தங்கினோமானால் நாமும் அவர்களைப் போலத்தான் ஆகிவிடுவோம்" என்றனர்.

"இதற்குள் சலித்துப் போய்விடலாமா நாம்? இங்கே நாம் காண்பதெலாம் விசித்திரக் காட்சிகள். இங்குள்ளவர்களை நாம் அசைத்துக் கிண்டிப் பார்க்க வேண்டும், ஏதாவது உயிர்ப்பொறி இருக்கிறதாவென்று." இவ்வாறு அரச குமாரன் கூறினான்.

## 5

சில காலம் கழிந்தது. ஆனால் இந்த மூன்று இளைஞரும், சீட்டு ராஜ்யத்தின் கட்டுத் திட்டங்களுக்கு அடங்குவதாக இல்லை. சீட்டு வர்க்கத்தினர் செய்வது போல், அவர்கள் உட்காரவோ, படுக்கவோ முகத்தைத் திருப்பவோ, பல்டி அடிக்கவோ, எதுவும் செய்யவில்லை. வெறுமெனப் பார்த்துக்கொண்டு நின்றார்கள், சிரித்தார்கள். சீட்டு மனிதர்கள் எதற்கும் அசைந்து கொடுக்கவில்லை. தம் பிகுவை விடாமல் சிலகாலம் திக்கஜம்போல் இருந்தனர்.

ஒருநாள் ஜாக்கியும், ஏஸும் வந்து அரச குமாரன், செட்டிப்பிள்ளை, கொத்தவால் மகன் இவர்களை அணுகி, பானையிலிருந்து வருவதுபோன்ற ஆழ்ந்த குரல் எடுத்து, "நீங்கள் ஏன் இப்படி முறைதப்பி நடக்கிறீர்கள்?" என்றனர்.

நண்பர்கள் மூவரும், “அது எங்கள் இஷ்டம்” என்றனர்.

பாணைக்குரல் படைத்த சீட்டு ராஜ்யத்து அதிகாரிகள் கனவின் மயக்கத்தில் இருப்பவர்கள்போல, “அப்படியா, உங்கள் இஷ்டமா? யார் அந்தப் பயல் அப்படிச் சொன்னது?” என்றனர்.

யதேச்சை என்பதென்ன வெனக் கொஞ்சங் கொஞ்சமாகப் புரிந்தது சீட்டு மாந்தர்களுக்கு. ஒவ்வொரு நாளும் அவர்கள் கண்ணெதிரே கண்டதென்ன? இதுவரை நடந்ததுபோல் இராமல் வேறு விதமாகவும் நடக்க முடியும். அவர்கள் எந்த வழியே சென்ருர்களோ, அதற்கு மாருன வழியும் உண்டு. வெளி உலகத்திலிருந்து உயிருள்ள மூன்று அற்புத மனிதர் வந்தபிறகு இவர்கள் கண் திறந்தது. மானிடரின் சுதந்திரவாழ்வு, சட்ட திட்டங்களின் எல்லைக்கு உட்பட்டதல்ல. யதேச்சை என்ற ஒரு புது விதச் சக்தியின் உயர்வை—உண்மையை—தெளிவாகப் புரிந்து கொள்ளாமற் போனுலும் ஒருவாறு உணர்ந்தனர்.

இந்த உணர்ச்சி சிறிது சிறிதாகப் பரவி விரைவில் சீட்டு ராஜ்யமெங்கும் கிளர்ச்சிகள் மூண்டன: துயில் கலைந்து எழும் ஒரு மலைப்பாம்பு எவ்வாறு நெளிந்து அசையுமோ, அதுபோல.

## 6

இதுவரை மனத்துள்ளோ, முகத்திலோ எந்த விதமான சஞ்சலமும் இராமல் சீட்டு ராணிகள் தத்தம் காரியத்தில் கருத்தாயிருந்தனர். இப்பொழுதோ, இளந்தென்றல் வீசும் மாலை நேரங்களில் ராணி எவளாவது சட்டென அரசகுமாரன்மீது தன் கருவிழியைச் செலுத்துவாள். இளவரசனும் பார்ப்பான். “இதென்ன சித்திரப்பாவை அல்லவோ இவள்? இப்பொழுது உயிருள்ளவளாகத்

தோற்றுகிருளே" என்று நெஞ்சோடு கிளத்துவான். கொத்தவாலின் மகனையும் செட்டிப் பிள்ளையையும் அரச குமாரன் மறைவில் இட்டுச் சென்று, "என் அருமைத் தோழர்களே! இவர்களிடத்தில் நாம் இன்பத்தை அனுபவிக்க முடியுமென்று எனக்குப் படுகிறது. இவர்களுள் ஒருத்தியின் நயனக் கொள்ளையில் காதலின் அருண ஒளியை—புது வாழ்வின் உதயத்தைக் கண்டேன். இது வரை நாம் பொறுமையாக இருந்தது இன்று தக்க பலனை அளித்தது பாருங்கள்" என்ருன்.

நண்பர்கள் இருவரும் ஸந்தோஷத்தால் சிரித்து, "நிச்சயமாகவா?" என்றனர்.

இளவரசனுடைய கண்குறிப்பைக் கண்ட பிறகே, ஹாரதன் ராணி சீட்டு ராஜ்யத்தின் வழக்கங்களை மீறிக் கொண்டிருந்தாள். அவள் இருக்கவேண்டிய இடத்தில் இருப்பதில்லை. வரிசையில் அவள் ஏஸுக்குப் பக்கத்தில் நிற்க வேண்டியவள். ஆனல் ஞாபக மறதியாக, அரச குமாரன் பக்கத்தில் வந்து நிற்பாள். அப்பொழுது ஏஸ் கோபத்துடன், "ராணி! உனக்கு ஏதாவது புத்தி மாருட்டமா?" என்பான். இதைக் கேட்டதும், ஏற்கெனவே சிவந்திருக்கும் ராணியின் கன்னங்கள் பின்னும் சிவந்து விடும். விலைத்திருக்கும் கண்களைத் தாழ்த்துவாள். அரச குமாரன் உடனே அவளுக்குத் துணையாக, "தவறென்ன நடந்துவிட்டது? இன்று நான் ஏஸாக நடிக்கிறேனே" என்பான்.

சீட்டு அரம்பையர் உள்ளத்தில் புதிதாக இதழ்விரியும் அந்த முருகுதான் என்னே! சொல்லுக்கடங்காத ஒரு லாவண்யம் ஒளிர்ந்தது. அவர்கள் நடையில்தான் என்ன குலுக்கு! உடல் வளைவில்தான் என்ன நெளிவு! அந்தக் கண்களின் மூலம் உள்ளத்தில் மூண்ட அலைகள் தெரிந்

தன. அவர்கள் நோக்கும் இடமெல்லாம், நிற்கும் இட மெங்கும் காதலின் மணம் கமழ்ந்தது.

இந்த ஹரதன் யுவதியைச் சரியான வழிக்குத் திருப் பப்போய் வரவரச் சீட்டு வர்க்கத்தினர் தாமே அந்தத் தவருன மார்க்கத்தில் செல்லலாயினர். ஜாக்கி, தனக்குள்ள ஹோதா, கௌரவத்தை யெல்லாம் மறந்துவிட்டான். ஏஸும், சீட்டு அரசனும் ஒன்ருக இழைய ஆரம்பித்து விட்டனர். தாழ்ந்த ஜாதியான ஒன்பது பத்தாம் பந்தியைப் பற்றிக் கேட்பானேன்?

பழமையான அந்தத் தீவில் எத்தனையோ தரம் இளவேனிற்காலம் வந்து போயிருக்கிறது. இன்குயிலும் இசைத்திருக்கிறது. ஆனால் இந்தத் தடவை அது கூவியது போல் என்றுமே கூவியதில்லை. அதன் குரலிலும் காதல் வெறி. சமுத்திரமோ, நெடுநாளாக ஒரே ராகத்தைப் பாடிக் கொண்டிருந்தது. இன்ருே அந்தப் பூர்விகமான பண்ணை விட்டொழித்து, இளமை பொங்க மெல்லிய தென்றலின் இனிய சந்தத்தில், தரங்க வீணையை மீட்டித் தன் உள்ளத்துள் குமுறும் காதலின் வேதனையை விசித் திர ராகங்களில் வெளிக்காட்டியது.

## 7

முதலில் பார்த்த சீட்டு ராஜாவா இது, ஏஸா இது? எங்கே போய்விட்டது இவர்களுடைய அந்தப் பழைய பளபளப்பு—முக விலாஸம்? இப்படி ஏன் இன்று சிலர் வானை வெறித்துப் பார்க்கிருர்கள்? கடற்கரையில் சிலர் ஏன் முகம் தொங்கிப்போய்க் கிடக்கிருர்கள்? தரையில் படுத்ததும் உறங்கும் இவர்கள் ஏன் இவ்வாறு கண்படை இராமல் அலைகிருர்கள்? ஏன் உணவு கொள்ளாமல் வாடு கிருர்கள்? சந்தேகம் உலவியது சிலர் முகபாவங்களில், ஊடலினுல் விளைந்த சோர்வு சில முகங்களில். என்று

கூடுவோமென்ற ஏக்கம் ஒரு சாரார் முகபாவனையில். இன்பங் கண்டதால் ஓரிடத்தில் சிரிப்பும் குதூஹலமும். குறியிடம் காதலனைக் காணுததால் மடந்தையர் சிலர் உள்ளத்தில் அழுகை. ஒரு பக்கம் காதல் மிதமிஞ்சியதால் எழும் ஆடலும் பாடலும். முன்போல் இராமல் இப்பொழுதெல்லாம் சீட்டு ராஜ்யத்தில் வாழ்ந்த ஆடவரும் பெண்களும் ஒருவரோடு ஒருவர் கூச்சமின்றிப் பழகினர். பிறர் செய்யும் லீலா விநோதங்களையும் ஓரக்கண்ணுல் பார்க்கத் தவறுவதில்லை. ஏஸ் நினைத்துக் கொள்வான்: "இந்த ராஜாப் பயல் ரொம்ப ஒழுங்காகத்தான் உடை உடுத்துகிறுன். ஆனுல் அவனிடத்தில் வசீகரம் என்ன இருக்கிறது? என்னுடைய நடையும் பாணியும் தனி ரகமே. அதன் சிறப்பே அலாதியானது. பயல்கள் என்னைப் பார்த்துப் பெருமூச்சு விடுகிறுர்கள். தெரியவில்லையா?"

"இந்தத் தடியன் இருக்கிறுனே ஜாக்கி! ரொம்ப விறைப்பாய் நடந்து போகிறுனே தலை இடறிப் போகிறது. இளைய ராணி தன்னைப் பார்த்து மயங்கிப் போய்விடுவாளென்ற எண்ணமாக்கும்!" இவ்வாறு தனக்குத்தானே சொல்லிக்கொண்டே கோணல் சிரிப்புடன் மீசையை முறுக்கிச் சீட்டு ராஜா கண்ணடியில் அழகு பார்த்துக் கொண்டார்.

நாடெங்கும் புதிய உணர்வு ஏற்பட்டது. இளவரசியர் தம்மை அழகாகச் சிங்காரம் செய்து கொண்டனர். மற்றவள் எப்படி அழகுபடுத்திக் கொள்கிறுர்களென்று கவனித்துக் கொண்டனர். வீதிக்கு ஒரு நடையும், மூலைக்கு ஒரு குலுக்குமாய் ஒய்யாரமாக இந்தச் சீட்டு அணங்குகள் உலாவப் போகும் காட்சியை எங்ஙனம் வர்ணிப்பது?

தண்ணிழல் கவிந்த சோலைகளில் தோழியருடன் சிலர் தம் காதல் கதையை மெல்லக் குசுகுசுப்பார்கள். வேறு இடத்தில் புதல்மறைவில் காதல் நாடகத்தின் கூடல் உவகை, பிரிவின் கலுழ்ச்சி யாவும் நடக்கும்.

மரத்தடியில் காதலி வெறுத்த ஓர் இளையோன், உலகை வெறுக்கும் நிலையில் மடதூரக் காத்திருப்பான். அப்பொழுது அவன் உள்ளத்தைக் கவர்ந்த பெண் அவனைப் பாராததுபோல் அந்த வழியே வந்து போவாள். ஒவ்வொரு ஸமயம் கண்ணோடு கண் நோக்கும். சற்று ஸாஹஸமுடையவன் இந்த அரிய சந்தர்ப்பத்தை நழுவ விடாமல், காதலி தன்னை மன்னித்து விட்டாளென்று நெருங்கி அவள் கையைப் பற்றுவான். நாணிக் கூசிக் கொள்வாள் காதலி. வாயில் சொல் எழும்பாது. இனிது முடிவதற்குள் யாராவது குறுக்கே வந்துவிடுவார்கள். பிரிந்து போவார்கள் இருவரும் பெருமூச்சுடன். மரக்கிளைகளில் பறவைகள் நீங்குரலெடுத்துப் பாடும். மந்தமாருதம் வீசும். இளந்தளிர்கள் சிலிர்க்கும். தொலைவில் கடலின் கீதம், உள்ளத்தைப் பற்றிய நோயைப் பின்னும் கிளறி விடும்.

இந்தமாதிரி ஒரு வஸந்த காலத்தில் வெளிநாட்டு இளைஞர் மூவரும் அந்தச் சுவையற்ற சீட்டு ராஜ்யத்திலும் இன்பம் குலவச் செய்தனர். வறண்ட அந்நாட்டார் உள்ளத்தில் இன்பெருக்குத் தளும்பியது.

## 8

அந்தத் தேசமெங்கும் இந்த வெறி தலைவிரித்தாடியதைக் கண்டு அரசகுமாரன், "வாய் திறந்து தம் வேதனையையோ, உள்ளத்தில் ஊறும் காதலையோ இவர்களால் வெளிப்படுத்த முடியவில்லை. கண்ணால் கண்டு களித்தால் போதுமா? மணலில் கட்டிய சிற்றில்லைப்போல இங்கே

உள்ளவரின் மனக்கோட்டை யாவும் சிதைந்து போகின்றன. மனத்துள் கொழுந்துவிடும் கனலில் வெந்து போகிறார்களே தவிர வாய்விட்டு எதையும் பேசவில்லையே இவர்கள். கண்கள் மட்டும் அந்த ஒளியைக் காட்டுகின்றன. உள்ளத்துள் அடிக்கும் இந்தப் புயலின் வேகம், இலைகள் போல் உதடுகள் துடிப்பதோடு நின்று விடுகிறதே; இதற்கு என்ன செய்யலாம்?" என்று அரசகுமாரன் யோசனை செய்தான்.

எல்லோரையும் அழைத்து, "குழல்கொண்டு ஊதுங்கள், முரசு கொட்டுங்கள். ஆனந்த கோஷம் செய்யுங்கள். இன்று ஹரதன் இளவரசிக்குச் சுயம்வரம். வாருங்கள்" என்றான் அரசகுமாரன்.

அக்கணமே ஒன்பது பத்தாம் பந்தியினர் குழல் இசைத்தனர். இரண்டு மூன்றாம் பந்தியினர் மேள தாளங்கள் கொட்டினர். இந்தப் பெரிய குழப்பத்தில், களிப் பாட்டத்தில், சீட்டு மாந்தர் உள்ளத்தை மூடி இருந்த திரை விலகிற்று. மௌன ஸங்கேதங்கள் யாவும் மறைந்து போயின.

இந்த இன்ப விழவில் ஆடவரும் பெண்களும் கருத்தொருமித்தவராய்த் தம் காதலை வெளிக்காட்டினர். வாய் திறந்து சொல்லிக்கொண்டனர். ஒரே கோலாஹலம், உரத்த சிரிப்பு; அளவுகடந்த இன்பப் பேச்சு. அடர்ந்த காட்டில் காற்றெழுந்ததும், மரக்கிளைகள் ஒன்றோடு ஒன்று உராயும்; கொடிகள் ஊசலாடும்; இலைகள் துடி துடிக்கும்; சருகுகள் சலசலக்கும். அதுபோலவே இருந்தது இந்தச் சீட்டு ராஜ்யமும்.

இந்தக் கொந்தளிப்புக்கிடையே மங்கள வாத்தியங்கள் முழங்கின. இன்பத்தின் நடுவில் நிச்சலமும் சுகத்தின் நடுவில் வேதனையும் உலகெங்கும் அழகும், உள்ளத்துள் ஆனந்தமும் அவசமும் நிரம்பின. காதலில் ஊறினவர்

களுக்குக் காதல் தெவிட்டியது. காதலை இன்னதென்று உணராதவர் கையில் காதல் கனி நழுவி விழுந்தது. ஹரதன் இளவரசி பட்டுச் சீரை அணிந்து, அன்று முழுவதும் இலையடர்ந்த கொடிவீட்டில் அமர்ந்திருந்தாள். தொலைவில் முழங்கும் மங்கல ஒலி அவள் செவியிலும் புகுந்தது. இன்பம் வரப்போவதன் அறிகுறியாக அவளுடைய கண்ணிதழ்கள் மெல்ல மூடின. சட்டென அவள் கண்ணெடுத்துப் பார்த்தாள். அரசகுமாரன் முறுவல் பூத்த முகத்துடன் முன்னால் வந்து நின்றான். நாணிக் கண் புதைத்தாள் ஹரதன் இளவரசி. கொம்பனையாள் அவன் கழலடியில் விழுந்தாள்.

அன்றெல்லாம் தனியாகக் கடற்கரையில் உலாவிக் கொண்டே அரசகுமாரனும் இளவரசியின் தடங்கண்களில் தோன்றிய இளக்கத்தையே நினைத்துக்கொண்டிருந்தான். அவள் வணங்கியவிதம் அவன் நெஞ்சை அள்ளியது

இரவில் ஆயிரக்கணக்கான மணிவிளக்குகளை ஏற்றினர். பன்மலர்ப் பிணையல்களைக் கொண்டு தோரணம் கட்டினர். குழல்கள் இயம்பின. விசாலமான சுயம்வர மண்டபத்தில் யுவகர்கள் விசித்திரக் கோலத்துடன் வீற்றிருந்தனர்.

நாணமே உருவெடுத்த ஹரதன் நங்கை கையில் மாலையுடன் அரசகுமாரனின் எதிரே வந்து தலைகுனிய நின்றனள். அவள் மனத்திற்கு இனியனின் கழுத்தில் மாலை விழத் தயங்கியது. அவனை நிமிர்ந்து நோக்கவும் அவளால் முடியவில்லை.

ராஜபுத்திரன் அச்சமயம் தன் தலையைத் தாழ்த்தவே மணமாலை அவள் கையிலிருந்து நழுவி அவன் கழுத்தில் அமர்ந்தது. உயிர் பெய்த ஓவியம்போல் ஸபையினர் ஆனந்தக் கடலில் மூழ்கி ஆர்த்தனர்.

மணமகளையும் மகளையும் ஸிம்ஹாஸனத்தில் அமர்த்தி ராஜ்யாபிஷேகம் செய்தனர். தன் மைந்தன் ஒரு புது நாட்டின் புகழேந்திய மன்னன் ஆன செய்தி துயரில் ஆழ்ந்திருக்கும் ராணிக்கு வந்தது. இந்த வைபவத்தில் கலந்துகொள்ள அவளுக்கென ஒரு தங்கத் தோணியைச் சிங்காரித்து அனுப்பினர். அவளும் வந்தாள். பேரானந்தம் கொண்டாள்.

பொம்மைகளென உலவிவந்த சிட்டுமக்கள் யாவரும் திடீரென உயிருள்ளவராயினர். முன்னால் இருந்த ஆணி அடித்த பார்வையும், உணர்ச்சியற்ற தோற்றமும் அவர்களிடத்தில் இப்பொழுது காணவில்லை. தென்பு, தொல்லை; நட்பு, பகை; வறுமை, செம்மை கலந்தவாறு அந்நாட்டினரின் வாழ்க்கை ஊர்ந்து சென்றது. எல்லாரும் ஒரே திட்டத்திற்குக் கட்டுப்படாமல் தம்தம் வழியே சென்றனர். மனிதர்களிடம் தென்படுவதுபோல் குற்றம் குணம் இரண்டும் மலிந்து இருந்தன.

# தேசாபிமானி

சித்திரகுப்தன், என்னையும் அறியாமல் நான் செய்துள்ள பாவங்களைப் பெரிய பெரிய அக்ஷரங்களிலே யமலோகத்தில் நிச்சயம் குறித்துத்தான் வைத்திருப்பான். அவை ஒருபுறம் இருக்க, பிறருக்குத் தெரியாமல் நான் புரிந்துள்ள பல பாவங்கள் இன்னும் என் நினைவில் பன்மடங்காகிக் காட்சியளிக்கின்றன. பின் சொன்ன வகையைச் சேர்ந்த ஒரு பாதகத்தைத்தான் இப்போது எடுத்துரைக்கப் போகிறேன். யமலோகத்துப் பேரேட்டில் அது ஏறுவதற்குமுன் அதை வெளிப்படையாகச் சொல்லி ஒப்புக்கொண்டால் கொஞ்சம் பாவம் குறையுமென்று எண்ணுகிறேன்.

அது நேற்றுச் சாயங்காலம் நடந்தது. நேற்று எங்கள் பேட்டையில் ஜைனருக்குப் பண்டிகை நாள். என் மனைவி கலிகாவுடன் நண்பர் நயனமோஹனின் வீட்டிற்குப் போயிருந்தேன்.

கலிகா என்றால் 'மொட்டு' என்று அர்த்தம். மனைவிக்கு என் மாமனார் வைத்த பெயர் அது. ஆகையால், அந்தப் பெயர் அவளுக்குப் பொருந்துமா பொருந்ாதா என்பதற்கு அவர்தாம் ஜவாப்தாரி. என் மனைவியின் சுபாவத்தில் தயக்கம் என்பதே துளிக்கூட இல்லை. பெரும்பான்மையான விஷயங்களைப்பற்றி முடிவான அபிப்பிராயத்திற்கு வந்துவிட்டாள் அவள்! படா பஜாரில் ஒரு சமயம் அவள் தீவிரமாகச் சீமைத் துணி மறியல் நடத்தினாள். அப்போது அவள் சேவையை மெச்சி அவள் கக்ஷியைச் சேர்ந்தவர்கள் அவளுக்குத் துருவ விரதை (நிலையான விரதம் பூண்டவள்) என்று பெயர் சூட்டினர்.

என் பெயர் கிரீந்திரன் (மலையரசன்); எங்கள் பக்கத்தில் இந்தப் பெயர் சர்வசாதாரணம். குணமும் அதற்கு நேர்மாறுதான், வழக்கம்போல். கலிகாவின் பக்தர்களுக்கு நான் அவள் கணவன் என்பது ஒன்று போதாதா? என் பெயரைப்பற்றி அவர்களுக்கு என்ன அக்கறை? ஆனாலும், என் மூதாதையர்களின் அதிர்ஷ்டமோ என்னவோ எனக்கும் ஏதோ கொஞ்சம் மதிப்பு சில சமயம் வைக்கிறார்கள், அவர்களுடைய பக்தர்கள். சந்தா வசூலின்போதுதான்!

புருஷன் மனைவி இரண்டுபேர் குணமும் ஒரே மாதிரியாக இராமல், மாறுபட்டிருந்தால்தான் — தண்மையும் வெம்மையும்போல் — வாழ்க்கை பெரும்பாலும் இழைந்து செல்லும். நானோ ஒருமாதிரி; எந்த விஷயத்திலும் பிடிப்பு இல்லை. என் மனைவிக்கோ அவள் பிடித்த முயலுக்கு மூன்றே கால்தான்; இந்த வித்தியாசத்தினால்தான் எங்கள் குடும்பம் சகஜமாக நடந்து வந்தது.

ஆனால் ஒரு விஷயத்தில் மட்டும் இரண்டு பேரும் இன்னும் ஒத்து வரவில்லை. கலிகா எனக்குத் தேசாபிமானமே இல்லை என்று குறை கூறுகிறாள்.

இதுதான் எனக்குப் பெரிய சங்கடமாக இருக்கிறது. அவள் சொல்லுவதுதான் சத்தியம் அவளுக்கு; மற்ற எதுவும் இல்லை. உள்ளூற எத்தனையோ சந்தர்ப்பங்களில் எனக்குத் தேசப்பற்று இருக்கிறது என்று அவள் கண்டிருக்கிறாள். ஆனால் அவள் கக்ஷியைச் சேர்ந்தவர்கள் நம்பும் தேசீயத்தின் சின்னத்தைத் தரிக்க நான் இஷ்டப்படாததால், எனக்குத் தேச பக்தியே இல்லை என்று சாதிக்கிறாள்.

சிறு வயதிலிருந்தே புஸ்தகம் படிப்பதென்றால் எனக்கு மிகுந்த ஆசை. எப்போது பார்த்தாலும் புஸ்-

தகம் வாங்கும் கெட்ட பழக்கமும் எனக்கு உண்டு. அப்படி வாங்கின புஸ்தகங்களை நான் படிப்பதில்லை என்று சொல்ல என் ஜன்ம விரோதியாயிருந்தாலும் துணியமாட்டான். படித்த விஷயங்களைப்பற்றிச் சர்ச்சை செய்வதில் எனக்குள்ள ஆர்வத்தையும் என் நண்பர்கள் நன்கு அறிவார்கள். இதன் பலனாகச் சிநேகிதர்களை ஒவ்வொருவராக இழக்க நேரிட்டது. கடைசியாக எஞ்சி நின்றவன் வனவிஹாரி ஒருவனே. காலம் சரியாய் இல்லை. கொஞ்ச நாட்களாகப் போலீஸ் அதிகாரிகள் ஒருபுறம், 'பகவத்கீதையை கையில் வைத்துக் கொண்டிருப்பதுகூட ராஜத் துரோகம்' என்று குற்றம் சாட்டி வருகிறார்கள். மற்றொருபுறம், நம்முடைய தேச பக்தர்கள், 'அன்னிய நாட்டு இலக்கியப் பற்று இருந்தால் தேசாபிமானம் எங்கே ஏற்படும்?' என்று வாதம் புரிகிறார்கள். நம் நாட்டு இளந் தேசீய வாதிகளுக்கு நம் புராதனக் கலைத் தெய்வமாகிய ஸரஸ்வதி இடத்தில்கூட அதிருப்திதான்—அவள் வெள்ளை நிறத்தினள் என்ற காரணத்தால்! மாணவர்கள் காலேஜ் பிரசங்கங்களை வெறுத்துத் தள்ளிவிட்டு, "ஸரஸ்வதிதேவி திவ்வியப் பொய்கையில் வெள்ளைத் தாமரையாசனத்தில் வீற்றிருந்து என்ன பயன்? அறிவென்னும் அப்பொய்கை நீரினால் நம் பாரதத் தாயின் அரியாசனத்தைச் சுற்றிப் பல நூற்றாண்டுகளாகக் கொழுந்து விட்டெரியும் துன்பச் சுடரை அவிக்க முடிந்ததோ?" என்று சொல்லித் திரிகிறார்கள் என்றால் பாருங்களேன்! அரசியல் வாழ்க்கையில் முன்னேறுவதற்கு ஆழ்ந்த அறிவு வளர்ச்சி அவசியமில்லை என்பது அவர்கள் கருத்து.

என் சகதர்மிணி தீவிரமாக நின்று எனக்கு வழி காட்டி என்னைத் தூண்டியும் நான் கதர் உடுத்துவதில்லை. கதர் ஆடை உடுத்துவது தவறு என்பதாலோ அது மோட்டாவாக இருக்கிறதென்ற காரணத்தாலோ அல்ல.

இன்னும் கேட்கப் போனால், நம்முடைய வழக்கத்திற்கு மாறாக, ஆடை விஷயத்தில் நான் அவ்வளவாக அக்கறை செலுத்துவதில்லை. ஒரு காலத்தில் கலிகா இப்படி மாறு வதற்குமுன் சைனாக் கடையில் அகலமான ஜோடுகள் வாங்கிப் போட்டுக் கொள்வேன்; பின்னால் அதற்கு மெருகு போடக்கூட மறந்துவிடுவேன். 'ஷர்ட்டு'க்குப் பதில் 'பஞ்சாபி'ச் சட்டைதான் போட்டுக் கொள்வேன்; அதற்குப் பித்தான் இல்லையே என்று கவலைப்படுவது மில்லை. இதனால் அடிக்கடி முன்பெல்லாம் வீட்டில் பிரமாத சண்டை மூண்டு நாங்கள் பிரிந்துபோய் விடுகிற நிலைக்குக்கூட வந்துவிடும். "உங்களோடு வெளியில் புறப்படுவதற்கே அவமானமாக இருக்கிறது எனக்கு!" என்று கலிகா சொல்லிவிட்டாள்! 'நம்மைக் கண்டால் பிடிக்காத அந்தக் கோஷ்டியில் நாம் சேருவானேன்?' என்று நானும் அவளிஷ்டப்படியே தனியாகப் போகவிட் டேன்.

இப்போதெல்லாம் காலம் மாறிவிட்டது; ஆனாலும் என் துரதிர்ஷ்டம் ஒன்று இருக்கிறதே, அது என்னை விட்டால்தானே! இப்போதும் கலிகா தன் பழைய பல்லவியைப் பாடிக்கொண்டுதான் இருக்கிறாள். தேசியம் பரவுவதற்கு முன் நான் மேனாட்டு மோஸ்தரில் உடுத்துவ தில்லை என்று குறை கூறுவாள். இப்போதோ தன் கக்ஷியைச் சேர்ந்தவர்களைப்போல் ஆடை உடுத்துவதில்லை என்ற குறை.

தவறு என்னவோ என்பேரில் தான். ஜாதி, கக்ஷிச் சின்னங்களைப் போட்டுக்கொண்டு பறையடிப்ப தென்றால் எனக்குக் கூச்சம். மனித சுபாவத்தில் மாறுபாடு இருப் பது சகஜந்தானே; கலிகா இதை உணரவில்லை. இதனால் தான் குடும்பத்தில் அடிக்கடி வாய்ச்சண்டை பலத்து விடும். மலையினின்று இழியும் ஆறு ஒன்று, தடுத்து

நிற்கும் ஒரு பாறை மேல் மோதி அதைச் சுற்றிச் சுற்றித் தன் சொந்த விசையினால் வெளி வரப் பார்க்கிறது; ஆனால் முடியவில்லை. அதைப் போலத்தான் அவள் சுபாவமும். யாராவது அவளை எதிர்த்துப் பேசிவிட்டால் தன்னையும் மீறி ஆவேசம் வந்ததுபோல் குதிப்பாள்.

நேற்று வெளியில் புறப்படும்போது நான் கதராடை உடுத்தாமல் வருவதற்கு அவள் ஏசின ஏசல் காதால் கேட்க வழங்காது. துரதிர்ஷ்டவசமாக, எனக்கு வித்தியா அகங்காரம் உண்டு. அதனால் எங்களுக்குள் வாதப்பிரதி வாதம் மூண்டது. அதுவும் சுமுகமாக இல்லை; வியர்த்த மாக முடிந்தது.

"ஆடுவார் ஆட்டுகிறபடி கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றத்தான் தெரியும், பெண்களுக்கு; அதுதான் சௌகரியம் என்றும் எண்ணுகிறார்கள். கொஞ்சங்கூடச் சுயபுத்தி என்பது இல்லை அவர்களுக்கு; அந்தப்புரத்தில் இருந்தால் ஆபத்து இல்லை என்று எண்ணுவது போல் கடுமையான கட்டுத் திட்டங்களுக்குட்பட்டு நடப்பது தான் சரி என்று நம்புகிறார்கள். நம் நாட்டு நாரீமணி களுக்குக் கதரின்மேல் அவ்வளவு பக்தி ஏன் தெரியுமோ? ஏற்கெனவே இருக்கும் சின்னங்களோடு இதையும் சேர்த் துக்கொண்டு பரம யோக்கியர்கள் என்று பெயர் எடுக்கத் தான்! அதில் அவர்களுக்கு ஒரு திருப்திபோல் இருக் கிறது!" என்று பேச்செடுத்தேன்.

கலிகா வெறி பிடித்தவள் போல் என்மேல் சீறி விழுந்து, "ஆமாம், அப்படித்தான். கங்கா ஸ்நானம் பண்ணி னால் புண்ணியம் என்று நம்புகிற மாதிரி கதர் கட்டுவதும் தூய்மை என்று கண்ணை மூடிக்கொண்டு என்றைக்கு நம்புகிறார்களோ அன்றுதான் நம் நாட்டுக்கு விமோசனம். அந்தச் சுபதினம் வராதா என்றுதான் காத்திருக்கிறேன். நியாயவாதம் நிலையான வழக்கமாக மாறிவிடுகிறது.

பேய்போல் அலேவதுதான் சுயேச்சை. ஆனல் உயிர் உடலில் இருந்தால்தானே சோபிக்கும்; அதுபோல் கட்டுத் திட்டத்துக்கு அடங்கினல்தான் அல்லாடாமல் புத்தி ஒரு நிலேயில் இருக்கும்" என்ருள்.

அவள் சொல்லாவிட்டாலும் இதெல்லாம் யார் உபதேசம் என்று எனக்குத் தெரியாதா? நண்பர் நயன் மோஹனுடையதுதான். கலிகாவுக்கு என்னவோ அது தன்னுடையது என்றே எண்ணம்.

'மௌனம் ஸர்வார்த்த ஸாதகம்' என்று சொன்ன மகாநுபாவன் பிரம்மசாரியாக இருந்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் அப்படிச் சொல்லி யிருக்கமாட்டான். நான் பதில் பேசாமல் இருந்ததைப் பார்த்து அவளுக்குப் பிரமாத கோபம் வந்துவிட்டது. "நீங்கள் ஜாதி வித்தியாசம் கூடாது, நிறபேதம் கூடாது என்கிறதெல்லாம் வாயில்தான். நாங்கள் அப்படி அல்ல; எல்லோரும் ஓர் குலம் என்பதை, ஒரே மாதிரியான தூய வெள்ளாடை உடுத்து நடைமுறையில் காட்டுகிறோம்" என்ருள்.

'வாஸ்தவந்தான். முஸல்மான் சமைத்தால் ருசியாகத்தான் இருக்கிறது என் வாய்க்கு. அந்த உணவை வாயினுள்ளேதானே மெல்ல முடியும்? உண்மையே; வாய்ப்பேச்சோடு நிற்காதுதான். வெளிவேஷத்தினல் வித்தியாசத்தை மறைக்க முடியுமே தவிர ஒழித்துவிட முடியாது' என்று பதில் சொல்ல இருந்தேன்.

அதைச்சொல்லித்தான் இருக்கவேண்டும். ஆனல் என்னசெய்வது, நான் ஒன்றி ஆளாயிற்றே; அதனல் வாயை மூடிக்கொண்டு கப்சிப் என்று இருந்துவிட்டேன். இல்லாவிட்டால் இங்கே வீட்டிலே நடக்கிற சர்ச்சையைக் கண் மூக்கு காதெல்லாம் வைத்து விகாரப்படுத்தித் தன் சிநேகிதர்களிடத்தில் அம்பலமாக்கிச் சக்கையாக வெளுத்துவிடுவாளே; இந்தமாதிரி எவ்வளவோ தரம்

குட்டுப்பட்டு எனக்குப் புத்தி வந்தாயிற்று. புரொபஸர் நயனமோஹன் அவர்களிடமிருந்து எனக்கு எதிரான வாதங்களைக் கற்றுக்கொண்டு வந்து சவால் விட்டுவிட்டுக் கிளம்பிவிடுவாள், நான் என்ன பதில் சொல்லப்போகிறேன் என்று கூடக் காத்திருக்கமாட்டாள்.

புரொபஸர் வீட்டில் என்ன நடக்கும் என்ற விஷயமும் எனக்கு நிச்சயமாகத் தெரியும். ஹிந்துக்களின் பூர்விக கலாசாரத்துக்கும் சுயேச்சை வாதத்துக்கும் உள்ள தாரதம்மியங்களைப்பற்றியும், யுகயுகமாக நமக்கு ஏற்பட்டுள்ள அநுபவங்களுக்கும் அறிவுக்கும் உள்ள தராதரத்தைக் குறித்தும் எளிதில் விளங்காத ஆழ்ந்த கருத்துடைய உபன்னியாசங்கள் நிகழும். ஆராய்ச்சி நிலை அற்றது, சப்புசாரம் இல்லாதது, முழு உண்மையாகாது என்பது அவர் கொள்கை.

அப்போது தலைமாட்டில் என் படுக்கை யருகில் படிக்கத் தயாராக வைத்திருக்கும் புதுப் புஸ்தக ஞாபகம் வந்தது எனக்கு. நல்ல மொராக்கோ தோலில் 'பைண்டு' செய்து பழுப்புக் காகிதத்தில் சுற்றிவைத்து இன்னும் ஏடுகள் கூட வெட்டப்படாமல் எனக்காக அவை காத்திருக்கும் காட்சி என்கண் முன் வந்து நின்றது. ஆயினும் கொடுத்த வாக்கை நிறைவேற்ற வேண்டுமே; அதற்குக் கட்டுப்படாவிட்டாலும் பின்னால் பெரும் சங்கடத்துக்கு அறிகுறியாக அவள் மூஞ்சிகாட்டுவதற்காவது பயந்து அடங்கித்தானே போகவேண்டும்!

எங்கள் வீட்டிலிருந்து சிறிது தூரந்தான் சென்றிருப்போம், தெருவிலுள்ள தண்ணீர்க் குழாயைத் தாண்டி ஹிந்துஸ்தானிக்காரன் ஒருவன் வைத்திருக்கிற ஓடு போட்ட பக்ஷணக்கடை. கடுகெண்ணெயில் போட்டு எடுத்த ஜீரணமாகாத பலவகைப் பண்டங்களைத் தயாரித்துக்கொண்டிருந்தான் அவன். அந்தக் கடையண்டை

வந்ததும் மேலே போக முடியாதபடி ஒரே கலவரமாக இருந்தது.

மார்வாடிகள் தடபுடலாக வரிசைகள் எடுத்துப் போய்க் கொண்டிருந்தவர்கள் சட்டென்று நின்று விட்டார்கள். யார்மேலோ கோபங் கொண்டு அவனை அடிப்பதுபோல் ஓசை கேட்டது. 'எவனோ தேட்டைக் குத்தியைப் பிடித்துத் தாக்குகிறார்கள் போல் இருக் கிறது, கூட்டத்தில். அந்த உற்சாகத்தில்தான் பாவம் அப்படிக் கூச்சலிட்டுக் கொண்டு மூஞ்சிமுகம் தெரியா மல் அவனை மொத்துகிறார்கள்' என்று நினைத்தேன். விடாமல் 'ஹார்ன்'' ஊதவே எப்படியோ அந்த ஆத் திரம் பிடித்த கூட்டத்தினுள் நுழைந்துவிட்டது எங்கள் மோட்டார் வண்டி. எங்கள் பேட்டையைச் சேர்ந்த நகர சபைத் தோட்டி அடிபட்டுக் கொண்டிருப்பதைக் கண் டோம். அவன் அப்போதுதான் ஸ்நாநம் பண்ணிவிட்டு வலக்கையில் தொட்டி நிறையச் சுத்த ஜலமும் அக்குளில் துடைப்பமும் எடுத்துக் வந்துகொண்டிருந்தான். கோடு இட்ட அரைக்கைச் சட்டை போட்டுக் கொண்டு, சிரத்தலையை ஒழுங்காக வாரிவிட்டிருந்தான். இடது கையில் தன் ஏழு வயது பேரனைப் பிடித்தபடி வீட்டை நோக்கிச்சென்று கொண்டிருந்தான்; அப்போது தற்செயலாக யார்மேலோ, எந்தச் சாமான் மீதோ பட்டு விட்டான்போல் இருக்கிறது. அதற்குத்தான் இவ்வளவு ஆர்ப்பாட்டம். பையன், பாவம், "தாத்தாவை அடிக் காதீங்களேன்! அடிக்காதீங்களேன்!" என்று எல்லோர் காலிலும் விழுந்து கெஞ்சிக் கேட்டான். கிழவனும் கைகூப்பித் தன்னையும் அறியாமல் செய்த அக் 'குற்ற'த்தை மன்னிக்கும்படி வேண்டினான். திகிலுடன் நிற்கும் அவன் விழிகளிலிருந்து தாரைதாரையாக நீர்

வழிந்தோடியது ; அவனுடைய நரைத்த தாடியெல்லாம் ஒரே ரத்தம்.

என்னால் இந்தக் காட்சியைச் சகிக்க முடியவில்லை. அந்தத் தோட்டியை உடனே என் காரில் ஏற்றிக் கொண்டு அந்தப் பரமயோக்கியர்கள் கோஷ்டியைச் சேர்ந்தவனல்ல நான் என்று காட்டத் தீர்மானித்தேன்.

நான் இப்படி ஆத்திரப்படுவதைப் பார்த்துக் கலிகா என் மனத்தில் இருப்பதை ஊகித்துக்கொண்டாள்.

"என்ன இது நீங்கள் பண்ணுவது? அவன் குப்பைக்காரன் என்றுகூடத் தெரியவில்லையா உங்களுக்கு?" என்றாள்.

"இருக்கட்டுமே. அவனை இப்படிக் கண்மண் தெரியாமல் அடிக்க இவர்களுக்கு என்ன அதிகாரம்?" என்றேன்.

"அவன் பண்ணின தப்பு அது! நடுத்தெருவில் போகாமல் சற்று ஒதுங்கிப் போயிருந்தால் அவன் கௌரவதை குறைந்துவிட்டிருக்குமோ?" என்றாள் கலிகா.

"எனக்கு அதெல்லாம் வேண்டியதில்லை. அவனை என் காரில் ஏற்றிக்கொள்ளத்தான் போகிறேன்" என்று என் பிடியையே பிடித்தேன்.

"அப்படியானால் நான் உங்கள் காரைவிட்டு இறங்கி விடுகிறேன். ஒரு குப்பைக்காரனோடு உட்கார்ந்து கொண்டு சவாரிபோக மாட்டேன் நான்" என்று சீறி விழுந்தாள் கலிகா.

"அவன் இப்போதுதான் குளித்துவிட்டு வருகிறான். சுத்தமான உடையும் உடுத்துக்கொண்டிருக்கிறான்—இன்னும் கேட்டால் அடிக்கிறார்களே அவர்களைவிடச் சுத்தமாகவே இருக்கிறான்" என்று வாதித்தேன்.

"போயும் போயும் குப்பைக்காரன் அவன்" என்று சொல்லிவிட்டு எங்கள் மோட்டார் ஓட்டியைப் பார்த்து, "கங்காதீன்! ஓட்டு வண்டியை" என்று உத்தரவிட்டாள் கலிகா.

நான் தோற்றேன். என்னுடைய கோழைத்தனமே அதற்குக் காரணம்.

நயனமோஹன், மனித சமூக இயல்பின்படி ஏற்றத் தாழ்வுகள் அவரவர் தொழிலினுல் ஏற்படுவது சகஜமே என்று இந்த விஷயத்தைக் குறித்துச் சான்றுகள் எடுத்துக் காட்டினதெல்லாம் என் காதில் விழுந்தால்தானே — அன்று மாலை முழுதும் மௌனமாகச் சிந்தையில் மூழ்கிக் கிடந்தேன்.

# ஹால்தார் குடும்பம்

இந்தக் குடும்பத்தாரிடையே சண்டையோ சச்சரவோ மூள்வதற்குத் தகுந்த காரணம் எதுவும் இல்லை. நல்ல ஸ்திதியில் இருந்தார்கள். மனிதர்களும் நல்லவர் தாம். ஆனாலும் கிளர்ச்சி ஏற்பட்டது.

தகுந்த காரணமிருந்தால் குடித்தனம் ஒரு கணக்குப் பேரேட்டிற்குச் சமமாக இருக்குமே. சற்று உஷாராக நடந்தால் கணக்கில் எங்குமே தவறு கண்டுபிடிக்க முடியாது; அப்படி ஏதாவது தென்பட்டாலும் ரப்பரைக் கொண்டு அழித்துத் திருத்திவிடலாம்.

ஆனால் மனிதனுடைய அதிர்ஷ்ட தேவதைக்குக் குறும்பென்றால் பிடிக்கும். கணிதத்தில் அந்தத் தேவதைக்கு ஆற்றல் உண்டோ இல்லையோ நமக்குத் தெரியாது. ஆனால் ஆர்வம் இல்லையென்று மட்டும் சொல்லுவேன். மனித வாழ்வில் ஏற்படும் கூட்டல் கழித்தலைப்பற்றி அது அவ்வளவாக மண்டையை உடைத்துக்கொள்ளவில்லை. இதற்காகவே தன் கணக்கு வழக்கில் ஒரு புதிய விஷயத்தைக் கையாள்கிறது. அனுசிதம் என்பதுதான் அது. உசிதமான காரணமே இராது. ஆனால் திடீரென ஒன்று நிகழும். இதனால் குடும்பம் பம்பரமாகச் சுழலும். சிரிப்பும் கண்ணீரும் கரைபுரண்டு ஓடும், வீட்டில்.

இந்த இடத்திலும் அதுவேதான் நடந்தது. கண்ணுக்கு ரம்மியமாகத் தாமரை காடுபோல் பூத்திருந்தது. யார் எண்ணினார்கள், மதயானை வந்து அதைப் பாழாக்குமென்று; சேற்றில் முளைத்த தாமரை சேற்றோடு குழந்தை

போய்விட்டது. இப்படி நேராது போனால் கதை உரு வெடுப்பது எப்படி ?

இப்பொழுது சொன்ன குடும்பத்தாரிடையே எல்லாரையும்விட யோக்கியமானவன் பனேயாரிலாலே; அதில் ஐயமில்லை. அது அவனுக்கும் நன்றாகத் தெரியும். அதனாலேயே கர்வம் சற்றுத் தலைக்கேறி இருந்தது. யோக்கியதை, எஞ்ஜினிலுள்ள நீராவிபோல் அவனை முன்னுக்குத் தள்ளியது. எதிரே வழி இருந்தால் நன்மையாக முடியும்; இராதுபோனால் குறுக்கே எது தடுத்தபோதிலும் அதன் பேரில் மோதிக்கொள்ள வேண்டியதுதான்.

அவனுடைய தந்தை மனோஹரலால் பழைய காலத்துப் பெரிய மனுஷ்யத் தரானவைச் சேர்ந்தவர். தம் ஸமூகத்தின் சிரோபூஷணமாகத் தலைமை வகிக்க வேண்டுமென்பது அவர் அவா. அதனால் ஸமூகத்தின் கை கால்போன்ற கீழ் உறுப்புக்களுடன் அவர் ஜோலியே வைத்துக் கொள்வ தில்லை. ஸாதாரணமான மனிதர்கள் தம் வேலையைச் செய்வார்கள். சுறுசுறுப்பாக இருப்பார்கள்; இவரோ வேலை எதுவுமே செய்யாத, உடம்பைத் துளிக்கூட அசைக்காத ஒரு பெருந் தகைமைக்கு நடுநாயகமாய் விளங்கினார்.

இத்தகைய மனிதர்கள் முயற்சியின்றியே இரண்டொரு விஷயங்களில் ஆற்றல்மிக்கவராக இருக்கிறார்கள். காந்தக் கல்போல் சரியான ஆட்களைத் தம் பக்கமாக இழுத்துக் கொள்கிறார்கள். இதற்குக் காரணம் வேறொன்றும் இல்லை. உலகில் ஒரு சாரார் தொண்டு செய்வதற்கென்றே ஜன்மம் எடுக்கிறார்கள். தாம் எடுத்த ஜன்மம் பயனடைவதன் பொருட்டே கையாலாகாத ஒருவனுடைய மாயத்துள் கட்டுண்டு அலைகிறார்கள். இவர்களுடைய பலஹீனத்தைக் கண்டு அவனும் தன் முழுப் பொறுப்பையும் இத்தகையோர்மேல் போட்டுவிடுகிறான். 'எம் கடன்

பணி செய்து கிடப்பதே' என்ற குறிக்கோளுடையவர்கள் தம் சொந்த வேலையில் ஒருவித ஆறுதலும் அடையாது போனாலும் ஒருவனுக்குமட்டும் அமோகமான நிம்மதியைத் தருகிறார்கள். அவனை ஸங்கடங்களிலிருந்து மீட்கிறார்கள். உலகத்தவர் கண்முன் அந்த உதவாக்கரையை உயர்த்தி வைக்கிறார்கள். ஆண்களாகப் பிறந்த தாய்மார் என்றே கூறவேண்டும் இவர்களை. அதுவும் சொந்தப் பிள்ளைகளுக்கல்ல; பிறர் மக்களுக்கு.

மனோஹரலாலின் வேலைக்காரன் பெயர் ராமசரண். பாபுவின் உடலை வளர்ப்பதற்கென்றே அவன் உயிர்வைத்திருந்தான் என்று சொல்வது மிகையாது. பாபுவுக்கு மூச்சு விடுவது சிரமமான காரியமாயிருந்தால், நாள் முழுவதும் துருத்திபோல் மூச்சுவிட அவன் சித்தமாகக் காத்திருந்தான். வெளியார் மட்டும் நினைப்பார்கள், 'பாவம் இந்த ஆள்காரன் உயிரை எடுத்துவிடுகிறான். சண்டாளன்' என்று. கீழே நழுவி விழுந்துவிடும், கையிலுள்ள குடாக்குக் குழாய். அதை எடுப்பது என்னவோ சிரமமான காரியமன்று. ஆனால் பாபு இதற்காக ராமசரனைக் கூப்பிடுவார். எந்த வேலை இருந்தாலும் போட்டுவிட்டு ஓடிவருவான். அனாவசியமாக உடலை வாட்டிக் கொள்வதில் ராமசரணுக்கு அளவற்ற ஆனந்தம். பிரபுவுக்குச் செய்யும் ஸேவை அல்லவா?

ராமசரண் எப்படியோ, அப்படியே இன்னொரு பக்தன் இருந்தான்: நீலகண்டன். குடும்பச் சொத்து, உடைமை யாவையும் பாதுகாக்கும் பொறுப்பு அவன் தலைமீது விழுந்தது. பாபு சாப்பிட்டு மிகுந்த பிரஸாதங்களைப் பெற்று ராமசரணுடைய உடல் மினுமினுவென்று கொழுத்திருந்தது. ஆனால் நீலகண்டனோ உலர்ந்த மேனியும் எலும்புக் கோலமுமாக இருந்தான். பாபுவின் செல்வக் களஞ்சியத்தின் ரக்ஷகன்தான்; ஆனால்

பஞ்சத்தின் குறி அவன் முகத்தில். சொத்தெல்லாம் மநோஹரலாலுடையது. அதை வகிக்கும் கௌரவம் என்னவோ நீலகண்டனுக்குத்தான்.

சில நாட்களாகவே நீலகண்டனுக்கும் பனேயாரிலா லுக்கும் நடுவே மனத்தாங்கல் முற்றி வந்தது. தங் கையைப் பேட்டி கண்டு பனேயாரி தன் மனைவிக்கு நகை பண்ணிப் போடுவதற்கு உத்தரவு பெற்றிருந்தான். அவன் எண்ணம், பணத்தைக்கொண்டு தன் விருப்பப்படி நகை செய்யவேண்டுமென்பதே. ஆனால் அந்தமாதிரி நடத்துவ தற்கு வழி இல்லையே. செலவெல்லாம் நீலகண்டன் கை யைக் கொண்டே செய்யவேண்டியிருந்தது. அதன் விளை வென்ன? நகை என்னவோ உருப்படியாக வந்தது. ஆனால் இஷ்டப்படி அமையவில்லை. தட்டானும் நீல கண்டனும் சேர்ந்து ஏதோ சூளையம் பண்ணி விட்டார்க ளெனப் பனேயாரி நம்பிவிட்டான். கருர் பேர்வழிகளுக்கு விரோதிகள் இருப்பது ஸஹஜம். பலபேர் பலவிதமான புரளி எழுப்பினர், நீலகண்டனைப்பற்றி. குத்திக் கொடுத் ததுபோல் ஆகிவிட்டது பனேயாரிக்கு. பிறரை வஞ்சித் ததை விடத் தன் வீட்டிலேயே இவன் அதிகமாகச் சுரண்டி விட்டிருப்பானென்ற தவருன கொள்கை கொண்டிருந் தான் பனேயாரி.

இரு பக்ஷத்தார் நடுவே குருத்துவிட்ட இந்தப் பகை அல்பக்காசு ஐந்து ரூபாயிலிருந்து ஆரம்பம். நீலகண்டன் முன் யோசனைக்காரன். பனேயாரியுடன் ரமாரமியாகப் போகாதுபோனல் பிற்பாடு தன் வேலைக்கே உலை என்ற விஷயம் அவனுக்கு எடுத்துரைக்க வேண்டியதில்லை. ஆனல் யஜமானருடைய சொத்தின்பேரில் அவனுக்கு லோபிக்குரிய ஒரு பாசம் இருந்தது. தன் புத்திக்கு சரியன்றெனப் பட்டால், யஜமானர் உத்தரவு கொடுத் திருந்தாலும் பணத்தை விரயம் செய்யமாட்டான்.

இந்தப் பக்கம் பனேயாரிக்கு அக்கிரமமான வழி களில் பணத்தைச் செலவு செய்ய வேண்டிய நிமித்தங் கள் உண்டாயின. புருஷர்கள் அநியாய வழிகள் இறங்கு வதற்கு மூலகாரணமாக நிற்கும் ஒரு விஷயம் இந்த இடத்திலும் வெட்ட வெளிச்சமாகத் தோன்றியது. பனேயாரியின் மனைவி கிரணலேகாவுக்கு வயது என்ன இருக்குமோ தெரியாது. பார்வைக்குத் துளியுண்டு பெண் ணுகை இருந்தாள். வீட்டின் பெரிய மாட்டுப் பெண்ணிடத் தில் இருக்கவேண்டிய கம்பீரம் அவளிடத்தில் கொஞ்ச மேனும் இல்லை. அவ்வளவு பெரிய இடத்திற்கு அவ ளுடைய சிறிய உருவம் ஒத்திருக்கவில்லை.

பனேயாரி அவளை ஆதரவுடன் அணு என்று அழைப்பான். அதுவும் போதாது போனுல் பரமாணு என்பான். ரஸாயன வித்தையில் பற்றுடையவர்கள் இந்த ஜீவ ஸ்ருஷ்டியில் அணு பரமாணுக்களுக்கு உள்ள சக்தியை உணர்வார்கள்.

கிரண் என்றுமே கணவனை நெருங்கி எதுவும் கேட்டது இல்லை. அவளுக்கு வீட்டில் ஒருவிதக் குறையுமில்லை. நாத்தனர், ஓர்ப்படிகள் நிறைய இருந் தார்கள். அவளுடைய பொழுதெல்லாம் இவர்களுடன் பழகுவதிலேயே கழிந்துவிடும். புது இளமையில் பூக்கும் காதல் எப்போதும் தனிமையில் விரகத்தவம் பூண்டிருக் கும். ஆனுல் இவளுக்கு அத்தகைய நிலை ஏற்படவில்லை. பனேயாரி விஷயத்தில் இவளுக்கு ஆர்வம் குறைவே. அவ னிடத்திலிருந்து இவள் எதையும் அமைதியுடனேயே பெற்ருள். தானுகவே முன்விழுந்து யாசிக்கவில்லை. இதன் பலன், தன் மனைவியை எப்படி வசப்படுத்திக் கொள்வ தென்ற கவலைக்கு உள்ளானுன் பனேயாரி. பெண்டாட்டி தானே வாய்திறந்து எதையாவது கேட்டால், அவளோடு தர்க்கம்புரிந்து கொஞ்சம் குறைத்தே செய்வதற்கு இடம்

இருந்தது; ஆனால் தானே பரிந்து அவளுக்குச் செய்வது உசிதமல்ல. அவள் வருந்திக் கேட்காதபோது காட்டும் தாராளம் அதிகச் செலவுக்கே வழி வைக்கும்.

கணவன் தந்த அன்பளிப்பைக் கண்டதும் கிரண் பூரித்துப் போனாளா என்று அறிவதற்கு வழி இல்லை. இந்த விஷயமாக அவளைக் கேட்டபொழுது நன்றாக இருக்கிறது என்று மட்டுமே கூறினாள். பனோ யாரிக்குத் திருப்தி உண்டாகவில்லை. ஒருவேளை போட்ட நகை அவளுக்குப் பிடிக்கவில்லையோ என்று நிமிஷத்திற்கு நிமிஷம் அவன் சந்தேகப்பட்டான். கிரண் கணவனைக் கடிந்து, "உங்களுக்குத்தான் இந்தக் கோணல்புத்தி. எதற் காக இப்படிக் கேட்கிறீர்கள்? நகை எனக்குப் பிடித்துத் தான் இருக்கிறது!" என்றாள்.

பாட புத்தகங்களில் படித்திருக்கிறான் பனோயாரி, சந்தோஷ உணர்ச்சி மனிதனுக்குரிய மஹத்தான பண்பு என்பதை. ஆனால் மனைவியின் ஸ்வபாவத்தினால் இந்த மேன்மையான உணர்ச்சி அவனுக்குத் துன்பத்தையே தந் தது. கிரண் அவனுக்குத் திருப்தியை மட்டுமா தந்தாள்! மோகத்துள் ஆழ்த்தினாள். அவனும் மனைவியை மயக்க விரும்பினான். மோகவலை வீசக் கிரண் முயற்சியே எடுத்துக் கொள்ளவில்லை. இளமைச் செவ்வி வழிந்தோடியது அவள் அங்கங்களில். தானாகவே அது வெளிப்பட்டது. ஆனால் ஆடவர்களுக்கு இந்த வாய்ப்பில்லை; மனைவியின் மனம் குளிர்வதற்கு ஏதாவது செய்து காட்டினால்தான் காதலில் வெற்றி ஏற்படும். புருஷனிடத்தில் கவர்ச்சி இராதுபோனாலும் பணம் அந்தக் குறையைத் தீர்த்துவிடு கிறது. பெண்களுக்கு அது மயிலின் தோகைமாதிரி. பணத்தின் விசித்திர சக்தியை முழுவதும் விரித்தால் தான் பெண் மனம் பூரிப்படையும். பனோயாரியின் காதல் நாடகத்திற்கு இடையூறாக நின்றான் நீலகண்டன். பனோ

யாரி யஜமானரின் மூத்த பிள்ளையாயிருந்தும் அவனுக்கு அதிகாரமே இல்லை. யஜமானரின் நிழலில் வளரும் அடிமையான நீலகண்டன், பனையாரி மீது தன் ஆதிக்கி யத்தைச் செலுத்தி வந்தான். பனையாரியின் பொருமல் எல்லாம் மனைவி மையல்கொள்ளத் தன்னிடம் மலரம்பு இல்லையே என்ற வேதனையினால்தான்.

ஒரு நாள் இந்த அளவற்ற செல்வம் அவனுக்கே வரப்போகிறது. ஆனால் இளமை திரும்பி வருமா? இப்பொழுது அவன் கிண்ணம் நிறையப் பருக விரும்பும் ஓர் இன்பம் வயது ஏறிய பின்பு எங்கிருந்து வரும்? பணம் அப்பொழுது குவிந்திருந்தும் என்ன பயன்?—மலைமுடியில் உறைந்து கிடக்கும் பனிக்குவை மாதிரிதான். இளமையில் வீண் விரயம் செய்தாலும் மனசுக்குத் தென்பையே தரும்.

பனையாரிக்கு மூன்று விஷயங்களில் பித்தம்:—குஸ்தி, வேட்டை, ஸம்ஸ்க்ருத காவியம். ஸம்ஸ்க்ருதக் கவிகளிலிருந்து மணிமாணிக்கங்களைத் திரட்டி வைத்திருந்தான். மழை மேகங்கள் கூடும் காலம், நிலவுபொழியும் இரவு, மந்தமாருதம் வீசும் மாலை வேளை, இவைபோன்ற ஸமயங்களில் அது பயன்படும். நீலகண்டன் பணத்தை இழுத்துப் பிடித்தபோதிலும், அந்த அழகிய காவியங்களில் மண்டியிருக்கும் உவமை ஆணிகளை அவனால் குறைக்க முடியாதே. உயர்வுநவிற்சி அணி மிகையாக இருந்தால்தான் என்ன? நீலகண்டன் வைக்கும் கணக்கில் அது ஏறுவதற்கு வழி இல்லை. கிரணுடைய அழகிய காதுக்கு ஒரு நேர்த்தியான கம்மல் பண்ணச் சக்தி இராது போனாலும், அவள் காதுக்கு இனிமை பயக்கும் சந்தங்களில் கவிதை பொழிய அவன் பின்வாங்கவில்லை. மாத்திரை வழு இருந்தாலும் பாவத்தில் மாற்றுக்குறை இராது.

பஞேயாரி, பார்வைக்கு ஒரு மல்லவீரனைப்போல் வாட்டஞ்சாட்டமாய் இருப்பான். அவனுக்குக் கோபம் வந்தாலோ வீடே கிடுகிடுக்கும். ஆனால் மிகவும் இளகிய நெஞ்சினன். அவனுடைய தம்பி வம்சிலால், சின்னப் பையனாக இருக்கும் ஸமயம் தாயின் அன்பு செலுத்தி அவனை வளர்த்து வந்தான். சீராட்ட வேண்டுமென்ற ஓர் அவா அவன் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது.

மனைவியின் மீதுள்ள நேயத்தோடு இந்த அபூர்வமான குணமும் பின்னி இருந்தது. அதாவது, சீராட்ட வேண்டுமென்ற நசை. அடர்ந்த மரநிழலூடே வழிதவறி நுழைந்த ஓர் ஒளிக்கதிர்போல் துளியுண்டு ஆளாக இருந்தாள் கிரணலேகா. அவள் குள்ளமென்று கணவனுக்குச் சற்று வருந்தமே. இந்தப் பொம்மை மனைவியை சிங்காரித்து அழகுபார்க்க வேண்டுமென்ற ஆசை. அவளைத் தொட்டு அணைத்துக்கொள்ளும் இன்பம் அன்று; அணிகள் பூட்டிக் கண்ணாரக் காணும் களிப்பே; ஒன்றைப் பல விதமாக்கும் ஆனந்தம். கிரணலேகாவுக்குப் பல வர்ண ஆடைகளை அணிந்து விசித்திர நகைகளைப் பூட்டிப் பார்க்க வேண்டுமென்ற ஆசையே. வெறும் ஸம்ஸ்க்ருத காவியங்களை மடமடவென்று கொட்டுவதனால் இந்த வேட்கை தணியவில்லை. அவனிடத்தில் ஆடவனுக்குரிய பிரபுத்துவம் நிரம்பி இருந்தும் அதை வெளிப்படுத்த முடியவில்லை.

இவ்வாறு தனவந்தனுக்குப் புதலவனாகப் பிறந்தும் உரிமை இழந்தவனாய் அவன் நிற்பதும், மனைவியோ லாவண்யம் பொங்க வாடுவதும் அந்தக் குடும்பத்தில் ஏதோ அனர்த்தம் விளையப் போவதைக் குறிப்பிட்டன.

ஸுகதா, செம்படவ மது என்பவனுடைய பெண்டாட்டி; மனோஹர பாபுவின்கீழ் குடி. ஒரு நாள் அவள்

அந்தப்புரத்துள் நுழைந்து கிரணலேகாவின் கால்களைப் பிடித்துக்கொண்டு ஓவென்று கதறத் தொடங்கினாள். விஷயம் இதுவே: சில வருஷங்களுக்கு முன்பு ஆற்றில் வலைபோட்டு மீன்பிடிக்கும் நிமித்தமாய்ச் செம்படவரெல்லாம் ஒன்றுகூடிப் பத்திரம் எழுதிக்கொடுத்து மனோஹரலாலின் கஜானாவிலிருந்து ஆயிரம் ரூபாய் கடன் வாங்கியிருந்தார்கள். மச்சம் நன்றாக விழுந்தால் வட்டியோடு அசலைப் பைசல் பண்ணுவதில் எந்தவிதமான கஷ்டமும் இராது; இதை எண்ணியே அதிக வட்டிக்குக் கடன் வாங்கத் துணிந்தார்கள். ஆனால் கடன் வாங்கிய வருஷம் மீன் அவ்வளவாக ஆதாயமில்லை. இப்படியே அடுத்தடுத்து மூன்று வருஷங்கள் ஏமாற்றம் அடைந்தனர்; நஷ்டம் ஏற்பட்டது. கடன் வேறு தலைக்குமேல் ஏறிக்கொண்டிருந்தது. இதில் கலந்து கையொப்பமிட்ட சில வலைஞர் தலைமறைந்து விட்டனர். மது என்பவன் ஊரில் குடியும் குடித்தனமுமாய் இருப்பவன். அவன் தலையில் விழுந்தது இந்தக் கடன் சுமை. தப்புவதற்கு வழி இல்லை என்று கண்டு அவன் மனைவி கிரணிடம் அடைக்கலம் புகுந்தாள். கிரணுடைய மாமியாரைப் பிடித்தால் காரியம் கைகூடாதென்று எல்லாருக்கும் தெரியும். கணக்குப் பார்க்கும் நீலகண்டனோ இம்மிகூட விட்டுக் கொடுக்கமாட்டான். முழு வட்டியும் கறந்து விடுவான், அவர்களிடமிருந்து. பனோயாரிக்கும் நீலகண்டனுக்கும் ஒற்றுமை போதாதென்பதை அறிந்தே மது தன் பெண்சாதியைச் சின்ன அம்மாளிடம் அனுப்பினான்.

பனோயாரி, நீலகண்டன் மீது எவ்வளவு சீறிய போதிலும் கடன் விஷயமாகத் தலையிடுவதற்கு அவனுக்கு யாதோர் உரிமையும் இல்லை என்பதைக் கிரண் அறிவாள். ஸுகதாவுக்கு இதை விளக்க அவள், "என்னால் என்னடீ ஆகும்? இதில் நான் நுழைந்தால் விரஸமாயிருக்கும்.

பெரியவர் இருக்கிறார். அவரைப் பிடியுங்கள். ஏதாவது நடக்கும்" என்றாள்.

இந்த முயற்சியை முன்னாலேயே செய்து பார்த்தாகி விட்டது. மனோஹரலாலிடம் முறையிட்டுக் கொண்டால், அவர் அதை விசாரிக்கும் பொறுப்பை நீலகண்டனிடமே தள்ளுவார். இதனால் அதிக ஸங்கடம் உண்டாகுமே ஒழிய வேறல்ல. இரண்டாந்தடவை 'அப்பீல்' செய்து கொண்டாலோ, யஜமானருக்குக் கடுமையான கோபம் வந்துவிடும். இந்தச் சள்ளையெல்லாம் தலையில் போட்டுக்கொண்டால் அப்புறம் ஸம்ஸாரத்தில் என்ன ஸுகம் இருக்கும் என்ற மனப்பான்மையே அவருக்கு.

கிரணிடம், ஸுகதா அழுது தன் குறையைச் சொல்லிக்கொண்டிருக்கும் சமயம் பக்கத்து அறையில் பனோயாரி துப்பாக்கியில் எண்ணெய் போட்டுத் துடைத்துக் கொண்டிருந்தான். எல்லாம் அவன் காதில் விழுந்தன. இந்த விஷயமாக உதவிசெய்யத் தனக்குச் சக்தி இல்லையென்று கிரண் மனம் இளகிச் சொல்லுவது பனோயாரியின் இதயத்தைத் துளைத்தது.

அன்று பகல் ஒரே இறுக்குமாயிருந்தது. ஸாயங்காலம் வெப்பம் நீங்கித் திடுமென ஒரு பெருங் காற்று எடுத்தது. தோப்பில் குயில் ஒன்று தொண்டை வறளக் கூவிக்கொண்டிருந்தது. மீண்டும் மீண்டும் அதே பல்லவியில் எங்கோ புலவியால் தனிமையில் வாடும் தன் பேடையை விளித்துக் கூவிற்று. திக்கு திசை யெல்லாம் வெறிகொள் பூவின் இன்மணம். ஜன்னலுக்குப் பக்கத்திலேயே புழைக்கடைத் தோட்டத்திலிருந்து முல்லையின் பிருது கந்தம் மனத்தைப் பரவசமாக்கியது. அன்று கிரண் மெல்லிய வர்ணத்தில் சேலை உடுத்திருந்தாள். அவள் கூந்தலில் மல்லிகைப்பூ முறுவலித்து மூச்சுவிட்

டது. காதல் கனிவதற்கு வஸந்தகாலம் எப்பொழுதுமே அனுகூலமாக இருக்கும். அழகிய வர்ணத்தில் மெல்லிய பட்டாடையும் கூந்தல் நிறையப் பரிமளிக்கும் மல்லிகைப் பூவும் அந்த உணர்ச்சியைப் பின்னும் தூண்டிவிட்டன. இரவு முதல் யாமம் கழிந்தது. பனோயாரியைக் காண வில்லை. இளமையின் கிண்ணம் வழிந்தொடியும், அது அவனுக்குச் சுவை தருவதாக இல்லை. மனத்துள் குறை இருந்தால் காதல் எழுப்பிய ஓர் இன்பலோகத்தில் கால் வைக்கமுடியுமா? பாவம், ஒரு செம்படவனுடைய துயரை நீக்க அவனால் இயலவில்லை. நீலகண்டன் அல்லவோ ஸர்வாதிகாரி! பேடியின் கழுத்திற்கு இந்த மல்லிகை மாலையை யார் தொடுத்தார்களோ?—இந்த வேதனை தான்.

முதலில் அவன் நீலகண்டனை வெளி அறையின் பக்கமாக வரவழைத்து, கடனுக்காகச் செம்படவனைப் பிடிக்க வேண்டாமென்று சொன்னான். "ஒழியட்டு மென்று இவனுடைய கடனை ரத்து செய்துவிடுகிறேன். அப்புறந்தானே தொல்லை. எல்லாரும் தம் கடனுக்கு அடிபோடுவார்களே. பெருத்த நஷ்டமல்லவோ ஏற்படும்" என்றான் நீலகண்டன். இதற்கு எதிரிடையாக வாதிக்கத் தெரியாமல் பனோயாரி வாயில் வந்தபடி திட்ட ஆரம்பித்தான். "அல்பனடா நீ" என்றான். "அல்பனாயிராது போனால் உங்களைப் போன்ற பெரிய மனுஷ்யர்களின் கால்கீழ் நான் விழுந்து கிடப்பானேன்!" என்றான் நீலகண்டன். "சொத்தைச் சுரண்டும் பெருச்சாளி" என்றான் பனோயாரி. "இருக்கலாம், பகவான் எனக்குக் கிருபை பண்ணவில்லை. பிறர் சொத்துக்குத்தான் நான் ஆசைப்படுகிறேன், போமே" என்று வசவுகளைப் பொறுத்துக் கொண்டான் நீலகண்டன். கடைசியில் போகும்பொழுது அவன், "வக்கில் காத்துக்கொண்டிருக்

இருர். மறுபடியும் ஏதாவது காரியம் இருந்தால் கூப்பிடுங்கள் வருகிறேன்" என்ருன்.

பனேயாரி, சிறிய தம்பி வம்சியைத் தன் கக்ஷியில் சேர்த்துக்கொண்டு தந்தையிடம் செல்வதென்று துணிந்தான். தான் தனியாகப் போனுல் காரியசித்தி ஆகாதென்று தெரியும் அவனுக்கு. காரணம், நீலகண்டன்மேல் முன் ஒரு தரம் புகார் செய்தபொழுது மனேஹரலால் காதில் போட்டுக்கொள்ளவே இல்லை. அதற்கு மாருகப் பிள்ளையின் பேரிலேயே சீறிவிழுந்தார். யஜமானருக்குப் பாசம், மூத்தமகன் மீதுதானென்று எல்லாரும் நினைத்திருந்தார்கள் ஒரு ஸமயம். ஆனுல் இப்பொழுது இளைய பிள்ளை வம்சியின் பேரில்தான் பக்ஷமெல்லாமென்று தோன்றியது. அதனுலேயே வம்சியைக் கைக்குள் போட்டுக்கொண்டு பனேயாரி வேலைசெய்யப் புகுந்தான்.

எதுவாயிருக்கட்டும், வம்சி நல்ல பிள்ளை. அந்தக் குடும்பத்தில் அவன் ஒருவனே இரண்டொரு பரீக்ஷைகளில் 'பாஸ்' செய்தவன். சட்டப் பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்தான். இரவும் பகலும் நெட்டுருத்தள்ளி மூளையில் அவன் எவ்வளவு ஏற்றிக்கொண்டானென்பது கடவுளுக்குத்தான் தெரியும். உடம்புமட்டும் துரும்பாக இளைத்துப்போனதுதான் மிச்சம்.

கோடை நாட்களில்கூட அவனது அறையின் சாளரங்கள் மூடியே கிடக்கும். பருவ மாறுதல்களைக் கண்டு அஞ்சுபவன். நன்ருகக் காற்று வீசினுல் அவனுக்கு விஷம்போல் இருக்கும். மேஜைமீது கெரொஸின் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. பக்கத்தில் ஒரு நாற்காலி மீது புத்தகக்குவியல். அலமாரியை நிரப்பிக்கொண்டு மருந்துச் சீசாக்கள்.

பனேயாரியின் யோசனைக்கு அவன் இணங்கவில்லை. அண்ணன் சீறி, "டேய் - அந்த நீலகண்டனுக்குத்தானே

பயப்படுகிருய்?" என்ருன். வம்சி கம்மென்று இருந்தான். நீலகண்டன் சார்பாகவே அவன் நிற்பதற்குக் காரணம் இருந்தது. கல்கத்தாவில் வசிக்கும்பொழுது, கைச்செலவுக்குப் பணம் போதாமற்போனல் நீலகண்டனைத் தூக்கி வைப்பான் வம்சி. தனக்குச் சமயத்தில் உதவிபுரிந்தவனை எப்படிப் பகைத்துக்கொள்வது?

"பயங்கொள்ளி, பேடி, நீலகண்டன் பின்னல்செல்லும் நாய்" என்றெல்லாம் வசவுகளை அடுக்கியதும், தந்தையின் முன் தானே நின்ருன். மனேஹரலால், தோட்டத்திலிருக்கும் குளத்தங்கரையில் தம் பருத்த உடலைத் திறந்துவிட்டுக் காற்று வாங்கிக்கொண்டிருந்தார். இச்சகம் பாடுவோர், அவரைச் சூழ்ந்து கோர்ட்டில் வழக்குத் தொடுத்த எதிரி ஜமீன்தார் பாரிஸ்டரின் குறுக்கு விசாரணையில் திக்குமுக்காடிய கதைகளையெல்லாம் அளந்துகொண்டிருந்தனர். இளவேனில் மாலையில் எழுந்த ஸுகமான தென்றலுக்கும் இந்தச் செய்தியைக் கேட்பதற்கும் அவருக்குத் தென்பாக இருந்தது.

திடுமெனப் பனேயாரி நடுவில் நுழையவே சுவை மிகுந்த இவர்களது சம்பாஷணை பாழாயிற்று. பீடிகை போட்டுத் தன் விஷயத்தை மெல்லப் பிரஸ்தாபிக்கும் வழியே தெரியாது, பனேயாரிக்கு. அவன் உரத்த குரலிலேயே நீலகண்டன் செய்த விஷமங்களை எடுத்துச் சொன்ஞன். "திருடன், யஜமானருடைய பணத்தைக் கவர்ந்து கொழுத்துவிட்டான்" என்றெல்லாம் நிந்தனை செய்தான். ஆனல் அத்தாட்சி எதுவுமே இல்லை; அவை உண்மையும் அல்ல. நீலகண்டனுடைய மேற்பார்வையினுல் ஹால்தார் குடும்பத்தாருடைய செல்வம் பெருகியது. இந்தக் குற்றச்சாட்டை யாரும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். நீலகண்டன் நல்லவனென்று நம்பியே அவனிடம் சொத்துக்களைக் கண்மூடித்தனமாக விட்டிருப்ப

தாக எண்ணம் பஞ்சூயாரிக்கு. இது அவன் கொண்டிருந்த பிரமையே. மஞேஹரலாலுக்கு நன்ருகத் தெரியும், ஸமயம் அகப்பட்டால் பயல் சுருட்டிக்கொண்டு போய் விடுவானென்று. ஆனல் அதற்காக அவனை நம்பாமலும் இல்லை அவர். காரணம்: நெடுநாளாக ஒரு குழப்பமும் இன்றிக் காரியம் நடந்துவருகிறது. அண்டி வாழ்வோர் எப்போதுமே யஜமானருடைய சில்லறை பாபத்துக்களில் கைவைத்தே ஜீவிப்பவர்கள். இந்த வித்தையில் தேர்ச்சி இராதுபோனல் யஜமானரின் சொத்துக்களை அவர்களால் எங்ஙனம் பரிபாலிக்க முடியும்? ராஜ்யபாரம் வகிப்பது தர்மபுத்திரனல் ஆகாத காரியம். மஞேஹர்லால் சினந்தவராய், "நீலகண்டன் என்ன பண்ணுகிருன், போகிருனென்று கவனிக்க நீ யார்?" என்றதும் அவர், "வம்சி இந்தமாதிரி எல்லாம் எனக்கு உபத்திரவம் கொடுக்கவில்லை. அவன், தான் உண்டு தன் படிப்புண்டு என்று இருக்கிருன்" என்ருர்.

எதிரி ஜமீன்தார் பரிதாபகரமான தோல்வியடைந்த கதைகூட அவருக்குச் சப்பிட்டுவிட்டது. அன்று வீசிய மந்தமாருதமும் மஞேஹரலாலுக்கு இன்பத்தைத் தரவில்லை. குளத்து நீரில் பளபளக்கும் நிலவொளியும் அவலமாயிற்று. அன்றைய மாலைப்பொழுது வம்சிக்கும் நீலகண்டனுக்குமே வீணுகக் கழியவில்லை. கதவை யெல்லாம் மூடிக்கொண்டு வம்சி இரவு வெகுநேரம்வரை படித்துக் கொண்டிருந்தான். நீலகண்டன் வக்கிலுடன் ஏதோ வழக்குச் சம்பந்தமாகப் பேசி முடிப்பதற்கும் பாதி ராத்திரி ஆவதற்கும் சரியாக இருந்தது.

கிரண் தன் படுக்கையறையில் இருந்த விளக்கை ஊதிவிட்டுச் சாளரத்தருகில் வந்து உட்கார்ந்தாள். வீட்டுக் காரியங்களை அன்று பொழுதோடேயே முடித்துவிட்டாள். இரவு சாப்பாடுதான் பாக்கி. பஞ்சூயாரி இன்னும்

சாப்பிடவில்லை. அவனை எதிர்நோக்கினாள். செம்படவ மதுவின் கவனமே அவளுக்கு இல்லை. அந்த ஏழையின் துயரைத் தன் கணவனால் தீர்க்க முடியவில்லையே என்ற கோபமோ தாபமோ அவளுக்குத் துளியளவும் இல்லை. புருஷன் திறமையுள்ளவனா என்று சோதனை பார்க்க வேண்டுமென்ற ஆவலும் இல்லை. குடும்பத்தின் கௌரவமே தன் கணவனுடைய கௌரவமும்; தன் புருஷன் அல்லவோ வீட்டிற்குத் தலைப்பிள்ளை. இதை விடப் பெருமை கொள்வதற்கு வேறு என்ன வேண்டும்? 'இவர்கள் அல்லவோ கோலாயிகஞ்ஜின் பிரக்கியாதி வாய்ந்த ஹால்தார் குடும்பத்தார்!' என்ற பெருமிதமே அவளுக்கு.

பனோயாரி இரவு நெடுநேரம் வெளி வராந்தாவில் உலவியதும் உள்ளே வந்தான். தான் இன்னும் சாப்பிட வில்லை என்பதை அடியோடு மறந்துபோனான். கிரணும் உணவுகொள்ளாமல் தனக்காக அத்தனை நாழிகை காத்திருந்ததுதான் அன்று விசேஷமாக அவனை வாட்டி யது. கிரண் இப்படியெல்லாம் உள்ளூறக் கஷ்டப்படு வதும், தான் உதவாச்சரக்காய் இருப்பதும் ஒத்துப்பட வில்லை. அவன் விழுங்கும் பிடியளவு அன்னமும் நெஞ்சில் வந்து அடைத்துக்கொள்வதுபோல் இருந்தது. பனோயாரி கொதிப்புடன், "எந்த வகையிலாவது இந்த மதுவை நான் காப்பாற்றாமல் போகிறேனா இல்லையா பார்" என்றான். காரணமற்ற இந்த வீறாப்பைக் கண்டு வியப்படைந்து கிரண், "சரிதான், நீங்கள் அவனை எந்த வழியில் காப்பாற்றுவீர்கள் சொல்லுங்களேன்?" என்றாள்.

மதுவின் கடனைத் தானே அடைத்துவிடுவதென்று சபதம் செய்துகொண்டானே தவிர அதை நடத்த அவன் கையில் காசு சிக்கினால்தானே? தன்னிடமிருந்த மூன்று

துப்பாக்கிகளில் ஒன்றையும் கையில் அணிந்திருந்த வயிர மோதிரத்தையும் விற்றுப் பணமாக்க உறுதிகொண்டான். ஆனால் கிராமத்தில் இவைகளுக்குச் சரியான விலை கொடுத்து யார் வாங்குவார்கள்? மேலும் ஊராரும் என்னவோவென்று பேசிக்கொள்ள இடம் உண்டாகும். ஏதோ சாக்குச்சொல்லிப் பனோயாரி கல்கத்தாவுக்குப் போனான். போகும்பொழுது மதுவைக் கூப்பிட்டு, "பயப்படாதே" என்று ஆறுதலும் சொன்னான்.

பனோயாரியின் உதவியை நாடினனே இந்த மது என்று நீலகண்டனுக்கு அவன்மீது கடுங்கோபம். செம்படவர்களைப் பலவிதமாக வாட்டி எடுத்துவிட்டான்.

கல்கத்தாவிலிருந்து பனோயாரி திரும்பின அன்று மதுவின் பிள்ளை ஸ்வரூபன் இரைக்க இரைக்க ஓடிவந்து ஐய்யோ முறையோ வென்று அழுதான். "என்ன நடந்ததடா?" என்று பனோயாரி விசாரித்தான். தன் தந்தையை முன்னாள் இரவே இழுத்துக்கொண்டு போய்ச் சாவடியில் அடைத்துவிட்டார்களென்ற செய்தியைச் சொன்னான் ஸ்வரூபவன். கோபத்தால் உடம்பெல்லாம் நடுங்கியது பனோயாரிக்கு. "சட்டென இப்பொழுதே தாணாவுக்குச் சென்று பிராது கொடு" என்றான்.

இது என்ன இழவு! தாணாவிலா பிராது செய்வது? அதுவும் நீலகண்டனுக்கு விரோதமாக? ஸ்வரூபனுக்குக் கைகால் ஆடவே இல்லை. கடைசியில் பனோயாரி தூண்டவே தாணாவுக்குச் சென்று தன் தந்தை அடைபட்டிருக்கும் விஷயத்தைச் சொல்லிப் பிராது செய்தான். போலீஸார் சரேலெனச் சாவடிக்கு வந்து அடைபட்டிருக்கும் மதுவை விடுவித்தனர். நீலகண்டனையும் மற்றும் சில நபர்களையும் பிடித்துக்கொண்டுபோய் மாஜிஸ்ட்ரேட் முன்னிலையில் கொண்டு நிறுத்தினர்.

மனோஹரலால் பெரிய சங்கடத்திற்கு ஆளானார். இச்சகம் பாடும் அவருடைய மந்திரிகள் போலீஸாருடன் கலந்துகொண்டு பணமாகக் கறந்தனர். கல்கத்தாவிலிருந்து ஒரு பாரிஸ்டரைத் தருவித்தார்கள். அனுபவம் முற்றாத பாரிஸ்டர். அவருக்கு எவ்வளவு 'பீஸ்' பேசினார்களோ அவ்வளவும் அவர் ஜேபிக்குள் போகவில்லை. நடுவிலுள்ள ஆட்கள் பாதி கபளீகரம் செய்துவிட்டார்கள். இந்தப் பக்கம் செப்டவனுக்காகத் திறமை வாய்ந்த ஒரு வக்கில் வாதாடினார். அவருக்குப் பணம் யார் அளித்தார்களென்பது யாருக்குமே தெரியாது. நீலகண்டனுக்கு ஆறுமாதம் சிறைவாசம் கிடைத்தது. ஹைகோர்ட்டிலும் 'அப்பீல்' தொடர்ந்தது. அங்கும் கீழ்க்கோர்ட்டின் தீர்ப்பே ஊர்ஜிதமாயிற்று.

மோதிரத்தையும், துப்பாக்கியையும் விற்றுவந்த பணம் விழலுக்குப் போகவில்லை. மதுவின் மானம் தங்கியது. நீலகண்டனும் மன்னுக்குப் போனான். ஆனால் இது நடந்தபின்னர் மதுவால் ஊரில் எப்படி நிலைத்திருக்க முடியும்? பனோயாரிமட்டும் தைரியம் சொல்லுவான்: "நீ இருடா; நான் இருக்கச்சே உனக்கு ஒரு தீங்கும் வராது" என்று. எந்தத் தைரியத்தின்மேல் இதைச் சொன்னான் என்பது அவனுக்குத்தான் தெரியும். ஒருவேளை தனக்குள்ள பௌருஷத்தை நினைத்தோ என்னவோ?

இந்த வழக்கிற்கெல்லாம் அடிப்படையாக நின்று தான் வேலைசெய்ததைப் பனோயாரி மூடிவைக்க விரும்பவில்லை. வெளியே சொல்லிவிட்டான். மஹாராஜர் செவிக்கும் எட்டியது. அவர் ஒரு வேலைக்காரன் மூலமாக இனிமேல் பனோயாரி தம் எதிரே தலை காட்டக்கூடாதென்று கடுமையான உத்தரவைப் போட்டார். அவர் சொன்னது சொன்னதுதான்.

கணவன் செய்த கூத்தைப் பார்த்து கிரண் திடுக்கிட்டுப்போனள் : ' இதென்ன அமர்க்களம்? வீட்டுக்குப் பெரியபிள்ளை, தந்தையோடு முகாலாபம் இல்லாமல் செய்துகொண்டாரே. அதற்குமேல் இப்படித் தன் சொந்த மனுஷ்யனையே சிறைக்கு அனுப்பவார் உண்டோ? அதனுல் தலைபிரக்கமல்லவா, தனக்குத் தான்சரி, குடும்பத்துக்குந்தான்? அந்த அல்பச் செம்படவனுக்காகவா ஊரார் சிரிக்க இந்தமாதிரி நடக்கவேண்டும் இவர்; வேடிக்கைதான் !'

வேடிக்கைதான் ! இந்தக் குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாக எத்தனையோ மூத்தபிள்ளைகள் தோன்றியுள்ளனர். நீலகண்டனைப் போன்ற கட்டிப்பிடிக்கும் ஆட்களும் இருந்தார்கள். அந்த நீலகண்டர்கள்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு அந்த மூத்தபிள்ளைகளெல்லாம் ' ஹாய்'யாக இருந்துவிட்டுக் குலகௌரவம் சுருங்காமல் காலமாயினர். ஆனல் இந்தமாதிரி விபரீதமான காரியம் ஒருநாளும் நடக்கவில்லை.

இன்று இந்தப் பெரிய குடும்பத்தின் மூத்த மகனுக்கு ஏற்பட்ட அபக்கியாதி, பெரிய மாட்டுப்பெண்ணுக்கு மானம்போகிற விஷயமாக இருந்தது. இதனுல் கணவன் மீது உண்மையில் வெறுப்பே கொண்டாள் கிரணலேகா. இத்தனைநாள் இல்லாமல், இன்று அணிந்திருந்த அந்த மெல்லிய வர்ணச்சேலையும் கூந்தலில் மணத்த மல்லிகையும் அவள்வரைக்கும் மழுங்கிப்போயின.

கிரணுக்கு வயதேறியும் மக்கட்பேறு இல்லை. இதே நீலகண்டன் ஒரு ஸமயம் யஜமானரின் விருப்பத்திற்கிணங்கப் பனேயாரிக்கு இன்னொரு பெண்ணை நிச்சயம் செய்திருந்தான். மூத்த பிள்ளைக்குப் புத்திரபாக்கியில்லாமல் போகலாமா? கிரணுக்கு இந்த ஏற்பாடு பிடிக்க

வில்லேதான். ஆனாலும் அவர்கள் செய்வதும் நியாயந் தானே என்று பட்டது.

நீலகண்டனை நொந்துகொள்ளாமல் தன் துர்ப்பாக் கியத்தை நினைந்து வருந்தினுள். பனேயாரிமட்டும் நீல கண்டனுக்குத் தீம்புவைக்காமல், இந்த விவாகம் தனக்குப் பிடிக்கவில்லே யென்று தந்தையிடம் நயமாகச் சொல்லி யிருந்தால் கிரண் அவனே மெச்சியிருப்பாள். மேலும் வம்சவிருத்தியில் அக்கறை கொள்ளாமல் பனேயாரி காலங் கடத்துவது கிரணுக்கும் பிடிக்கவில்லே. அவனுக் குப் பௌருஷம் இருக்கிறதோ இல்லேயோ என்றுகூட நினேத்தாள். பெரிய இடத்திற்குரிய உரிமை அல்ப சொல்பமான உரிமையா? தன்னேத் தான் நொந்துகொள் வதற்குக்கூட அவளுக்கு அதிகாரமில்லேயா? இளேயாள் எவள்வந்தால் என்ன? ஏழைச் செம்படவக் குடும்பம் எக்கதிபோனுல் என்ன அவளுக்கு?

எந்தவிதத்திலும் வீட்டில் தலேமை வகிக்கவேண் டியவன் பனேயாரி. அனவசியமான விஷயங்களே மேலே எடுத்துப் போட்டுக்கொண்டு, பரம்பரையாக வரும் ஓர் உரிமையைப் பனேயாரி அலக்ஷ்யம் செய்ததே கிரணுக்கு வேதனேயைத் தந்தது. தன் மைத்துனனிடம் இதைச் சொல்லி எத்தனேயோ தடவை அழுது இருக்கிருள். வம்சி அறிவாளி; சாப்பிட்ட சோறு அவனுக்கு ஜீரணமாகாது போனுலும், காற்று மாறும்பொழுது ஜலதோஷம் வந்தாலும் நிதான புத்தி உண்டு; ஆராய்ந்து யோசிப் பான்; கெட்டிக்காரன். சட்டப் புத்தகத்தில் அவன் கவனம்வைத்துப் படித்த அத்தியாயத்தண்டைப் புத்தகத் தைப் பிரித்தபடியே குப்புற மேஜைமீது வைத்துவிட்டு, கிரணிடம், "இது அசட்டுத்தனமே ஒழிய வேறல்ல" என்ருன். கிரண் கோதிப்புடன் தலேயை அசைத்து, "எனக்குத் தெரியும்; உங்கள் அண்ணு வெறுமென இருந்

தால் நல்லவர்தாம். ஆனல் வெறிபிடித்ததோ அவரைச் சமாளிப்பது கஷ்டமே. இதை நானே சொன்னல் நன்ருயிருக்குமா?" என்ருள்.

வீட்டுச் சிப்பந்திகள் தனக்கு மதிப்பு வைக்காது போனாலும், கட்டின பெண்டாட்டியான கிரணும் அவர்களுக்குச் சமமாகத் தன்னை இழிவாகக் கருதுவதுதான் பஞ்சாரியை மிகவும் குத்தியது. துக்கணியுண்டு சிறுக்கி, இன்னும் முற்றிவிடவில்லை. பூவினும் மெல்லியள். ஆந்தரிகமாகத் தன் மனவேதனையைச் சொல்லி அவள் இதயத்தைத் தன்பால் இழுத்துக்கொள்ள முடியவில்லையே?— ஆடவனுக்குரிய முழுவன்மையும் அவளிடம் பலிக்காமல் போயிற்று. அன்றுமட்டும் கிரண் அவனுடன் கலந்திருந்தால் அவனுடைய மனப்புண் எவ்வளவோ ஆறிவிட்டிருக்கும்.

மதுபோன்ற ஏழை ஒருவனைக் காப்பாற்றுவது ஸஹஜமாக யாரும் செய்யக்கூடிய கடமையே; நாலு பக்கமும் மனிதர்கள் குத்திக்கொடுக்கவே பஞ்சாரி அவனை ரக்ஷிக்கும் வேலையில் தீவிரமாக இறங்கினன். கடைசியில் இதே வெறிபிடித்துவிட்டது. ஸம்ஸாரத்தில் மற்ற எந்த அலுவலும் அவனுக்கு முக்கியமெனத் தோற்றவில்லை இந்தப் பக்கம் நீலகண்டன் ஜெயிலிலிருந்து விடுபட்டு உடல் இளைக்காமல் வந்துசேர்ந்தான், மாப்பிள்ளைமாதிரி. பழையபிரகாரமே தன் தொழிலில் இறங்கினன்.

மதுவை ஊரைவிட்டு ஒட்டாதுபோனல் ஊரார் முன்னே வர கூஞ்சியே இருக்காது நீலகண்டனுக்கு. மானத்திற்காக அவன் பட்கவில்லை. பிரஜைகள் அவனைக் கிள்ளுகீரையாக எண்ணிவிடுவார்களே. அடங்கி ஒடுங்கி இருக்கமாட்டார்கள். இதற்குத்தான் அவன் மதுவை வேரோடு கிளப்பிவிடக் கங்கணம் கட்டிக்கொண்டான்.

இந்தத் தடவை பஞேயாரி பதுங்கி இருக்கவில்லை. நீலகண்டனிடமே வெளிப்படையாக, "உன்ஞல் ஆனதைப் பார்" என்ருன். முதலில் மதுவின் கடன் அனைத்தையும் தானே அடைத்தான். நீலகண்டன் நயவஞ்சகமாக வேலைசெய்வதைப் பார்த்து வேறு வழியின்றி மாஜிஸ்ட்ரேட்டிடம் தானே நேரில் சென்று நீலகண்டன் மதுவின் குடித்தனத்தையே அழித்துவிடப் பார்க்கிருனென்று முறையிட்டான்.

பஞேயாரியின் நன்மையைக் கோருவோர், எவ்வளவு புகட்டிப் பார்த்தார்கள். அவன் செய்யும் இந்தக் காரியங்களால் மஞேஹரலாலின் ஆதரவையே இழக்க நேரிடுமென்றனர். ஆனல் பஞேயாரியின் தாய் உயிருடன் இருந்தாள். உற்ருர் உறவினர்கள் ஏசுவார்கள், மஞேஹர்பாபு ஏதாவது பதறிச்செய்தால். அதஞலேயே யஜமானர் கம்மென்றிருந்தார்.

இவ்வாறு நிற்கையில் திடீரென ஒருநாள் மதுவின் வீட்டு வாயிற்கதவு பூட்டிக்கிடந்தது. இரவோடு இரவாக அவன் தன் மனைவிமக்களுடன் எங்கே போஞனே ஒரு ஸமாசாரமும் தெரியாது. விஷயம் விரஸமாவதைக் கண்டு நீலகண்டனே கஜாஞவிலிருந்து பணத்தை எடுத்து அவனைக் குடும்பத்தோடு காசிக்கு ஒழித்துவிட்டான். போலீஸுக்கும் இது தெரியும். அதஞலேயே அமளிகுமளி இல்லை. நீலகண்டன் மாத்திரம் மிகவும் சாதுர்யமாக ஒரு சரடு விட்டான்—அமாவாசைக் கறுக்கலில் காளிக்குத் தன் பெண்டாட்டி பிள்ளைகளைப் பலிகொடுத்துவிட்டு அவர்களுடைய சவங்களை மது ஆற்று நீரில் அமிழ்த்து விட்டதாக. இதைக் கேட்டபோது எல்லார் குடலிலும் குலைப்பு மூண்டது. முன்னைவிட நீலகண்டனிடம் பொது ஜனத்திற்குப் பயபக்தி அதிகமாயிற்று.

பனேயாரிக்குத் தலைவலியாக இருந்த ஒரு தொல்லையும் நீங்கியது. அவன் நிம்மதி அடைந்தான். ஆனல் இல்வாழ்க்கை முன்போல அவனுக்கு சுவாரஸ்யமாக இல்லை.

ஒரு ஸமயம் வம்சியின்மேல் உயிராக இருந்தான் இன்று அவன் வேற்று மனிதனகவே தோற்றினன்- அசல் ஹால்தார் குடும்பத்துப் பீஜமாகவே. மனைவி கிரண், இளமை மலருமுன் அவன் நெஞ்சைக் கொள்ளை கொண்டிருந்தாள். இன்ருே அந்தப் பழைய கிரணை இல்லை. அவளுக்கும் இந்த ஹால்தார் குடும்பத்தின் சாயம் ஏறி விட்டது. அவள் பொருட்டல்லவா ஒரு ஸமயம் நீலகண்டன் மூலம் பண்ண நகை சரியாக அமையவில்லையென்று பனேயாரியின் உள்ளம் வெதும்பியது! காளிதாஸன், அமருகவி, பில்ஹணன் போன்ற கவிகளின் இனிய சுலோக ரத்தினங்களைக் கொண்டு தன் காதலியின் உள்ளத்தைக் குளிர்வித்தான். அதெல்லாம் பழங் கதையாய் முடிந்தது. அவை ஹால்தார் குடும்பத்து மாட்டுப் பெண்ணுக்குச் சிறிதளவும் பொருந்தவில்லை. அந்தோ, குளிர் பூந்தென்றல் அதன்பாட்டிற்கு வீசும். இரவு நேரங்களில் தண்ணிய மழைத்தாரை யாழின் இசைபோல் ஒலிக்கும். காதல் அவிந்த ஓர் உள்ளத்தில் இவ்வினிய ஓசைகள் அழுகைபோலவே எதிரொலித்தன.

காதல் கனிவதற்காகப் பெரும்பான்மையோர் காத்திருக்க மாட்டார்கள். ஸம்ஸாரம் பண்ணுவதற்குத் தகுந்த அளவு இருந்தாலே போதும், மனிதர்களுக்கு. ஆனல் சிலருக்கு இதற்குமேலும் வேண்டியிருக்கிறது. முட்டையினுள் குறுகிய சுற்றத்தில் பறவையின் கருவாக அடங்கி இராமல் ஓட்டிலிருந்து பிறிக்கொண்டு, இறகடித்துத் தன் உணவைத் தானே தேடிக்கொள்ளும் மாப்பறவை ஒத்தவர்கள் இந்த இனத்தார். பனேயாரி

இந்த வேட்கையுடன் பிறந்தவன். பௌருஷத்தின் மூலம் காதலை நுகர்வதற்கே அவன் உள்ளம் அலைந்தது. ஆனால் எந்த மூலைக்கு ஓடிப்போனாலும் அங்கே இந்த ஹால்தார் குடும்பம் மதில்போல் போகவிடாமல் தடுத்தது.

பழையவிதமே அவனுடைய நாட்கள் சென்றன. முன்னைவிட வேட்டைமேல் ஊக்கம் செலுத்தினான்; இதைத்தவிர வெளிக்கு அவன் வாழ்வில் பெரிய மாறுதல் எதுவும் தென்படவில்லை. வேளைக்குச் சாப்பிடப் போவான். போஜனத்திற்குப் பின் ஸாவகாசமாய்ச் சற்று நேரம் மனைவியோடு பேசுவான். செம்படவ மதுவை மட்டும் கிரண் முழுவதும் மறந்துவிடவில்லை. கணவன் கௌரவம் இழந்து இன்று நிற்பதற்குக் காரணம் அவனே என்பது அவள் எண்ணம். நடுநடுவே அவளுடைய நாக்கு, தீவிர விஷத்தைக் கொட்டிவிடும். மதுவை ஒரு தரம் வாயாரச் சபிக்காது போனால் அவளைப் பாட்டில் போடாது; அதுவும் அவள் கணவன் மனம் குளிர்ந்திருக்கும் ஸமயம். இரண்டொரு தடவை பனேயாரி அவளை இந்த விஷயமாக எதிர்த்தான். இதனால் அவளுக்குள்ள உக்கிரமே அதிகமாயிற்று. அதற்குமேல் வாய்கொடுக்க அவனுக்குத் தைரியமில்லை. இவ்வாறு பனேயாரி நியமப்படி தன் இல்லறத்தை நடத்திவந்தான். கிரணுக்கு இதனால் குறையோ கஷ்டமோ எதுவும் உண்டாகவில்லை. ஆனால் பனேயாரியின் வாழ்க்கை உள்ளுக்குள் வறண்டு வெளுத்துச் சூம்பிக்கொண்டிருந்தது.

அதே ஸமயம், சின்ன மாட்டுப்பெண், வம்சியின் மனைவி கர்ப்பவதியென்று தெரிந்துவிட்டது. குடும்பத்தவர் முகம் மலர்ந்தது. கிரண் மூலம் வம்சம் விருத்தியடையாத குறையை இது ஒருவாறு நீக்கியது. ஷஷ்டித்

தாயின் கிருபையால் தலைச்சன் ஆணாகப் பிறக்க வேண்டுமென்பது எல்லார் அவாவும்.

ஆண் மகவையே ஈன்றாள் அவள். வம்சி காலேஜ் பரீக்ஷையில் தேறியதோடு குடும்பப் பரீக்ஷையிலும் முதல் 'மார்க்கே' வாங்கினான். அதனால் அவனையே எல்லாரும் நோக்கினர். அவன்மீது குடும்பத்தவர் செலுத்திய அன்பிற்கும் ஆதரவுக்கும் எல்லையே இல்லை.

குழந்தை வீட்டாருக்குக் கண்மணியாக இருந்தது. கிரண் அதைக் கணமேனும் கீழே விடமாட்டாள். குழந்தையைச் சீராட்டுவதில் செம்பட்டவன்மேல் இருந்த துவேஷத்தைக்கூட மறந்துவிட்டாளென்றால் சொல்லுவானேன்!

பனோயாரிக்கும் குழந்தைகளென்றால் பிராணன். மத்துமதுக்கென்றிருக்கும் குட்டி ஜீவன்களின்மீது அவனுக்குக் கரைகாணாத பாசம், இளக்கம். ஒவ்வொரு மனிதனிடமும் அவனுடைய இயல்பிற்கு மாறானதொன்றை கடவுள் அமைத்து விடுகிறார். இராதுபோனால் இவ்வளவு பாசமும் இரக்கமும் குடிகொண்ட பனோயாரியின் உள்ளம் பசிவேட்டைமீது செல்வானேன்?

கிரணும் ஒரு மகனைப் பெற்றெடுப்பாளென்று ஓர் ஆசை வெகுநாட்களாகப் பனோயாரியின் உள்ளத்துள் குமிழ்த்துக்கொண்டே இருந்தது. இதனாலேயே வம்சிக்குப் பிள்ளை பிறந்ததென்று கேட்டதுமே அவன் சற்றுப் பொருமை கொண்டான். ஆனால் இந்த இழிவுப் பான்மையை ஒதுக்கத் தாமதமாகவில்லை. அவனுக்கென்னவோ குட்டிக் குழந்தையின்மீது அளவுகடந்த அன்பு. ஆனால் கிரண் அதைச் சுற்றிக்கொண்டு தனக்கே சொந்தமென்று நினைப்பதுதான் அவனுடைய அன்பின் வேகத்திற்கு முட்டுக்கட்டையாக இருந்தது. வரவரப்

புருஷன் மனைவி இவர்களது கூட்டம் விலகிக்கொண்டே வந்தது. இத்தனை நாட்களுக்குப் பிறகு கிரனுக்கு அவன் மனத்தை முழுவதும் கவரும் ஒரு பொக்கிஷம் கிடைத்து விட்டதாகவே எண்ணிக்கொண்டான். இதுவரை அவனே தன் மனைவியின் நெஞ்சு நிறையக் குடிபுகுந்திருந்தான். எல்லாப் போகமும் அவனுடையவே; தடுப்பார் இல்லை. ஆனால் இப்போது வீட்டின் உரிமையாளன் பிறந்து விடவே அவனுக்குரிய இடம், அந்த மாடி அறை ஒன்று தான். கிரனுடைய தன்மையான பற்று இவ்வளவு தூரம் படர்வதைக் கண்டு பசேனுயாரி தலையை அசைத்துத் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான்:—"இவனுடைய உள்ளத்தைத் தாண்ட என்னால் ஆகவில்லை. முடிந்த மட்டும் பார்த்தேன். ஊற்றுச் சுரக்கவில்லை."

குலக்கொழுந்து ஒன்று தோன்றிய பின்னரே கிரன் வம்சியோடு அதிகமாகப் பழக ஆரம்பித்தான். ஏதாவது யோசனை கேட்கவேண்டி இருந்தால் வம்சியிடமே அவ னுக்கு ஆர்தரிகம். நுண்ணிய அறிவும், நோய்ந்த உடம்பும் படைத்து உயிருக்கு வாதாடும் அந்தக் கோழையின்மேல் பசேனுயாரிக்கு அருவை கொஞ்சம் கொஞ்சமாக வளரத் தொடங்கியது. வம்சியே எல்லா விஷயத்திலும் சிறந்தவ னென்று வீட்டிலுள்ளவர்கள் நினைப்பதைக்கூட சகித் துக் கொண்டான். ஆனால் இன்று தன்னைவிட அவனையே உயர்வாகக் கிரன் கருதியதால் பசேனுயாரிக்கு வாழ்க்கை கசந்து விட்டது.

பரீக்ஷைக்காக வம்சி கல்கத்தாவுக்குப் போயிருந்தான். திடீரெனச் சமாசாரம் வந்தது, அவனுக்குக் கடுமையான காய்ச்சல் என்று. அவன் பிழைப்பது அரிதென்று டாக் டர்களெல்லாம் சந்தேகப்பட்டார்கள். பசேனுயாரி துவே ஷத்தை யெல்லாம் மறந்து தன் தம்பிக்கு நல்ல வைத்தியம் செய்ய ஓடினான். ஆனால் அவன் தேறவில்லை. தம்பியின்

மரணம் பஞ்சோயாரியின் மனத்துள் உறுத்திய முள்ளை நீக்கியது. அவன் கண்ணும் கருத்துமாய் வளர்த்த அருமைத் தம்பி அல்லவா வம்சி? அவனுடைய பிரிவை நினைத்துக்கொள்ளும் பொழுதெல்லாம் கண்ணீர் உகுத்தான் பஞ்சோயாரி.

திரும்பிவந்ததும் அவன் தம்பியின் குழந்தையை வாஞ்சையுடன் வளர்த்துப் பெரியவனாக்க வேண்டுமென்று உறுதிகொண்டான். ஆனால் கிரண் தன் புருஷனை நம்பிக் குழந்தையை விடவில்லை. குழந்தையின் பேரில் பஞ்சோயாரிக்கு முதலில் ஒரு வெறுப்பு இருந்ததை அவள் உணர்வாள். கணவனைப்பற்றி ஒரு கெட்ட அபிப்பிராயமே அவள் மனத்தில் பதிந்துவிட்டது. குலத்துக்கு ஒரே விளக்கு வம்சியின் சிசு. அதற்குள்ள மதிப்பு யாருக்குத் தெரிந்திருந்தாலும் பஞ்சோயாரிக்கு மட்டும் தெரியாதென்பது அவள் கொள்கை. அவளுக்குத் தன் கணவனிடத்தில் பயமே, அவனுடைய பாழும் கண் பட்டுக் குழந்தைக்கு ஏதாவது கெடுதல் விளையுமோ என்று. மைத்துனரும் இறந்துவிட்டார், தனக்கோ ஸந்தான பாக்கியம் ஏற்படுமென்ற நிச்சயமில்லை. அதனாலேயே இந்தக் குழந்தையை எப்படியாவது வளர்த்து ஆளாக்க வேண்டுமென்பது கிரணுடைய நோக்கம். பஞ்சோயாரியின் நல்ல எண்ணத்தில் மண் விழுந்தது. அவனைக் குழந்தையண்டை நெருங்க விடவில்லை கிரணலேகா.

வீட்டிலுள்ளவர்களும் கட்டிக் கவிந்து நிற்கவே வம்சியின் பிள்ளை வளரலானான். ஹரிதாஸ் என்று பெயர் வைத்தார்கள். ஊட்டி ஊட்டி வளர்க்கவே அவன் நோயும் நொடியுமாகவே இருந்தான். காற்று கரப்பு, கண்ணிரை இவைகளின் வாடை படாமலிருக்க பிள்ளையின் உடம்பெல்லாம் தாயத்தும் ரக்ஷா கவசங்களும் கட்டியிருந்தார்கள்.

இவ்வளவு பாதுகாத்தும் பஞ்ஞையாரியினிடம் எப்பொழு தாவது ஹரிதாஸ் ஓடிவந்து விடுவான். பெரியப்பாவின் குதிரைச் சவுக்கைச் சுழற்றுவதில் அவனுக்கோர் ஆனந் தம். பஞ்ஞையாரியும் அவனுக்கு வேடிக்கை காட்டத் தோல் சவுக்கை விய்க் விய்க்கென்று விளாசுவான். ஒவ் வொரு நாள் குதிரைமீது அவனை ஏற்றிவிடுவான். வீட்டி லுள்ளவர்களெல்லாம், “இது என்ன காரியம், குழந்தை விழுந்து விடுவானே!” என்று அலறிப் புடைத்துக் கொண்டு வருவார்கள். சில சமயம் பறவை சுடும் துப் பாக்கியை அவன் கையில் விளையாடக் கொடுப்பான். கிரண் அதைப் பார்த்ததும், “அம்மா” என்று விரைந்து பிள்ளையை இழுத்துக்கொண்டு போய்விடுவாள். வீட்டார் இந்தமாதிரி பயங்கர விளையாட்டுக்களிலிருந்து தடுக்கத் தடுக்கக் குழந்தை ஹரிதாஸுக்கு அந்த வழியிலேயே புத்தி சென்றது. இந்தமாதிரி வேடிக்கைகளைக் காட்டும் பெரியப்பாவிடம் அவனுக்குப் பற்றுதலும் அதிக மாயிற்று.

நெடுநாட்களுக்குப் பிறகு ஹால்தார் குடும்பத்தில் யமன் நடமாடத் தொடங்கினான்; முதலில் மனோஹர லாலின் ஸம்ஸாரம் பழுத்த சுமங்கலியாகவே சொர்க்கம் புகுந்தாள். நீலகண்டனும் மீண்டும் ஒருமுறை பஞ்ஞையாரிக் காகப் பெண்ணைப் பார்த்து முஹூர்த்த நாள் கூட வைத்து விட்டான். திடீரென மனோஹரலால் இறந்துபோனார். ஹரிதாஸுக்கு எட்டு வயது நிரம்பியது. சாவுக்கு முன் னால் மனோஹரலால் ஒரே குல ஸிந்துவான ஹரிதாஸைக் கிரண், நீலகண்டன் இவர்கள் பாதுகாப்பிலேயே வைத்து விட்டுச் சென்றார். பஞ்ஞையாரியைக் கூப்பிட்டு ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

பெட்டியிலிருந்து உயிலை வெளியே எடுத்தபொழுது, சொத்தெல்லாம் ஹரிதாஸின் பெயருக்கே எழுதி வைத்

திருந்தது. உயிரோடு இருக்கும்வரை பனேயாரிக்கு மாதம் இருநூறு ரூபாய் கொடுப்பதென்றும் உயிலில் கண்டிருந்தது. நீலகண்டனை எக்ஸிக்யூடராக (செயலாளனாக) நியமித்திருந்தார் மனோஹரலால். உயிர் இருக்கும் வரை அவனே குடும்பத்தின் ஸகலவிதமான காரியங்களையும் செய்வதற்கு பூர்ண அதிகாரம் பெற்றிருந்தான்.

தன்னிடம் பழகப் பிள்ளையை விட இவர்கள் மறுப்பது ஒரு புறம் இருக்கட்டும்; சொத்தைக்கூடத் தன் கண்காணிப்பில் வைக்காமல் மோசம் செய்துவிட்டார்களே என்று மனம் புழுங்கினன் பனேயாரி. அவனுக்கு ஒரு ஹக்குமில்லே. நன்ருகச் சாப்பிடலாம், அறையில் பஞ்சணைமீது படுத்து நன்ருகத் தூங்கலாம். இவையே அவனுக்கு அளித்திருந்த உரிமை. தாங்கமுடியவில்லை பனேயாரியால். கிரணிடம் வந்து, "நீலகண்டன் கொடுக்கும் ஜீவனும்சத்தில் நான் வாழ விருப்பவில்லை. இந்த வீட்டைத் துறந்து விட்டு நான் கல்கத்தாவுக்குப் போகிறேன்" என்ருன்.

"ரொம்ப அழகுதான். வீட்டுக்குப் பெரியவர் நீங்கள். ஹரிதாஸ் உங்களுடைய பிள்ளைக்குச் சமம். அவனுக்கே சொத்தை எழுதிவைத்திருக்கிறதென்ரு உங்களுக்குக் கோபம்?" என்ருள் கிரண்.

'ஐயோ, கணவனுக்கு ஏனே கடின நெஞ்சம்! கொழுந்துபோல குடும்பத்திற்கு ஒரே பிள்ளை; அவன் மேலா இவ்வளவு பொருமை?'—மாமஞர் உயில் எழுதிய விதம் கிரணுக்குச் சரியென்றே பட்டது. பனேயாரியின் கையில் சொத்து மட்டும் சிக்கியிருந்தால் துன்மார்க்கரோடு சேர்ந்துகொண்டு ஊதிவிட்டு ஹால்தார் குடும்பத்தை நடுத்தெருவில் நிற்க வைப்பானென்றே திண்ணமாக நம்பினுள். மாமஞர் குலத்திற்கு ஹரிதாஸ் ஒரு விளக்குபோல். சொத்து என்ற எண்ணெய் இருந்தால்

தானே அது நீடித்து ஒளிரும்? அதற்கு ஏற்ற காவலன் நீலகண்டனே!

அந்தப்புரத்துள் நுழைந்து ஒவ்வோர் உடைமையையும் ஜாபிதாவில் குறித்துக்கொண்டு, பெட்டி பேழைகளை பூட்டி 'ஸீல்' வைத்து விட்டான் அவன். கடைசியில் கிரனுடைய அறைக்கு வந்து பஞ்சயாரி அன்றுடம் உபயோகிக்கும் சாமான்களைக் கணக்கெடுத்தான்.

நீலகண்டன் அந்தப்புரத்திறுள் இவ்வளவு தாராளமாக வந்து போவதைப் பார்த்தும் கிரன் துளிக்கூடக் கூச்சங்கொள்ளாமல் இருப்பதுதான் பஞ்சயாரியை அறுத்தது. இறந்துபோன மாமனாரை நிமிஷத்திற்கு நிமிஷம் ஸ்மரித்து மூக்கைச் சிந்திக்கொண்டே அவள் ஒவ்வொரு சாமானையும் நீலகண்டனுக்குக் காட்டினாள். பொறுமை இழந்த பஞ்சயாரி சிங்க கர்ஜனை செய்து நீலகண்டனை விளித்து, "நாயே, என் அறையை விட்டு வெளியே நட" என்றான்.

நீலகண்டன் வணக்கமாகவே, "பாபு, நான் என்ன தவறு செய்தேன்? கர்த்தாவின் உயில் பிரகாரம் நான் இந்தமாதிரி காரியத்தைச் செய்யவேண்டி யிருக்கிறது. உடைமைகள் யாவும் ஹரிதாஸுக்குச் சொந்தம்; அதனால் தான்" என்றான்.

கிரண் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டாள்: "பாருமே, உங்கள் ஜபம் பலிக்குமா இனிமேல்? ஹரிதாஸ் எனக்கு அயலா? நம் குழந்தை அவன். அவன் சொத்தைக் கணக்கெடுப்பதில் மானம் போகிற விஷயம் என்ன இருக்கிறதோ தெரியவில்லை. செத்துப்போகும்போது நம் உடைமை கூட வருமா? இன்றைக்கு இராதுபோனாலும் நாலு பிள்ளைகள் பிறந்தால் பாகப் பிரிவினையாகி விடுகிறது."

அன்று தொட்டு வீட்டின் தரைகூட முள் தைப்பது போல் இருந்தது, பஞேயாரிக்கு. அவன் நெஞ்சம் விரிந்தது. கோபம் தலைக்கெழுந்தது. தான் வீட்டைத் துறந்துபோவதும், நீலகண்டன் ஹாய்யாக ஆட்சி புரிவதும் அவனுக்குச் சகிக்கவில்லை. ஏதாவது பெரிய தீம்பு செய்தால்தான் அவன் மனம் அமைதியுறுமெனத் தோன்றியது. "பார்க்கிறேன், இந்தப் பயல் சொத்தைக் காப்பாற்றுகிற லக்ஷணத்தை!" என்று உறுமினன்.

வெளியே வந்து தன் தந்தையின் அறையினுள் நுழைந்தான். அங்கே யாருமில்லை. எல்லாரும் பின் கட்டில் நகை நட்டு, பாத்திரம் பண்டங்களை கணக் கெடுப்பதில் ஊக்கமாயிருந்தனர். எப்பொழுதும் உஷாராக இருப்பவன்கூட என்றைக்காவது ஏமாந்திருப்பான். யஜ மானருடைய தஸ்தாவேஜுகளை வைக்கும் பெட்டியைப் பூட்ட மறந்துவிட்டான் நீலகண்டன். உயிலும் அந்தப் பெட்டியில்தான் இருந்தது. அதன் பேரில்தான் இந்தக் குடும்பத்தின் ஆஸ்திபாஸ்தியெல்லாம் நின்றன.

பஞேயாரிக்கு இந்தத் தஸ்தாவேஜுகளைப்பற்றி அக்கறையே கிடையாது. ஆனால் இவை பிற்காலத்தில் ஏதாவது வழக்கு மூண்டால் பயன்படுமென்பது மட்டும் தெரியும் அவனுக்கு. பெட்டியிலுள்ள பத்திரங்களைத் தன் உருமாலில் சுருட்டி வைத்துக் கொண்டதும், தோட்டத் திற்கு அருகிலுள்ள ஒரு சம்பக மரத்தின்கீழ் அமர்ந்து சிந்தனையில் ஆழ்ந்தான்.

அடுத்த நாள் பண்ணவேண்டிய சிராத்தச் சடங்கு களைப் பற்றி ஆலோசனை செய்ய நீலகண்டன் பஞேயா ரிடம் வந்தான். முன்னைவிட அதிகமாக வணக்கம் நீலகண்டனுடைய உடல் வளைவில் தென்பட்டது. ஆனால் அவன் முகத்தில் மட்டும் வேறொரு பாவம் கூத்தாடியது. பஞேயாரியின் வயிறு எரிந்தது. இப்படிக் கூழைக்

கும்பிடு போட்டுத் தன்னை அவன் ஏளனம் செய்வதாகவே பனேயாரிக்குப் பட்டது. நீலகண்டன், "பெரியவருடைய சிராத்தம்—" என்று எடுத்தான். அவன் மிகுதி வார்த்தையை முடிக்கவிடாமல் பனேயாரி, "அதைப்பற்றி எனக்கென்ன?" என்றான்.

நீலகண்டன், "இதென்ன வார்த்தை, பாபு! தாங்கள் தாமே கர்மம் செய்ய வேண்டியவர்?" என்றான்.

"பெரிய உரிமை! கர்மம் செய்வதற்குத்தானே உரிமை! இதற்குமட்டும் நான் அவசியமாக்கும்! வேறு எதற்கும் எனக்கு உரிமை கிடையாது! போடா போ! எரிச்சலைக் கிளப்பாதே!" என்றான் பனேயாரி.

போகும்பொழுது நீலகண்டன் தன் பின்னால் கேலியாகச் சிரித்தானென்றே பாவித்துக் கொண்டான் பனேயாரி. ஏன், வீட்டு வேலைக்காரர்களும் தன்னைப் பரிகாசம் செய்வதாகவே அவனுக்கு உள்ளூறப் பட்டு விட்டது. வீடிருந்தும் வீடிழந்தவன் போலவே நின்றான் பனேயாரி; அவன் நடுத்தெரு ஆண்டியுமல்ல. என்னே, விதியின் கூத்து!

பத்திரங்கள் அடங்கிய முடிச்சுடன் வெளியே புறப்பட்டான். ஹால்தார் குடும்பத்தாருடைய எதிரிகள் பிரதாப புரத்திலிருக்கும் பானர்ஜிகள். இந்தத் தஸ்தாவேஜுகளை அவர்களிடம் கொடுத்து விடுவதென்று துணிந்தான். குடும்பச் சொத்து எப்படிப் போனால் என்ன அவனுக்கு?

அவன் வெளியே கால் எடுத்து வைத்ததும் மாடியிலிருந்து ஹரிதாஸின் மழலைக் குரல் கேட்டது: "பெரியப்பா! நீ வெளியிலே போறயே; என்னையும் அழைத்துக்கொண்டு போகமாட்டாயா?"

"பாலகனுடைய போதாத காலமே இந்தமாதிரி அவனைச் சொல்லத் தூண்டியது. நான்தான் போய் விடுகிறேனே; இந்தப் பையனையும் அழைத்துக்கொண்டு

தலை மறந்து விடுகிறேன். குடும்பம் நாசமாகப் போகட்டுமே" என்று எண்ணிக்கொண்டான்.

தோட்டத்தைத் தாண்டி அவன் இரண்டு அடி வைத்ததும் ஊர்க்கோடியில் பெருத்த கூச்சல் கேட்டது. யாருடைய குடிசையோ திகுதிகுவென்று எரிந்தது. இந்தமாதிரி சந்தர்ப்பங்களில் சும்மா நின்று வேடிக்கை பார்ப்பது பனையாரியின் இயல்பே அன்று. பத்திரக்கட்டை சம்பகமரத்தடியில் போட்டுவிட்டுத் தீயை அணைக்க ஓடினான்.

திரும்பி வந்தபொழுது உருமால் முடிச்சைக் காணவில்லை. சுறுக்கென அவன் உள்ளத்தில் வேதனை துளைத்தது. 'ஆகா! கடைசியில் நீலகண்டன் அல்லவோ கண்ணில் மண்ணைத் தூவி விட்டான். யார் குடிசை எரிந்துபோனால் எனக்கு என்ன வந்தது? நான் ஏனே போனேன்? பயல் சமயம் பார்த்து இடுக்கிவிட்டான் தஸ்தாவேஜுகளை. உம்" என்று பொருமினான்.

புயல் வேகத்துடன் கஜானா இருக்கும் இடத்திற்கு வந்தான். நீலகண்டன் சாவதானமாகவே பேரேடுகளை மூடிப் பீரோவில் வைத்துக்கொண்டிருந்தான். அந்தப் பீரோவில்தான் தஸ்தாவேஜுகளை அவன் மறைத்திருக்க வேண்டுமென்று நினைத்தான் பனையாரி. ஒன்றும் சொல்லாமல் அலமாரி, பெட்டியெல்லாம் துருவிப் பார்த்தான். குரல் அடைக்க நீலகண்டனை விளித்து, "நீ தோட்டத்துப் பக்கமாகப் போயிருந்தாயா?" என்றான்.

"ஆமாம்; சில நாழிகைக்கு முன் அந்தப் பக்கம் வந்திருந்தேன். தாங்கள் அவசரமாக எங்கோ போய்க் கொண்டிருந்தீர்கள். என்னவென்று பார்க்க நானும் உங்கள் பின்னாலேயே வந்தேன்" என்றான்.

பனையாரி, "ஏதாவது காகிதச் சுருள் அடங்கிய உருமாலைக் கண்டாயா?" என்றான்.

ஸாதுவைப்போல் நீலகண்டன், "நான் எதையும் பார்க்கவில்லையே" என்முன்.

"பொய் சொல்லுகிருய்; உனக்கு இது நல்லதல்ல. மரியாதையாகக் கொடுத்துவிடு, அந்தக் காகிதங்களை', என்முன் பனேயாரி.

மிரட்டிப் பார்த்தானே தவிரக் காணமற்போன பொருள் இன்னதென்று வெளிப்படையாகச் சொல்ல அவன் தயங்கினுன். அது அவன் களவாடிய பொருள் அல்லவா? இதனல் தன்னுடைய பிசகை நினைத்துக் கொண்டு வருந்தினுன்.

கஜானு அறையில் இந்தமாதிரி பேய்க்கூத்து ஆடி விட்டு, மீண்டும் ஒரு முறை சம்பக மரத்தின்கீழ்ச் சென்று தேடினுன். பெற்ற தாயின்மீது ஆணை வைத்து, "இதை நான் தேடிப் பிடிக்காமல் விடப்போவதில்லை" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். தேடுவதெப்படி என்ற விஷயத்தை அவன் முற்றும் ஆலோசிக்கவில்லை. அதற்குப் போதிய புத்திக் கூர்மையும் அவனுக்கு இல்லை. சண்டித்தனமான குழந்தைகளைப்போல் தரையை உதைத்து, "கண்டுபிடிப்பேன் இதை! கண்டு பிடிப் பேன்" என்று கூச்சலிட்டான்.

ஓய்ந்துபோய் மரத்தடியிலேயே உட்கார்ந்து விட் டான். யாருமே இல்லை; அவனுக்குச் சொந்தமானவர் எவருமே இல்லை. வாழ்க்கையோடு அவன் போராட வேண்டியதே. கௌரவம் போய்விட்டது. அன்பு இல்லை; நேயம் இல்லை; ஒன்றுமே இல்லை இந்த உலகில். மரணம் ஒன்றுதான்.

இவ்வாறு அவன் மனம் அலைபாய மிகவும் சளைத்த வனுய் மரத்தடியிலேயே தூங்கிப் போய்விட்டான். விழித்துக்கொண்டபொழுது தலைமாட்டண்டை ஹரிதாஸ் இருப்பதைக் கண்டான். பெரியப்பா எழுந்திருக்கவே

அவனும் எழுந்து, "பெரியப்பா, நீ எதை கெட்டுப் போக்கிவிட்டாய்?" என்ருன்.

பனேயாரிக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லே. அவன் மேலும், "நான் கொண்டுவந்து கொடுத்தால், எனக்கு என்ன கொடுப்பாய்?" என்ருன்.

வேறு ஏதாவதுதான் இருக்குமென்று எண்ணினுன் பனேயாரி. "என்னிடம் இருப்பதைக் கொண்டுவந்து தருகிறேனே" என்று ஹரிதாஸ் சொன்னபொழுது பையன் ஏதோ பரிகாசம் செய்தானென்றே நினேத்தான் பனேயாரி.

அச்சமயம் ஹரிதாஸ் தன் துணி மறைவிலிருந்து உருமாலில் சுற்றியிருக்கும் காகிதச் சுருளே வெளியே எடுத்தான். அந்த உருமாலில் புலியின் வர்ணச் சித்திரம் வரைந்திருந்தது. அதை எத்தனேயோ தடவை பனேயாரி அவனுக்குக் காட்டி மகிழ்வித்திருக்கிருன். இந்த உருமால் மீது பையனுக்கு லோபம். தீ அணேக்கும் பரபரப்பில், வேலேக்காரர்கள் வெளியே போயிருந்த ஸமயம் ஹரிதாஸும் வெளியே ஓடிவந்தான். மரத்தடியில் விழுந்துகிடந்த உருமால்கட்டு தற்செயலாக அவன் கண்ணில் பட்டது. புலியின் பொம்மை இருந்ததால் பெரியப்பாவினுடையதென்று பத்திரப்படுத்தினுன்.

பனேயாரி ஹரிதாஸைத் தன் மார்போடு அணேத்துச் சற்று நேரம் இன்பத்தில் ஆழ்ந்திருந்தான். தாரை தாரையாகக் கண்ணீர் பெருகிற்று. பழைய ஸம்பவம் ஒன்று அவன் மனக் கண்முன் வந்து நின்றது. ஒரு தரம் அவன் ஒரு நாயை, அது பிடிவாதம் பிடித்ததென்று நன்ருகச் சாட்டையைக் கொண்டு வீரிவிட்டான். அந்தச் சாட்டை திடீரென ஒரு நாள் காணுமல் போயிற்று. எங்கே தேடியும் அகப்படவில்லே. தொலேந்தது தொலேந்ததுதானென்று நினேத்துக்கொண்டிருக்கும் ஸமயம் பாவம்

அந்த நாய் சாட்டையை எங்கிருந்தோ தேடி வாயில் கவ்விக்கொண்டு வந்து அவன் எதிரே நின்று வாலை ஆட்டியது. அன்று முதல் அவன் சாட்டையைக் கையால் கூடத் தொடவில்லை.

பஞ்சாரி பெருகிவரும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "ஹரிதாஸ்! கண்ணு! உனக்கு என்ன வேண்டும் சொல்லு?" என்றான்.

"அந்தச் சவுக்கத்தை எனக்குக் கொடுத்துவிடேன், பெரியப்பா" என்றான் ஹரிதாஸ்.

"வாடா, என் முத்தே! தோள் மேல் ஏறிக்கொள்" என்றான் பஞ்சாரி.

ஹரிதாஸைத் தோள்மீது ஏற்றிக்கொண்டு அந்தப் புரத்துள் சென்றான் பஞ்சாரி.

படுக்கையறைக்குச் சென்று பார்த்தான். கிரண் படுக்கைகளை வெயிலுக்காக மாடி முற்றத்தில் பிரித்துவிட்டுத் திரும்பினாள். பஞ்சாரிமீது சவாரி செய்யும் பையனைப் பார்த்து அவள் திடுக்கிட்டு, "ஐயோ! அவனை இறக்கி விடுங்கள். அவனை உங்களால் சமாளிக்க முடியாது. தொப்பென்று கீழே போட்டு விடுவீர்கள்" என்றாள்.

பஞ்சாரி கிரணையே கூர்ந்து நோக்கி, "பயப்பட வேண்டாம். நான் ராக்ஷஸனா என்ன, அவனைக் கீழே தள்ளி விடுவதற்கு?" என்றான்.

தோள்மீது குதிக்கும் ஹரிதாஸை கீழே இறக்கிக் கிரணின் மடியில் விட்டான். பத்திரச் சுருளை அவள் கையில் ஒப்படைத்து, "இவை ஹரிதாஸுக்குச் சொந்தம். காப்பாற்றி வை" என்றான்.

"எங்கிருந்து கிடைத்தது உங்களுக்கு?" என்றாள் கிரண் வியப்புற்று.

"நான் களவாடினேன்" என்றான் பஞ்சாரி நிச்சலமாய்.

உடனே ஹரிதாஸைத் தன்பக்கமாக இழுத்து மார் போடு தழுவிக்கொண்டு, "இந்தாடா என் கண்ணு, உன் பெரியப்பாவின் ஆஸ்தியின்மேல் நீ ஆசை வைத்தாய்; எடுத்துக்கொள்" என்றதும் புலி பொம்மை போட்ட அந்த உருமாலைத் தம்பியின் பிள்ளையிடம் சேர்ப்பித் தான்.

அப்புறம் ஒருதரம் கிரணை ஏற இறங்கப் பார்த்தான். முன்போல் அவள் கொடியிடையாளாக இல்லை. பருத்து விட்டாள். முகப்பொலிவும் அழிந்துகொண்டு வந்தது. மோகிப்பதற்கு அங்கு ஒன்றுமே இல்லை. ஹால்தார் குடும்பத்தின் பெருதனம் அவள் உடலெங்கும் ஊதிப் புடைத்தது. சொத்தையெல்லாம் துறந்தமாதிரியே அவ னுக்கென அவன் மனத்துள் தொகுத்திருந்த ஒப்பற்ற காவியத் துணுக்குகளுக்கும் தாரை வார்த்துவிட வேண்டி யதுதான்.

அன்று இரவே பனேயாரி காணமற் போய்விட்டான். ஒரு துண்டு காகிதத்தில் மட்டும் தான் உத்தியோகம் சம்பா திக்கப் போய்விட்டதாக அவன் எழுதியிருந்தான்.

தந்தையின் அபரக்கிரியைகள் முடியும் வரை அவன் காத்திருக்கவில்லை. இதற்காக அவனை ஊராரெல்லாம் சாபம் இட்டனர்.

# நல்ல வரன்

என்னுடைய தசாபுக்தியில் குருபலம் ஒருநாளாவது வந்ததாகத் தெரியவில்லை; ஆனால் ஒரே ஸமயம் அந்தக் குருவின் பார்வை என் இதய கமலத்தின்மீது விழுந்தது. அப்போது எனக்கு வயது பதினாறு. அப்புறம் என்ன? நல்ல தூக்கத்திலிருந்து திடுக்கிட்டு விழித்துக்கொண்ட பின் தூக்கம் எங்கேயாவது பிடிக்குமா? என்னுடைய நிலையும் அந்தமாதிரியே ஆயிற்று. என் நண்பர்களுள் சிலர் இரண்டாந் தாரங்கூடக் கொண்டார்கள். ஏன் மூன்றாவதுங்கூடத்தான். அப்படியிருக்கையில் நான் மாத்திரம் பிரம்மசரிய வகுப்பில் கடைசிப் பையனாக ஸம்ஸார சூன்யமாய் நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கிறேன்.

பதினாறு வயதில் நான் பிரவேச பரீக்ஷையில் தேறினேன். விவாகத்திற்கோ அந்தம் பரீக்ஷைக்கோ வயதைப் பற்றி அக்கறை இல்லை. புத்தகங்களை கெட்டுருத் தள்ளும் வாடிக்கை இல்லை எனக்கு; மனோ வியாதியோ உடல் நோயோ ஒன்றும் என்னை வருத்தவில்லை. எலி எதைக் கண்டாலும் கடித்துத் தின்றுவிடும். நானும் அச்சடித்த புத்தகம் ஏதாவது கையில் சிக்கினால் ஓர் எழுத்துவிடாமல் படித்துவிடுவேன். படிக்கத் தகுந்த புத்தகங்களைவிடப் படிக்கத் தகாத நூல்களே உலகத்தில் ஏராளம். நாம் வசிக்கும் இந்தப் பூவுலகு நக்ஷத்திர லோகத்தில் துளியுண்டு. அதைவிட எத்தனையோ மடங்கு பிரம்மாண்டமான சூரிய மண்டலங்கள் இருக்கின்றன. அதுபோலவே பள்ளிப்படிப்புக்கு அவசியமான புத்தகங்கள் என்னிடம் கம்மி; படிப்புக்கு அனாவசியமானவைதாம்

அதிகம். என்னுடைய ஸம்ஸ்க்ருத ஆசிரியர் என் பிற்காலத்தைப்பற்றி மோசமாக நினைத்தபோதிலும் நான் பரீக்ஷையில் தேறிவிட்டேன்.

என் தகப்பனார் ஒரு டெபுடி மாஜிஸ்ட்ரேட். அந்த ஸமயம் நாங்கள் ஸாதகவீராவிலோ, ஜாஹனாபாத்திலோ இருந்தோம். ஆரம்பத்திலேயே உங்களுக்கு அறிவித்து விடுவது மேல் அல்லவா? என்னுடைய சரிதையில் இடம் பொருள் ஏவல் எதையும் உண்மைக்கு ஒத்திருக்குமா வென்று எதிர்பார்க்க வேண்டாம். சுவையைவிட விஷயத்தை அறிய விரும்புவோர் ஏமாற்றமே அடைவர். அப்பா ஏதோ 'கேஸ்' விஷயமாக எங்கோ வெளியூருக்குப் போயிருந்தார். அம்மா என்னவோ ஒரு விரதம் அனுஷ்டித்தாள். தக்ஷிணையும் வடை பாயசமும் வாங்கிக்கொள்ள ஒரு பிராம்மணன் வேண்டியிருந்தது. இந்த மாதிரி பாரமார்த்திக விஷயங்களில் என் அன்னைக்குச் சகாயம் புரிபவர் என்னுடைய ஸம்ஸ்க்ருத ஆசிரியரே. இதற்காக அம்மா அவரிடம் மிகவும் சிரத்தை வைத்திருந்தாள். அப்பாவின் கொள்கையோ இதற்கு நேர்மாறானது. அன்று சாப்பிட்டானதும், தக்ஷிணையெல்லாம் உபாத்தியாயருக்கு வழங்கி ஆயிற்று. நோன்பு பலன் தராமல் போகவில்லை. விஷயத்தை வெளிப்படையாகச் சொல்லி விடுகிறேனே. நான் காலேஜில் சேர்வதற்காகக் கல்கத்தாவிற்குச் செல்லும் நாள் நெருங்கியது. இந்த ஸந்தர்ப்பத்தில் மைந்தனை விட்டுப் பிரியும் துயரத்தைப் போக்கிக் கொள்ள ஏதாவது வழி தேட வேண்டாமா? சின்னஞ் சிறுக்க ஒரு மாட்டுப்பெண் அம்மா பக்கத்திலேயே இருந்தால் அவளுக்கு எவ்வளவோ ஆறுதலா யிருக்கும் அல்லவா? பண்டிதரின் பெண் காசிசுவரி இதற்கு ஏற்றவளாயிருந்தாள். முதல் காரணம்: சின்னக் கன்னிகை. இரண்டாவது: நல்ல மாதிரி. இன்னொரு விஷயம்.

எனக்கும் அவளுக்கும் துவாதசப் பொருத்தங்களும் சரியாக அமைந்திருந்தன. அது தவிர, ஓர் ஏழைப் பிராம் மணன் பெண்ணைக் கட்டிக்கொள்வது புண்ணியம் மிகுந்த காரியமாயிற்றே!

அம்மாவின் மனம் அலை பாய்ந்தது. பெண்ணைப் பார்க்கவேண்டுமே என்று ஜாடையாக அவள் சொன்ளுளோ இல்லையோ பண்டிதர் உடனே, "அதற்கென்ன; நாளைக்கே ஆத்துக்கு அழைச்சுண்டு வந்துவிடறேன். பேஷா பாருங்களேன்" என்ருர். சொன்னபடியே செய் தார். அம்மாவுக்கு ஏன் பிடிக்காது போகும்? பிடித்தம் ஒரு பக்கம் இருக்கட்டும். புண்ணியம் இருக்கிறதே. அதனலேயே பெண்ணுக்கு மதிப்பு உயர்ந்தது. "இவ் வளவு லக்ஷணம் வாய்ந்தால் போதும். குழந்தைக்கு என்ன மூளி?" என்று என் தாயார் சொன்னதில் இந்த அர்த்தமே ஒலித்தது. அப்படிப் பெண் கண்ணுக்கு அழ காகத்தான் இல்லை. ஆனல் அம்மா திருப்தி அடைவதற் குக் காரணம் இருந்தது.

மெல்ல இந்த ஸமாசாரம் என் காதுக்கு எட்டியது. ஐயோ, கடைசியில் தாது ரூபங்களைப் பற்றி மடக்கி மடக்கிக் கேள்விகள் போடும் அந்தப் பயங்கர மனுஷ் யனின் பெண்ணுக்கும் எனக்குமா முடி போடுகிருள், கடவுளே! எந்த விதத்திலும் எங்களுக்குப் பொருத்த மில்லையே. இந்த வேதனையே என்னை வாட்டியது. கதை களில் வருவது போல், வேற்றுமை உருபு, வினை எச்சம் யாவும் தம் இலக்கண வடிவைக் களைந்துவிட்டு லக்ஷணம் நிரம்பிய இளவரசியாக மாறுவதுதான் விந்தையிலும் விந்தை.

அம்மா, ஒருநாள் என்னைத் தன் அறையினுள் அழைத்து, "ஸனு! வாத்தியாரகத்திலிருந்து முந்திரிப் பருப்புப் பணியாரம் வந்திருக்கிறது. வா தின்னு"

என்றாள். என் தாயாருக்குத் தெரியும் என்னை வளையக்கட்டும் வழியெல்லாம். இந்தப் பணியார ஆசை காட்டுவதெல்லாம் வெறும் சாக்கு. அந்தச் சிறுபெண் காசிசுவரி அம்மா மடிமீது உட்கார்ந்திருந்தாள். இப்பொழுது எனக்கு அவ்வளவு தெளிவாக இல்லை ஞாபகம். சவரிக்குச்சு வைத்து அவளுடைய கூந்தலை முடிந்திருந்தார்கள். உடம்பில் ஒரு 'வெல்வட்' ரவிக்கை இருந்ததாகக் கவனம். நீலமும் சிவப்பும் கலந்திருந்தன. ரவிக்கையின் கையில் 'லேஸ்' தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டது. எனக்கு ஞாபகம் பென் மாநிறம். அடர்த்தியான கூட்டுப் புருவம். கண்களில் மருட்சியோ எந்த அபூர்வமான பாவமோ ஒன்றுமே இல்லை. கூச்சம் இராமல் என்னை நேராக நோக்கினாள் அந்தக் கன்னிகை. முகத்தில் மற்ற அம்சங்கள் எந்தமாதிரியென்று வர்ணிப்பதற்குப் போதிய ஞாபகசக்தி எனக்கு இல்லை. ஒன்று கூறுவேன்: அந்த ஸமயம் பிரம்மா, தாம் நிருமித்த அந்த உருவத்திற்குத் தீர்மான மான கடைசல் பிடிக்க வில்லை என்றுதான். அவருக்கு வழுமூட்டும் வேலை பாக்கி இருந்தது. எப்படி இருந்தாலும் என்ன, மொத்தத்தில் பார்வைக்குப் பெண் அடக்கம் ஒடுக்கமாகத் தான் இருந்தாள்.

எனக்கு உள்ளுக்குள் பொங்கிப் பொங்கி வந்தது; 'ஜடை குச்சு மாட்டிக்கொண்டு, ரவிக்கை போட்டிருக்கும் பொம்மை எனக்குத்தானே சொந்தமாவாள். நான் அல்லவோ அவள் கணவன், தெய்வம் எல்லாம்.'—நான் தலையை அசைத்து என் சம்மதத்தைத் தெரியப்படுத்த வேண்டியதுதான். காரியம் முடிந்த மாதிரியே. இந்தச் சக்தியை இறைவன் ஆண்பிள்ளை ஒவ்வொருவருக்கும் அளித்துள்ளான். அம்மா எந்த மண்ணில் உருவான ஸ்திரீ ஜன்மமென்பதை நான் உணராமல் இல்லை. அப்பாவுக்கு இந்த விரத உபவாஸம், பட்டினி பாரணை என்றால்

விஷம். ஆனால் சாவித்திரி நோன்பை மட்டும் அவர் ஏளனமாகக் கருதுவதில்லை. அந்த நோன்பில் பூஜை யெல்லாம் யாரை உத்தேசித்து? இதை நினைத்துக் கொள்வதில் அவருக்கு ஒரு சந்தோஷம். அம்மா அவரை மனப்பூர்வமாக நேசித்தாள். என் தந்தைக்குப் பிடிக்காத விஷயங்கள், அவருக்கு எதைக் கண்டால் எரிச்சல் வரும் என்பனவெல்லாம் அவளுக்கு மனப்பாடம். ஜாக்கிர தையாக நடந்து கொள்வாள். அவள் தனக்கு அடங்கிய சரக்கு என்ற எண்ணத்தில் அவருக்கு அமோக திருப்தி. எப்படி வேண்டுமானாலும் அவளை ஆட்டிவைக்க முடியு மென்ற பௌருஷத்தின் செருக்கு. விரதாதிகளில் தேவ தைகள் ஸந்துஷ்டி அடைவது ஒரு பக்கம் இருக்கட்டும். முதலில் வீட்டிலுள்ள தெய்வம் கணவன். அவன் உத்தரவு கொடுத்தால்தானே மற்ற ஏற்பாடெல்லாம். அந்த மண் ணில் உருவாகிய நான் எப்படி இருப்பேன்? அம்மா எவ் வளவு தூக்கி வைத்துப் பேசியபோதிலும், அந்தப் பெண் ணின் அழகோ குணமோ என் இதயத்தைத் துளியேனும் கவரவில்லை. பதினான்கு வயது நிரம்பிய வாலிபனான எனக்கு ஜோரெல்லாம் நல்ல மாம்பழம் சாப்பிடுவதில் தான்; மங்கையை ஒருத்தியை மணப்பதில் அல்ல.

அன்று காசீசுவரிக்குத் தெரியாது, நான் அவளுக்கு எந்த உறவில் நிற்பவனென்னும் விஷயம். ஆனால் அவள் தன் வீட்டிற்குச் சென்றதும் தெரிந்துகொண் டிருப்பாள் என்பதில் சந்தேகமில்லை. எப்போதாவது நான் கண்ணில் பட்டுவிட்டால், அவள் ஓடிப்போய்ப் பதுங் கிக் கொள்வாள். வெட்கம் பாவம்! அவள் இவ்வாறு நடந்துகொள்வதைப் பார்க்க எனக்குத்தான் வேடிக்கை. 'இந்த உலகில் நானல்லவோ பலான இடத்திற்குப் பலான ஆஸாமியாக வரப்போகிறவன்! இந்தப் பெரிய காரியத் தைச் செய்வதற்குத்தானே சிருஷ்டிப் பொருள்களில் நான்

உயர்ந்த இனத்தில் உதித்துள்ளேன்?'—இவ்வாறு எண்ணிக்கொண்டு திரிவேன். என்னைக் கண்டு மருண்டு ஓடும் ஓர் ஆத்மா இருந்ததே; அதுதான் நான் ஆச்சரியப்படுவது. காசிசுவரி நடந்துகொண்ட விதம், நானே அவள் கணவன், அவளுக்கே சொந்தமானவன், அவளையே உறுதியாக மணக்கப்போகும் பிள்ளை என்ற விஷயத்தைப் பறை சாற்றியது.

இத்தனை நாள் துளியுண்டு பையனாக இருந்தவன் திடீரென கொடிப்பொழுதில் இவ்வளவு கௌரவம் நிரம்பிய பதவிக்கு வந்த அதிர்ச்சியில், என் மூளை சில தினங்கள் வரை குழம்பியே இருந்தது. சமையல் சரியாக இல்லை என்றோ அல்லது வேறு எதற்காகவோ அப்பா அம்மாமேல் எரிபறியென்றிருப்பார். அவரைச் சாந்தப் படுத்த என்னவெல்லாமோ வழி தேடுவாள். அதே மாதிரி என்னைச் சமாதானப்படுத்தக் காசிசுவரியும் யுக்திகளைக் கையாள்வாளென்று கல்பனைக் கண்ணால் காண்பேன். சட்டென என்னவோ வெறி பிடித்துவிடும் அவள் மீது ரொக்கமாக ஒரு பெருந்தொகையைப் பாங்கில் கட்டிவிடுவேன். அவள் உடம்பை வயிர நகையால் இழைப்பேன். ஒரு நாள் எதற்காகவோ அவளைக் கடிந்து கொண்டேன். அவள் சாப்பிடவே இல்லை, அன்று முழுவதும். நான் அறைக்குள் வந்து பார்த்தபொழுது அவள் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் வடிந்தது. அந்த உருக்கமான காட்சி என் மனத்தை எவ்வளவோ அசைத்துவிட்டது. 'சே! எதற்காக அவள் மனத்தைப் புண்படுத்தினேம்' என்றாகிவிட்டது எனக்கு. இவை யாவும் உண்மை யென்று நினைக்கிறீர்கள்? என் மனத்துள் எழுந்த சித்திரங்களே தவிர வேறல்ல; காசிசுவரியை நான் மணந்துகொண்டால், என் ஸம்ஸாரம் எப்படி இருக்குமென்பதன் சித்திரங்கள். குழந்தைப்பிராயம் முதற்கொண்டே என் காரியத்தில்

நான் கருத்தாயிருப்பவன். அப்பா எனக்குக் காட்டிய பழக்கம் அது. என் அறையை நானே சுத்தம் செய்துகொள்வேன். என் துணிமணிகளை என் கையைக்கொண்டே ஒழுங்காக வைத்துக்கொள்வேன். ஆனால் என் மனத்துள் தெளிவாகப் பதிந்து இருந்த ஒரு சம்பவ சித்திரத்தைப் பற்றி இங்கே கூறுகிறேன்: என் மூதாதையர் வரலாற்றில் இதைப்போன்ற சம்பவம் ஒரு காலத்தில் நடந்தது. என்னுடைய கல்பனையை சுயமானது என்று சொல்வதற்கில்லை. அந்தச் சித்திரம் இதுவே: ஒரு ஞாயிற்றுமை, பகல் போஜனத்திற்குப் பின் நான் படுக்கையில் தலையணைமீது பாதி சாய்ந்தவண்ணம் பத்திரிகை ஒன்றைப் படித்துக்கொண்டிருந்தேன். கையில் 'குடாக்கு' குழாய் இருந்தது. சட்டெனத் தூக்கம் கண்ணைச் செருகவிட்டது. அந்தக் கலக்கத்தில் குழாய் கைநழுவிக் கீழே விழுந்தது. வராந்தாவில் காசிகவரி வண்ணனிடம் அழுக்குத் துணிகளைப் போட்டுக் கொண்டிருந்தான். அவனைக் கூப்பிட்டேன். அவன் ஓடிவந்து குழாயை எடுத்து என் கையில் கொடுத்தான். அவனைப் பார்த்து நான், "இதோ பார்; இடதுபக்கமாக இருக்கும் அந்த அலமாரியில் நீல அட்டைபோட்ட தடிமனான இங்கிலீஷ் புஸ்தகம் இருக்கும்; அதை எடுத்துக் கொண்டு வா" என்றேன். நீல அட்டை போட்ட புத்தகம் ஒன்றைக் காசிகவரி கொண்டு வந்து கொடுத்தான், "இதுவல்ல; இன்னும் மொட்டாவாக இருக்கும். அதன் முதுகில் பொன் எழுத்துப் பொறித்திருக்கும்; தெரிந்ததா?" என்றேன். இந்தத் தடவை ஒரு பச்சை அட்டைப் புஸ்தகத்தை எடுத்துவந்தான். நான் அதைத் தொப்பென்று தரைமீது வீசி எறிந்து விட்டுக் கோபத்துடன் எழுந்தேன். காசிகவரியின் முகம் இவ்வளவுண்டாயிற்று. பலபலவென்று கண்ணீர் உதுத்தான். நானே போய் அலமாரியைப் பார்வை இட்டேன். நான்

கேட்ட புஸ்தகம் வேறோர் அலமாரியில் இருந்தது. புஸ்தகத்தைக் கையில் எடுத்துக்கொண்டு ஒன்றும் பேசாமல் படுக்கையில் சாய்ந்தேன். தவறு என் பேரில் என்பதை நான் அவளிடம் சொல்லவில்லை. பாவம், அவள் குனிந்த முகம் நிமிராமல் வண்ணானுக்குத் துணிகளைப் போட்டுக் கொண்டிருந்தாள். தன்னுடைய அறிவின்மையால் கணவனுக்கு வீண் தொந்தரை கொடுத்ததை எண்ணி அவள் வருந்தினாள் போலும்!

அப்பா, ஒரு களவு வழக்கைக் கவனிக்கும் வேலையில் மும்முரமாக இருந்தார். நாட்கள் இவ்வாறு சென்றன. இந்தப் பக்கம் ஸம்ஸ்க்ருத உபாத்தியாயர் என்னிடம் விநயமாகவே நடந்து கொண்டார். மிகவும் ஆந்தரிகமாகச் சம்பாஷித்தார்.

களவு வழக்கு முடிந்து அப்பாவும் வீட்டிற்குத் திரும்பினார். எனக்குத் தெரியும், அம்மா ஸமயம் பார்த்து என் விவாகத்தைப்பற்றி மெல்ல எடுப்பாளென்று. அப்பாவுக்குப் பிடித்த பக்ஷண தினுசுகளை அவள் பண்ணியதன் மர்மம் இதுவேதான்.

ஸம்ஸ்க்ருத பண்டிதர் ஒரு பிசுனாறி என்பது அவரது கொள்கை. இது தெரியும் என் தாய்க்கும். பண்டிதரை அவளும் ஒப்புக்குத் தூஷித்துவிட்டு அவருடைய ஸம்ஸாரத்தையும், முக்கியமாக அவருடைய பெண்ணின் குண விசேஷங்களையும் புகழ்ந்திருப்பாள், ஆனால் துரதிர்ஷ்டவசம் பண்டிதர்வாள் சும்மா இருக்கவில்லை. 'விவாகம் நிச்சயமாகிவிட்டது. முஹூர்த்தந்தான் பார்க்க வேண்டும்' என்றெல்லாம் ஊரில் செய்தியை விதைத்து விட்டார். 'சிரஸ்தாதாரே தம் பெரிய பங்களாவை விவாகத்திற்கு தருவதாக வாக்களித்து விட்டார். அவர் தாமே இதில் சிரத்தை எடுத்துக்கொண்டு செய்கிறார். வக்கீல்களெல்லாம் சந்தா சேர்த்துத் தாமே முன்நின்று இந்தத் திரு

மணத்தை நடத்தி வைப்பதாகக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிருர்கள்' என்றெல்லாம் சொல்லிக்கொண்டு திரிந்தார். அந்த ஊர் ஆரம்பப் பள்ளியின் ஸெக்ரிடரி வீரேசுவர பாபுவின் மூன்ருவது பிள்ளை மூன்ரும் வகுப்பில் படிப்பவன்; சந்திரனுக்கும் ஆம்பலுக்கும் உருவகம் வைத்து, மணமக்களுக்கு வாழ்த்துச் செய்யுள் ஒன்று எழுதிவைத்தான். ஸெக்ரிடரி அந்த வாழ்த்துப்பாவைக் கண்ட இடத்திலும் அரங்கேற்றி வந்தார். இதனுல் மணமகனைப்பற்றி உயர்வான அபிப்பிராயம் ஜனங்களிடையே பரவியது.

அப்பா திரும்பிவந்து வீட்டில் கால்வைத்த உடனே இந்தச் சுப விசேஷங்கள் அவர் செவிக்கு எட்டின. அப்புறம் நடந்ததென்ன? அம்மா அழுது ஆர்ப்பாட்டம் செய்து பார்த்தாள்; கதறிப் பார்த்தாள்; பட்டினி போட்டாள். அப்பா கலங்கவே இல்லை. வீட்டில் உள்ளவர்களுக்கெல்லாம் வசவும் திட்டும் கிடைத்தன. இரண்டொரு வேலைக்காரர்கள் சீட்டு வாங்கிக் கொண்டார்கள். நீதிஸ்தலத்தில் மடமடவென்று எத்தனையோ தாவாக்கள் 'டிஸ்மிஸ்' ஆயின. பண்டிதர் செய்த புரோகிதத்தொழிலின் வாயில் மண்விழுந்தது. பாவம், உத்தியோகம் போனதோடு நிற்காமல், ஜடைகுச்சுப் பின்னலழகியான தம் பெண்ணோடு எங்கோ தலைமறைந்தார். விடுமுறை கழிவதன் முன்பே அம்மாவிடமிருந்து என்னைப் பிரித்துக் கல்கத்தாவுக்கு அனுப்பிவிட்டார் அப்பா. வெடித்துப் போன பலூன்போல் வான் அளாவிய என் ஆசை எல்லாம் காற்ருய்ப்போய் உள்ளம் வெம்பி நின்றேன்.

## 2

என் விவாக முயற்சிக்கு முதலிலேயே இந்தவிதமான தடங்கல் விளைந்தது. அப்புறம் எத்தனையோ இடங்கள்

வந்தன. முறிந்து போயின. முதல் கோணலோ இல்லை யோ? அதை யெல்லாம் இங்கே விவரமாகச் சொல் வதற்கு இடமில்லை. முயன்று வீணான இரண்டொரு விருத்தாந்தங்களை மட்டும் கூறுவேன். இருபது வயது நிரம்புவதற்குள், நான் முழு இறகு முளைத்த எம். ஏ., ஆயினேன். படித்துப் படித்துப் பார்வை மங்கிவிடவே கண்ணாடி அணிந்து கொண்டேன். திருகிவிட்டுக் கொள்ளும் அளவிற்கு மீசை அரும்பி இருந்தது. அந்த ஸமயம் என் தகப்பனார் நோவாகாலியிலோ எங்கோ வேலைபார்த்து வந்தார். சொற்கடலுள் பாய்ந்து பட்டத் தைப் பெற்றேனே; இனிமேல் பொருட் கடலுள் மூழ்கி, நிதியம் தேடவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அப்பா, எனக்கு ஒரு நல்ல உத்தியோகம் ஸம்பாதிக்கத் தமக்குத் தெரிந்த துரை யாராவது இருக்கிறானா வென்று தேடினார். அவருக்கு உதவி செய்யக் கூடியவர்கள் ஒருவராவது இம்மையில் இருந்தால்தானே! சற்றுப் பழக்கமுள்ளவர் களில் ஒருவன் அப்பொழுது 'பென்ஷன்' வாங்கிக்கொண்டு சீமைக்குப் போய்விட்டான். மற்றொருவன் ஏதோ உத்தி யோகத்திற்கு மாற்றலாகிப் பஞ்ஜாபில் இருந்தான். மீதி பேரெல்லாம் வெறும் வாய்ப்பந்தல் அடிப்பவர்கள். நெருங்கும் பொழுது கையை விரிக்கும் பேர்வழிகள். என் பாட்டனார் தாசில் வேலை பார்த்தபொழுது இவ் வளவு கஷ்டமில்லை உத்தியோக வேட்டையில். அந்தக் காலத்தில் சலுகையாவும் பரம்பரையாக வரும். வேலை பார்க்க வேண்டியது, பென்ஷன் வாங்கிக்கொள்ள வேண்டியது. உடனே அவன் பிள்ளைக்கு வேலை - இப் படியே தலைமுறைக்கு உத்தியோகம் காயமாக இருக்கும். இந்தக் காலமோ சுத்த மோசம். அப்பாவுக்குப் பெரிய குறை: சரியான இடம் வரவில்லையே, இப்படித் தட்டிக் கொண்டு போகிறதே என் கல்யாணம் என்றெல்லாம்.

தாலுகா கச்சேரியில் மாஜிஸ்ட்ரேட் பதவியிலிருந்து, ஜில்லா கோர்ட்டு ஸப்ஜட்ஜாக அவர் ஆரோகணமாகும் சமயம், ஒரு பணக்காரக் குடும்பத்துச் சம்பந்தம் வந்தது. கன்ட்ராக்டர் அவர். ஏராளமாகப்பணம் குவித்துவிட்டார் எந்த வழியில் இருந்தால் என்ன? கிறிஸ்துமஸ் தினத்தன்று தட்டுத்தட்டாக ஆரஞ்சுப் பழங்களும், இன்னும் எத்தனையோ விதமான காணிக்கைகளும், ஸமர்ப்பித்துப் பெரிய உத்தியோகஸ்தர்களை கைக்குள் போட்டுக் கொள்வார். அந்தப் பணக்காரர் வீட்டிற்கு எதிரகத்தில் தான் அப்பா இருந்தார். நான் ஒரு ஸமயம் அங்கே வந்திருந்தேன். அப்பா ஒரு டெபுடி மாஜிஸ்ரேட். பிள்ளையோ எம். ஏ., வரைக்கும் படித்தவன். கேட்க வேண்டுமா பெண்ணைப் பெற்றவர்கள் வலைவீசுவதற்கு? 'பழம் கிளையில் தொங்குகிறது. எட்டினால் கிட்டும்' என்ற நியாயத்தைக் கொண்டு 'கன்ட்ராக்டர்' சற்றுத் தாவிப்பார்த்தார். அவர் வகைகாரரென்று நான் முன்னே அறிவித்துள்ளேன். சொல்ல வேண்டியதில்லை. எளிதாகவே அந்தக் கை டெபுடியின் இதயம்வரைக்கும் நீண்டது. ஆனால் என் இதயமோ, இன்னும் ஆழத்தில் இருந்தது.

காரணம்: எனக்கு வயது இருபதுகூடச் சரியாக நிரம்பவில்லை. நல்ல அழகியைக் கொள்வதில்தான் நாட்டம் எனக்கு; பணத்தில் அல்ல. இளமை அல்லவா? இன்பக்கனவுகள் காணும் பருவம். வாழ்க்கைத்துணை என்ற சொல்லுக்கு நான் கொண்டிருந்த கருத்தே வேறு. உலகத்தவர் புரிந்துகொள்ளும் அர்த்தம் அதற்கு இல்லை. இந்தக் காலத்தில் இல்லறமே குறுகிய மனப்பான்மை உடையது. நமக்கு அநுகூலமான விஷயங்களில் தாராள மனமும், பிறரோடு பழகும்போது அல்பத்தனமுமே வெளிப்படுகின்றன. இது எனக்குப் பிடிக்கவே பிடிக்காது.

நான் கூடிவாழ விரும்பும் ஓர் ஆதர்சப் பெண்மணி, வெறும் அடுக்களையில் கட்டுண்டு இருப்பவள் அல்ல. என்னுடன் சரிசமானமாகப் பழகத் தகுதியுடையவளாக இருக்கவேண்டும். வீட்டுக்காரியாக இருப்பதோடு வெளி யுலகிலும் எனக்கு உறுதுணையாக இருப்பவளைத்தான் நான் தேடுவேன். நவநாகரிகமென்று ஜனங்கள் ஏளனம் செய்கிறார்களே, காலேஜிலிருந்து வந்ததும் நான் அந்த இனத்தைச் சேர்ந்தவனாகிவிட்டேன். என்னுடைய காலத்தில் இந்தப் புதுமை வர்க்கத்தினரே, இன்றைவிட அதிகமாயிருந்தனர். ஆச்சரிய மென்னவென்றால், ஸமூகத்திற்கு அடங்கி நடப்பதுதான் பிற்போக்கு, அதைச் சீர் திருத்துவதுதான் முன்னேற்றமென்று அவர்கள் நினைத் தார்கள்.

அத்தகைய முற்போக்காளனான நான்-ஸ்ரீமான் ஸனத் குமார்—ஒரு கொழுத்த பணக்காரரின் பைக்குள் விழ இருந்தேன். "காரியத்தைச் சட்டபட்டென்று முடித்துவிடு" என்று அப்பா சொன்னார். நான் எதுவும் பேசவில்லை. ஆய்ந்தோய்ந்த பிறகு அந்தப் பைக்குள் போய்விழ லாமே என்று எனக்குள் எண்ணிக் கொண்டேன். கண்டது கொஞ்சம், கேட்டது அதிகம். இதிலிருந்து விஷயம் தெரிந்தது எனக்கு. பொம்மைமாதிரி பெண் ரொம்பச் சின்னவளாம்; நல்ல அழகாம். ஆனால் இயற்கை வழியில் அவள் வளர்ந்தவளாக எனக்குத் தோற்றவில்லை. இந்தச் சின்ன வயசிலேயே ஆசாரமான வழிகளில் அவள் பழகி இருந்தாள். கங்காஸ்தவம் மனப்பாடம். அவள் தாயார் அடுப்புக்கரியைக்கூடப் புனித கங்கை நீரில் அலம்பியே உபயோகிப்பவளாம். அவ்வளவு மடி விழுப்பு பார்ப்பவ ளாம். பூமிதேவி எல்லா ஜாதிகளையும் தன்மீது சுமப்ப வள். தீண்டாதாரும் இருப்பார்கள், உயர்குலத்தவரும் இருப்பார்கள். அதனாலேயே, இந்தப் பெண்ணின் தாய்

தரைமீது கோலம் தெளித்த பிறகே காலை வைப்பாள். எதன்மேலும் ஜலத்தைக் கொட்டிப் புனிதமாக்குவாள். நல்லகாலம், நீசம் வாழும் மீனம் தீண்டாதார் வகுப்பையோ மிலேச்ச வம்சத்தையோ சேர்ந்ததன்று. அந்தப் பாழும் ஆசாரத்திற்கு விரோதமான வெங்காயம் நிலத்தில் முளைக்காமல் இருந்ததே! பாத்திரம் பண்டங்களைத் துலக்கியானதும், நீர்த்தொடவிட்டு சரப்புடவையுடன் மடியாகச் சமையற்கட்டில் வருவதற்குள் மணி பத்தடித்து விடும். இந்தமாதிரி விஷயங்களில் தன் பெண்ணையும் பழகி வைத்திருந்தாள். சாப்பிடும்பொழுது விழுப்பு ஏதாவது பட்டுவிடுமோ வென்று அழுக்குத் துணியைக் கட்டிக் கொள்வாள். தன் நிழலுக்குக் கூட மடிக்குறை உண்டா காதவண்ணம் பார்த்துக்கொள்வாள். பல்லக்கில் ஏறித் தான் ஸ்நானக் கங்கைக்குச் செல்வாள். இந்தமாதிரி வேறுதவ தர்மத்தைவிட்டு அக்ஷரங்கூடப் பேசாமல் ஒழுகும் இயல்பினர் அந்தப் பணக்காரக் குடும்பத்தார். அம்மாவுக்கு இந்தமாதிரி ஆசாரமான குடும்பம் என்றால் பிடிக்கும். ஆனால் இன்னொருத்தனுக்கு இதெல்லாம் பிடித்திருந்தால்தானே? அதை அவள் யோசிக்கவே இல்லை. நான் வெளிப்படையாகச் சொல்லிவிட்டேன், "அம்மா, இந்த இடத்திற்கு நான் தகுதியற்றவன்" என்று. அவள் சிரித்துக்கொண்டே, "கலியுகத்தில் இந்தமாதிரி ஓர் இடம் கிடைப்பது அபூர்வமடா" என்றாள். "எனக்கு வேண்டாம்; அவ்வளவுதானே" என்றேன். "ஏது, யோசனை பண்ணு! பெண் மூக்கும் முழியுமாக இருக்கிறாளேடா?" என்றாள் என் தாய். "அம்மா, எப்பொழுதும் அழகு பார்ப்பதற்கா பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்கிறோம்? புத்தியும் கொஞ்சம் இருக்க வேண்டாமா?" என்றேன். "நானும் சொல்லு கிறேன்: இதற்குள் அவளுடைய புத்தியைப்பற்றி

உனக்கு என்ன தெரிந்து விட்டதடா?" என்றாள் அம்மா. "வாஸ்தவமாகப் புத்தி இருந்தால் இரவும் பகலும் இந்த ஆசாரக் குடுக்கையுள் அரைக் கணங்கூடத் தங்கியிருக்கவேமாட்டாள்; திணறிச் செத்துப்போயிருப் பாள்" என்றேன்.

அம்மாவின் மூஞ்சி சுண்டிவிட்டது. இந்தப் பக்கம் அப்பா எல்லாவித ஏற்பாடும் செய்திருக்கும் விஷயம் அம்மாவுக்குத் தெரியும். மற்றோர் ஆஸாமியின் விருப்பம் என்பது ஒன்று உண்டென்பதை அப்பா அடிக்கடி மறந்துவிடுவார். அவர் மட்டும் வலுக்கட்டாயப் படுத்தா மல் இருந்தால் நான் ஒரு வேளை இணங்கி அந்தப் பொம் மையை மணந்துகொண்டு நித்திய கர்மாநுஷ்டானங்களைச் சரிவரச் செய்துகொண்டு ஒரு நாள் அல்லது ஒரு நாள் கங்கா தீரத்தில் ஸத்கதிக்குச் சென்றிருப்பேன். அந்தப் பொறுப்பு அம்மா மட்டும் ஏற்றிருந்தால், என் காதில் ஓதி ஓதிக் கண்ணீர் சிந்தி எப்படியோ என் சம்மதத்தைப் பெற் றிருப்பாள். அப்பா மிரட்டு உருட்டிச் செய்யவே நானும் முறைத்துக்கொண்டேன். "நீதானே யாரும் தன் காலி லேயே நிற்கவேண்டும், தனக்குச் சரியெனத் தோன்றிய வழியே நடப்பதுதான் நல்லதென்று என் சின்ன வயதி லிருந்து போதித்து வந்தாய்? இப்போது அதை என் விவாக விஷயத்தில் பிரயோகம் செய்கிறேன்" என்றேன். காலேஜில் 'லாஜிக்' (தர்க்க நூல்) படித்தவனோடு வாய் கொடுத்து யார் ஜயிப்பவர்கள்? இந்த வாக்கு வாதமெல் லாம் நீரைக்கொண்டு அவிப்பதுபோல் அப்பாவின் பிடி வாதத்தைத் திருப்பவில்லை; எரியும் கொள்ளியில் எண் ணெய் விட்டமாதிரி ஆயிற்று. வாக்குக் கொடுத்தாகி விட்டது அவர்களுக்கு; மறு பேச்சில்லை. அப்பா பிடித்த முயலுக்கு மூன்றே கால். அன்று ஒரு நாள் அம்மாவும் இப்படித்தான் அந்தப் பைத்தியக்காரப் பிராம்மணனை

ஸம்ஸ்க்ருத வாத்தியாருக்கு உறுதி கூறியிருந்தான். அதனால்தானே அந்த விவாகப் பேச்சு முறிந்தது; பாவம், அவர் பிழைப்பு வாயில் மண் விழுந்தது என்று மட்டும் சொல்லி இருக்கவேண்டும். எங்கள் இருவருக்கும் அடி தடியாகிக் கோர்ட்டு வரைக்கும் வந்துவிட்டிருக்கும் விஷயம். இப்பொழுதெல்லாம் அப்பா தம் பழையகொள்கைகளை விட்டொழித்து, 'வெறும் வறட்டு அறிவைக் காட்டிலும் சுத்தம், ஆசாரம் மந்த்ரம் தந்த்ரம் இவையே மேலான விஷயங்கள்' என்று சொல்லி இவற்றுள் அடங்கி இருக்கும் உன்னதமான அழகிய கருத்துக்களை வேளை ஸமயம் இராமல் எனக்கு உபதேசம் செய்து வந்தார். என் நாக்கை அடக்கி வைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் மனசைக் கட்டுப்படுத்த முடியவில்லை. "இவ்வளவு பேசுகிறாயே அப்பா, வீட்டில் அநாசாரமான காரியம் செய்கிறாயே—கோழி வளர்க்கலாமென்று எந்தச் சாஸ்திரம் சொல்லுகிறது?" என்று கேட்க என் நாக்கு வெளியே வந்தது. 'முன்னெல்லாம் அம்மா ஏதாவது விரதம் அனுஷ்டித்தால், சன்றுப்பிள்ளென்று அவள்மீது விழுந்துகொண்டே இருப்பாய். அப்போது அம்மா தவறு ஒன்றும் செய்யாது போனாலும், அபசாரமென்று கன்னத்தில் போட்டுக்கொள்வாள். பாவம், அவள் அபலை அதனால் தான் நீ மிரட்டுவாய். நீ போனதும் பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்விப்பாள். உன்னிடத்தில் பயம். ஆனால் கடவுள் ஜீவகோடிகளைப் படைக்கும்பொழுது ஒரே அச்சில் இட்டு உருவாக்கவில்லை. மனுஷ்யனுக்கு மனுஷ்யன் வித்தியாசம் உண்டு. ஒருவன் யுக்தி மற்றவனுக்குச் சரிப்படாது. ஒருவன் தான் பேசுவதுதான் நியாயம் என்றால் அவன் நியாயத்தை மீறினவனாகிறான். இதனால் அநியாயங்கள் உலகத்தில் தலைவிரித்தாடும். அரசியல் அல்லது இல்லறக் கிளர்ச்சியில் பற்றுடையவர்கள்

னைதக் கவனித்தல் நலம். ஒரு குதிரை தனக்குப் பின்னால் வண்டி இருப்பது அநியாயமென்று எண்ணி உதை கொடுத்தால் அந்த உதை அதற்கேதான் திரும்பும்.'—இளமையின் உணர்ச்சியில் நான் கற்றிருந்த இந்தத் தர்க்க வித்தை குதிரைக்கான விளைவையே எனக்குத் தந்தது. அந்த ஆசாரக் கோட்டையிலிருந்த பெண்ணைக் கொள்ளும் பாக்கியத்தை இழந்தேன்; என் நல்ல காலம். ஆனால் அப்பாவின் ஆதரவையும் அத்துடன் நான் போக்கிக் கொண்டதுதான் என் வருத்தம். "போடா உன் காலிலேயே இனிமேல் நிற்கப் பார்! என் உதவி எதற்கு?" என்று கடுமையாகச் சொல்லிவிட்டார். நானும் என் பிடிவாதத்தை விடாமல், "அப்படியே ஆகட்டும்" என்றேன். எங்களிருவருக்கும் மூண்ட இந்த மனமாற்றத்தால் அம்மா உள்ளூறப் புழுங்கினாள்.

தந்தையின் தாராளமான கை குறுகிவிட்டது. ஆனால் அவருக்குத் தெரியாமல் அம்மா எனக்கு மணியார்டரில் பணம் ஏதாவது அனுப்பத் தவறவே மாட்டாள். மேகம் மழையைச் சுருக்கிக் கொண்டபோதிலும், இரவில் விழும் தண்பனி வறட்சியைப் போக்கும். அம்மா எனக்கு உதவிய தொகையிலிருந்து ஒரு சின்ன 'கார்பார்' நடத்த ஆரம்பித்தேன். மூலதனம் 89 ரூபாயேதான். இன்று வியாபாரம் ஓங்கி, ஊரார் பொறாமையினால் என்னை ஏராளமாகக் குவிந்துவிட்டானென்று சொன்னபோதிலும் 20 லக்ஷத்திற்குக் குறைவில்லை சொத்து.

பெண்ணைப் பெற்றவர்கள் என் பின்னால் சுற்றத் தொடங்கினர். முன்னால் நான் சுலபமாக நுழைய முடியாமல் இருந்த இடம் இப்பொழுது எனக்குத் தாராளமாகத் திறந்து இருந்தது. இளமையின் பெருக்கில் நான் எனக்குக் கிட்டாத பதினாறு வயது மங்கை ஒருத்தியின்மேல் ஆசை வைத்திருந்தேன் (இப்பொழுது என்

வயது என்னவென்று கேட்டுவிடாதீர்கள்!) ஆனால் அவளுடைய பெற்றோர்கள் ஐ. ஸி. எஸ்ஸோ, பார் அட்லாவோ பாஸ் செய்திருக்கும் மாப்பிள்ளையைத் தேடினார்கள். நான் அச்சமயம் அவர்களுடைய மதிப்பு மீடரில் ஜீரோ டிகிரியில் இருந்தேன். அப்புறம் அதே வீட்டில் ஒரு நாள் நான் 'லஞ்ச்' சாப்பிட்டேன். இரவு 'டின்னர்' ஆனதும் பெண்களுடன் வேடிக்கையாக 'விஸ்ட்' ஆட்டம் ஆடினேன். அந்த மெல்லியலார் என்னோடு நாகரிக இடத்தில் வழங்கும் ஆங்கில மொழியில் சம்பாஷித்தனர். என் துரதிர்ஷ்டம், ராஸிலாஸ், டெஸர்டட் வில்லேஜ், அடிஸன், ஸ்டீல் போன்ற ஆங்கில இலக்கியங்களைத்தான் தொட்டிருக்கிறேன். அந்த நவ நாகரிக மடந்தையருடன் சரிசமானமாகப் பேச யாரால் முடியும்? O my, O dear, O dear போன்ற விளிகள் அவர்கள் உச்சரிப்பது போல் என்னால் சொல்ல முடியவில்லை. எனக்குத் தெரிந்த இங்கிலீஷ் படோபஜாரில் வியாபாரம் செய்வதற்குப் போதும்; ஆனால் இந்தக் காலத்து இங்கிலீஷில் காதல் உரைகள் செய்வதெப்படி என்று நினைக்கும்பொழுதே எனக்கு மூண்டிருந்த காதல் உணர்ச்சி தலைகாட்டாமல் ஓடிவிடும்போல் இருந்தது. வழக்கத்தில் இருக்கும் வங்கமொழியோ இந்த வேலைக்குப் பயன்படாது. அசல் பங்கிம் ரீதியில் தேமதுர மொழியில் பேசினாலும் இவர்களை மயக்க முடியாது. அது எப்படியாவது போகட்டும்; இந்தச் சீமை மெருகு பூசிய பூவையர் என் கைக்குள் இலவசமாக விழும் நிலையில் இருந்தார்கள். ஆனால் கதவு இடுக்கிலிருந்த நான் பார்த்த ஒரு மாயா லோகம் தாராளமாகத் திறந்திருந்தபொழுது எங்கோ மறைந்து போயிற்று. சீ, சீ! இவர்கள் இரவும் பகலும் இந்தச் சீமை மோகத்தைக் கட்டிக்கொண்டு அலைகிறார்களே தவிர இவர்களிடம் உயர்வானதொன்றும் இல்லையே

என்று எனக்கு உறைத்துவிட்டது. பீங்கான் கிண்ணத்தி லிருந்து உறிஞ்சும் விதமோ, முள் கரண்டியை தூக்கும பாணியோ ஒரு துளி பிசகினால், பெருத்த அவமானமாகக் கருதுபவர்கள்; நம் நாட்டுப் பெண்பாலார் தம் ஆசாரத்தில் ஓர் இழை தவறி நடந்தால் பிரமாதமாக எண்ணுவதுபோல். இவர்கள் வெறும் பொம்மைகள். உணர்ச்சியின் வேகத்தில் செல்பவர்களல்ல. பழக்க வழக்கங்களுக்கு அடிமை பூண்டவர்கள். இதனால் இந்த உலகத்துப் பெண் மக்களிடத்திலேயே எனக்கு ஒரு வெறுப்பு மூண்டது. ஒரு வித ஜீவாணுவைப்பற்றிப் படித்திருக்கிறேன். அது தன்னைத் தானே சுற்றிச் சுற்றி வருமாம். ஆனால் மனிதன் அப்படி அன்று. இத்தகைய ஜீவாணுக்களைத்தான் பாழும் பிரமன் ஆடவர்களுக்கு முடி போட்டுவிடுகிறான்!

வயது எனக்கு ஏற ஏற விவாகத்தைப்பற்றிய தயக்கமும் அதிகரித்தது. மனிதனுடைய வாழ்வில் ஒரு வயது காலம் வருகிறது. அப்பொழுது முன்பின் யோசி யாமல் விவாகத் தளையில் மாட்டிக்கொள்கிறான். அந்த வயது கடந்துவிட்டால் விவாகம் செய்துகொள்வது ஒரு ஸாஹஸம் நிரம்பிய காரியமாகும். நான் அந்தக் கண்மூடிக் கோஷ்டியைச் சேர்ந்தவனன்று. அதோடு அறிவுள்ள பெண் எவளும் காரணமின்றி என்னைப் பார்த்த மாத் திரம் மணந்து கொள்வாளென்று எப்படி நினைப்பது? கேள்விப்பட்டிருக்கிறேன், காதலுக்குக் கண் இல்லை யென்று. ஸம்ஸாரம் பண்ணத் தெரிந்தவர்கள் இரண்டு கண்கள் போதாமல் பல கண்களைக் கொண்டு நோக்கு பவர். என்னிடத்தில் அதிசயிக்கத்தக்க யோக்கியாதாம் சங்கள் இருக்கின்றன. ஆனால் அவை சட்டென ஒரே பார்வையில் விளங்குவனவல்ல. எப்படியாவது போகட் டும் இது. வயதாகாத ஒரு பெண் சிறு கால அளவிற்குள்

என்னை வரிக்கத் துணிவாளென்று வைத்துக்கொள் ளுங்கள். அப்பொழுது அந்தப் பெண்ணிடம் ஊக்கமே எனக்குக் குறைந்துவிட்டிருக்கும். நான் மட்டும் ஒரு யுவதியாக இருந்திருக்கும் பக்ஷத்தில் ஸ்ரீயுத ஸநத்குமார னின் வளைந்த நாசி, அவன் ஆசை, அவன் அகம்பாவம் எல்லாம் மண்ணோடு கவியும்படி செய்திருப்பேன்.

இந்தவண்ணம் சரக்கில்லாத என் விவாக ஓடம் நடுநடுவே கரைப் பக்கமாகத் திரும்பினாலும் கரையை அடையவே இல்லை. என் வாழ்வில் 'ஸ்தி' என்னும் செல் வத்தைத் தவிர பாக்கி எல்லாம் நிறைந்திருந்தன. ஒரு விஷயம் சொல்ல மறந்துவிட்டேனே. எனக்கு வயதும் ஏறிக்கொண்டே இருந்தது. சட்டென்று இது எனக்கு ஒரு கவனத்தை மூட்டுகிறது.

அபிரகச் சுரங்கத்தைப் பார்வையிட நான் சோடா நாகபுரத்தைச் சேர்ந்த ஓர் ஊருக்குப் போயிருந்தேன். பழைய ஸம்ஸ்க்ருத பண்டிதரை அங்கே தற்செயலாகக் காண நேரிட்டது. ஆற்றங்கரை ஓரமாக ஒரு வீடு கட்டிக்கொண்டு நிம்மதியாக இருந்தார். அவருடைய பிள்ளைக்கு அங்கே உத்தியோகம். அந்த ஆற்றங்கரைப் பக்கமாக நான் ஒரு கூடாரத்தில் இறங்கி இருந்தேன். நான் பெரிய பணக்காரனென்று தேசமெங்கும் தெரியுமே. என்னைப் பார்த்துப் பழைய பண்டிதர், "நீ முன்னுக்கு வருவாயென்று எனக்கு அப்போதே தெரியும்" என்றார். ஆனால் அவர் ஏனோ அந்த விஷயத்தை அந்த ஸமயத்தில் மூடி வைத்திருந்தாரென்பதுதான் விளங்கவில்லை. அவர் என்னிடத்தில் எந்த லக்ஷணத்தைக் கண்டு இதை ஊகித் தாரோ? ஒருவேளை முன்னுக்கு வருபவர்கள் பள்ளியில் பின் வரிசையில் இருப்பார்களா? காசிவாசி மாமனா ரகத்தில் இருந்தாள். அதனால் எனக்குப் பண்டிதர் வீட்டில் பழகச் சற்றுச் சௌகரியமாயிருந்தது. பண்டி

தரின் ஸம்ஸாரம் இறந்துபோய் வெகு நாட்களாயினவாம். ஆனால் பேத்திகளும் பேரன்மார்களும் புடைசூழ இன்பமாகக் காலத்தைக் கழித்தார். எல்லாருமே அவருடைய சொந்தப் பேரப்பிள்ளைகள் அல்ல; காலஞ்சென்ற அவருடைய தமையனின் பிரஜைகளும் இருந்தனர். இவர்கள் நடுவே அமருசதகம், ஆர்யா ஸப்தசதி, மேகதூதம் போன்ற மதுர காவியங்களிலிருந்து சுவை மிகுந்த சுலோகங்களைத் தம் பேரன் பேத்திமாருக்குச் சொல்லிக் கொண்டிருந்தார். கூழாங்கல்லின் மேல் சலசலத்துச் செல்லும் மலையருவி போலிருந்தது அந்தக் காட்சி. நான் சிரித்து, "இதென்ன கடைசி வயசில்?" என்றேன்.

"அப்பனே! உங்கள் இங்கிலீஷ் சாஸ்திரம் சொல்லுகிறது, சனிக்கிரஹம் சந்த்ரஹாரம் அணிந்துகொண்டிருக்கிறதென்று. இவர்கள்தாம் என் கழுத்தைக் கட்டிக் கொண்டிருக்கும் திங்கட்குழவிகள்" என்றார்.

அந்த எளிய குடும்பத்தைப் பார்த்த பிறகு நான் ஏகாங்கியாய் நிற்கிறேனே என்ற எண்ணம் எதனாலோ வந்தது. அதை நினைக்க நினைக்க வாட்டமடைந்தேன். தாம் வயதானவரென்று பண்டிதர் உணரவில்லை. ஆனால் நான் வயதானவனென்ற விஷயம் என்னை உருக்குலைத்தது. வயதானவனென்றால் அர்த்தமென்ன? எல்லாம் ஒவ்வொன்றாக விட்டுக்கொண்டே வருகிறது; வாழ்வு எத்திசையும் சூன்யமென்ற நினைவே. அந்தச் சூன்யத்தை எதைக்கொண்டு மறைப்பது? உலகம் எனக்குச் சுவையைத் தரவில்லை. வெறும் சக்கையைத்தான் அளித்தது. சக்கையையே மென்ற பழக்கத்தில் இதை மறந்திருந்தேன், இத்தனை நாள். ஆனால் பண்டிதரின் குடும்பத்தைப் பார்த்த பின் எனக்கு இரவு பகல் யாவும் வெறிச்சென்று இருந்தன. தம்மைவிடப் பாக்கியவானென்று பண்டிதர்

எண்ணிக் கொண்டிருக்கலாம் என்னைப்பற்றி. எனக்குச் சிரிப்பு வருகிறது. வஸ்து மயமான இவ்வுலகைச் சூழ்ந்து கண்ணுக்குப் புலனாகாத இன்பலோகம் ஒன்று இருக்கிறது. இந்த அதிசய உலகுடன் உயிரின் தொடர்பு இராது போனால் நாமெல்லாம் திரிசங்கு ஸ்வர்க்கத்தில் தொங்கிக் கொண்டிருப்போம். பண்டிதருக்கு இந்த இன்ப உலகின் தொடர்பு இருந்தது. எனக்கோ? நான் ஸுகாஸனத்தில் சாய்ந்தவாறு ஸிகரெட் குடித்துக் கொண்டே சிந்திக்கலானேன். மனித வாழ்வில் நாலுநிலை; ஒவ்வொரு நிலைக்கும் தனித்தனி அதிதேவதை உண்டு. வாலிபத்தில் அன்னை; இளமையில் இல்லாள்; நடுவயதில் மாட்டுப்பெண்; வயோதிகத்தில் பேத்தி. இப்படியே பெண்கள் மூலமாகவே மனிதன் தன் நிறைவைக் காண்கின்றான். இந்தப் பேர் உண்மை இலையின் ஓசை நிரம்பிய சால மரத்தின் கீழ் எனக்கு உதயமாயிற்று. வரப்போகும் என் முதுமையின் எல்லை வரைக்கும் ஒருதரம் மனக் கண்ணால் பார்த்தேன். அங்கே தென்பட்ட ஒரு பெரும் பாழ் என் உள்ளத்தைத் திடுக்குறச் செய்தது. அந்தத் திக்கற்ற பாலை வெளியில், முதுகு வளையப்பணம் என்னும் மூட்டையைச் சுமந்துகொண்டு எந்த இடத்தில் கால் இடறி மறிக்க வேண்டுமோ? அதற்கு இன்னும் அதிக நாள் இல்லை. நாற்பதும் கடந்துவிட்டேன். இளமையில் கடைசித் தொடர்பை எறிந்துவிட்டு ஐம்பதின் பாதையில் சென்று கொண்டிருக்கிறேன். ஊன்றுகோல் அதோ காத்துக் கொண்டிருக்கிறதே எனக்காக. இனிமேல் ஜேபியை நிரப்பிக்கொள்ளும் ஆர்வத்தை விட்டொழித்து, வாழ்வின் கடைசிச் சொட்டு இன்பத்தைப் பெறும் வழியைத் தேடவேண்டும். இளமை திரும்பிவாவென்றால் வருமா—போனது போனதுதான். ஆனால் அதன் உணர்வு எனக்கு முழுவதும் அற்றுப் போகவில்லையே!

அந்த இடத்தை விட்டு என் தொழில் விஷயமாக மேற்கே ஒரு நகரத்திற்குச் செல்லவேண்டி யிருந்தது. அந்தப் பக்கத்திற்கெல்லாம் செல்வாக்கு உடையவர் விசுவபதி பாபு—பெரிய வியாபாரி. அவரிடந்தான் எனக்கு ஜோலி இருந்தது. மிகவும் உஷாரான பேர்வழி. எந்த விஷயத்திலும் அவர் சட்பட்டென்று தீர்மானத்திற்கு வருபவரல்ல. ஒருநாள் எனக்குச் சப்பிட்டுவிட்டது, ஏனோ இவரைப் பிடித்தோமென்று. வேலையாளைக் கூப்பிட்டு மூட்டையைக் கட்டச் சொன்னேன், ஊருக்குத் திரும்பிப் போகலாமென்று. அப்போது குளிர்ந்த ஸாயங் கால வேளையில் விசுவபதி பாபு என்னிடம் வந்து, "உங் களுக்குப் பல பேர் தெரிந்திருக்கலாம். நீங்கள் மனசு வைத்தால் ஒரு விதவை பிழைத்துப் போவாள்" என்றார்.

விஷயம் இது: நந்தகிருஷ்ண பாபு என்பவர் பேரேலி யில் ஓர் இங்கிலிஷ்ஸ்கூலுக்கு தலைமைத் உபாத்தியாயராக வந்தார். நல்ல பெயர் வாங்கினார். இவ்வளவு படித்த மனுஷ்யன் சொல்ப சம்பளத்திற்குத் தொலைவான இந்த ஊருக்கு வருவானேனென்று எல்லாரும் வியந்தனர். வெறும் பரிக்ஷையில் மாணவர்களை 'பாஸ்' பண்ணி வைப் பதைத் தவிர வேறு காரியங்கள் செய்வதிலும் அவர் நிபுணர். திடீரென ஒருநாள் வெட்டவெளிச்ச மாகியது; அவருடைய மனைவி நல்லவள்தான், ஆனால் நல்ல குலத் தைச் சேர்ந்தவளல்ல வென்ற விஷயம். அவள் ஏதோ ஓர் இழிகுலத்தவளாம்; அவள் தீண்டிய நீர் அதன் நீர் மையை இழந்துவிடுமாம். கோமயத்தை உட்கொண்டால் தான் அந்த அசுசி விலகுமாம்.

எல்லாரும் அவரைப் பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டபொழுது அவர் ஒளிக்காமல், "கீழ் ஜாதிதான் அவள்; ஆனால் மனுஷிதானே என் மனைவி" என்றார் அப்போது இந்தக் கேள்வி எழுந்தது: 'இந்த மாதிரி விவா

கம் சாஸ்திர சம்மதமானதா' என்றனர். இந்தப் பிரச்னையைக் கிளப்பிய ஆளைப் பார்த்து நந்தபாபு, "நீங்களும் சாலக்கிராமத்தின் பேரில் ஆணை வைத்து அடுத்தடுத்து இரண்டு மனைவிகளைக் கொண்டிருக்கிறீர். இரண்டோடு திருப்தி அடைந்ததாகத் தெரியவில்லை. உங்கள் சாலக்கிராமம் ஒருபுறம் இருக்கட்டும். எல்லாம் வல்ல இறைவனுக்குத் தெரியும்: உங்களுடைய விவாஹ ரீதியைவிட என்னுடையது சாஸ்திரோக்தமானதே. இதற்குமேல் உங்களுடன் பேசுவதற்கு ஒன்றுமில்லை" என்றார். இந்த வார்த்தையைக் கேட்டுக் கொண்டிருந்தவர் உள்ளங்குளிர்ந்து போனாரென்று சொல்ல முடியாது. அதற்குமேல் ஊரார் இழைத்த தொந்தரைகளுக்கு எல்லையே இல்லை.

உபத்திரவம் தாளாமல் நந்தபாபு பேரேலியைத் துறந்து இந்த நகரில்தான் வக்கீல் தொழிலில் இறங்கினார். ஆசாமி நேர்மையானவர். வரும்படி இராது போனாலும், அக்கப்போர் வழக்குகளில் வாதாடுபவர் அல்ல. அதனால் ஆரம்பத்தில் அவருக்குக் கஷ்டங்கள் நேர்ந்தாலும் கடைசியில் படிப்படியாக உன்னதி அடைந்தார். நீதிபதிகள் அவரிடத்தில் மதிப்பு வைத்திருந்தனர். அவர் சற்று வாழ்வில் நிலைக்கும் சமயம் நாட்டில் பெரும் பஞ்சம் மூண்டது. ஸேவா ஸங்கங்கள் மக்களுக்கு உணவு அளிக்கச் சில ஆட்களை நியமித்தன. இவர்களெல்லாம் அபகரிப்பதில் கெட்டிக்காரர்களென்று மாஜிஸ்ட்ரேட்டிடம் நந்தபாபு சொன்னபொழுது அவர், "யோக்கியமான பேர்வழி எங்கே ஐயா இருக்கிறான்?" என்றார். உடனேயே நந்தபாபு, "என்னை நம்பி அந்தப் பொறுப்பைக் கொடுத்தால் ஏதோ முடிந்தவரை உழைக்கிறேன்" என்றார். பஞ்ச நிவாரண வேலையை அவரிடமே ஒப்படைத்தனர். இந்தப் பளு தாளாமலோ என்னவோ ஒரு பகல்வேளையில் அவள் ஒரு மரத்தடியில் செத்துக்

டைந்தார். இதயம் வேலை செய்யாமல் திடீரென நின்ற தனாலேயே இந்த மரணமென்று டாக்டர்கள் கூறினர்.

நான் கேள்விப்பட்டவரைக்கும் இதுவே நந்தபாபு வின் பூர்வ சரிதை. இவர் தந்நலம் கருதாது மக்களுக் காக புரிந்த அரிய தொண்டைப் பாராட்ட ஒருநாள் அந்த ஊர் 'கிளப்'பில் நான், "நந்தகிருஷ்ண பாபுவைப் போன்ற மஹானுபாவர்கள் பணம் பாக்கியம் எதுவும் குவிக்காமல் வாழ்வில் எந்தவிதமான சுகத்தையும் காணாது மாண்டனர். அவர்களே கடவுளின் உண்மை ஊழியர்கள். இந்தப் பாழும் உலகை உன்னத—" என்று சொல்லும்பொழுது, திடீரென மரக்கலமொன்று மணலில் கரை தட்டியதுபோல் என் பேச்சு அரைகுறையாக நின்றது. எங்களைச் சேர்ந்த ஒரு பெரிய பணக்காரர், அவர் செல்வாக்கு உடையவர்; அச்சமயம் பத்திரிகையில் கவனம் செலுத்துவதையும்விட்டு மூக்குக் கண்ணாடி-மூலம் என்னைப் புன்முறுவலுடன் நோக்கி, 'ஹியர் ஹியர்' (பேஷ் பேஷ்) என்றார்.

அது போகட்டும். நந்தபாபுவின் விதவை ஸம்ஸாரம் தன் ஒரே பெண்ணுடன் அதே பேட்டையில் இருப்ப தாகக் கேள்விப்பட்டேன். தீபாவளியன்று இரவு அந்தப் பெண் பிறந்தாளாம். அதனால் அவள் தந்தை தீபாலி என்று அவளுக்குப் பெயர் சூட்டினராம். ஸமூகம் அவர்களை இழிவுபடுத்தியதால் தாயும் பெண்ணும் தனி யாகவே ஓரிடத்தில் காலத்தைக் கடத்தினர். பெண் நன்றாகப் படித்தவள். அவளுக்கு வயது பதினைந்திற்கு மேல் இருக்குமென்று அறிந்தேன். அவள் தாய் ஒரு நோயாளி. வயதாகிவிட்டது. என்றைக்குக் கண்ணை மூடிக்கொள்வாளோ தெரியாது. அப்புறம், அவள் பெண் ணின் பாடு திண்டாட்டம். கல்யாணம் ஆகவில்லை. யோக்கியமான வரன் எங்கே வரப்போகிறான்? மட்ட

ஜாதியென்ற கெட்ட பெயரும் வேறு ஒன்று இருந்தது அவர்களுக்கு. விசுவபதி பாபு இந்த விஷயத்தை மெல்ல எடுத்து, "எங்கேயாவது ஒரு யோக்கியமான பையன் இருந்தால் கட்டிவிடுமே. உங்களுக்குப் பெரும் புண்ணிய மாகும்" என்றார்.

விசுவபதி பாபுவை அல்பன், தன்னலக்காரனென்றே நினைத்திருந்தேன். ஓர் அநாதைப் பெண்ணுக்காக அவர் உள்ளூறப் பாடுபடுவதைப் பார்த்தபின் என் மனமும் மாறிவிட்டது. ஆதிகாலத்துப் பயங்கரமான 'மாம்மத்' என்ற பிராணிகளின் மரித்த உடலில் ஜீரணப் பைக்குள் இருந்த தானிய வித்துக்களைப் புதைத்தபொழுது அவை முளைத்தனவாம். அதுபோலவே எது அழிந்துபோனாலும் மனிதத்தன்மை என்பது எங்கேயாவது யாரிடமாவது குருத்து விடாமற் போகாது.

நான் விசுவபதி பாபுவிடம், "பெண் யாரென்று தெரியும். தடங்கல் எதுவும் இல்லை. நிச்சயம் செய்வது, நாள் குறிப்பதெல்லாம் உங்கள் பாடு" என்றேன்.

"பெண்ணைப் பார்த்தீர்களா?"

"பார்க்க வேண்டிய அவசியமில்லை."

"ஆஸ்தி பாஸ்தி ஒன்றுமில்லை. இருக்கிற வீடு ஒன்றுதான்."

"அதைப்பற்றிக் கவலை இல்லை. பிள்ளைக்குச் சொத்து இருக்கிறது."

"பிள்ளையாண்டான் ஊர் பெயர் எல்லாம்—"

"அதை இப்பொழுது சொல்லுவானேன்? நாலு பேருக்குத் தெரிந்தால் யாராவது கலகம் பண்ணிவிடு வார்கள்."

"பாருங்கள்: பெண்ணின் தாயாருக்காவது இன்னா ரென்று சொல்ல வேண்டாமா?"

"சொல்லுமே: உலகத்து மனுஷ்யனைப்போல் குணம் குறை ஏதாவது பிள்ளையிடமும் இருக்கும். நல்ல காலம், குறை மிகவும் கொஞ்சமே. அப்படி ஓகோவென்ற குண வானும் அல்ல. பெண்ணைப் பெற்ற எவனும் விரும் பக்கூடிய பாத்திரம். பெண்ணின் அபிப்பிராயந்தான் எப்படி இருக்குமோ?"

இவ்வளவு தூரம் காரியம் முடிந்ததைக் குறித்து விசுவபதி பாபுவுக்கு என்னிடத்தில் அளவற்ற நன்றி. என்மேல் விசுவாஸம் அவருக்கு அதிகரித்தது. அவர் கார்பாரில் கறூர் பேர்வழிதாம். இந்த ஸந்தர்ப்பத் தில் அவருக்கு விட்டுக்கொடுத்தே உடன்படிக்கையில் கையெழுத்துப் போடும் துணிவுக்கு வந்தேன். அவர் போகும்பொழுது, "பிள்ளையிடம் சொல்லுங்கள்; பெண் தங்கம், அந்த மாதிரி கிடைப்பது அபூர்வ மென்று." என்றார்.

சமூகம் வெறுத்த—உரிமையிலிருந்து உலகத்தவர் வஞ்சித்த—ஒரு பெண்ணை நான் என் இதயத்துள் ஏற்றுக் கொள்வதாயிருந்தால், அவள் ஏன் என்மீது அன்பு வைக் காது போவாள்? பேராசை பிடித்த பெண்கள் அதிக அன்பு உள்ளவர்கள்போல் நடிப்பார்கள். அது தெரியும் எனக்கு. ஆனால் இந்த தீபாலி—தீபாவளியில் ஏற்றும் அகல் விளக்குப்போல், ஆடம்பரமின்றி என் அகத்தினுள் நின்று ஒளிர்வாளென்பதில் சந்தேகமே இல்லை.

பொழுது மங்கியது. விளக்கை ஏற்றிக்கொண்டு பத்திரிகையொன்றைப் படிக்க எடுத்தேன்; ஒரு பெண் என்னைப் பார்க்க வந்திருப்பதாகச் சமாசாரம் வந்தது. என் வீட்டிலோ பெண்ணென்ற நாமதேயமே இல்லை. எனக்கு அவளை எப்படி அழைப்பதென்று தெரியவில்லை. நான் தயங்கிக் கொண்டிருக்கையிலேயே பெண் தானே உள்ளே வந்தாள். வெளியார் யாரும் நம்பமாட்டார்கள்

இதை. நான் வெட்கத்தால் தலையைக் குனிந்து கொண்டேன். அவளோடு பேசக்கூட என் நா எழவில்லை. அவள் மட்டும், "என் பெயர் தீபாலி" என்றாள் என் எதிரே. இனிமையான குரல். சற்றுத் தைரியம் பிறந்தது. நிமிர்ந்து பார்த்தேன். மென்மையும் அறிவின் பொலிவும் கலந்த எழில் முகம். தலையில் 'கோம்டா' (முசுக்கு) இல்லை. சாதாரணமான நாட்டுச் சேலையே அணிந்திருந்தாள், இந்தக் காலத்துப் 'பாஷனி'ல். என்ன பேசுவதென்று நான் யோசிக்கும்பொழுது அவள், "எனக்கு விவாகம் செய்துவைக்கத் தாங்கள் சிரத்தை எடுத்துக் கொண்டதாகத் தெரிந்தது. நீங்கள் முயற்சி எதுவும் செய்ய வேண்டாம், என்பொருட்டு" என்றாள்.

எது எப்படி இருந்தாலும், தீபாலியின் வாயிலிருந்து இந்த வார்த்தை வருமென்று நான் எதிர்பார்க்கவே இல்லை. விவாகமென்றதும் அவள் உடலும் உள்ளமும் பூரித்துப் போகுமென்றே நான் நினைத்திருந்தேன்.

"ஆனால் யாரையுமே நீ விவாகம் செய்துகொள்ளப் போவதில்லையா?"

"ஆமாம், யாரையுமே."

மனோதத்துவத்தைக் காட்டிலும் வஸ்துதத்துவத்தினில் தான் எனக்கு அனுபவம் அதிகம். பெண்களுடைய மனம் என் வரைக்கும் இங்கிலீஷ் பதங்களின் உச்சரிப்புப் போலவே இருந்தது. வெளுத்ததெல்லாம் பாலென்று இருப்பவன் நான். "சரி, நான் உனக்காகத் தேடியிருக்கும் வரன், யோக்கியதையில் குறைந்தவனன்று. உன் இஷ்டத்திற்கு ஏற்றவன். தள்ளிவிடக் கூடியவனல்ல" என்றேன்.

இதற்குத் தீபாலி, "நான் இழிவாகக் கருதவில்லை எனக்கு விவாகம் வேண்டாமென்றுதான் சொன்னேன்" என்றாள்.

"அவனே உன்னிடத்தில் உள்ளூர ஆசை வைத்திருக்கிறான்" என்றேன்.

"வேண்டாம். என்மேல் ஆசை வைக்க வேண்டாமென்று சொல்லுங்கள்."

"சரி, வேறு எந்த வழியிலாவது நான் உங்களுக்கு உதவிபுரியலாமா, அதுவும் கூடாதா?"

"எங்கேயாவது ஒரு பெண்கள் பாடசாலையில் எனக்கு வேலை செய்துவைத்தால் நலம். இல்லை, கல்கத்தாவுக்கு என்னை அழைத்துச் சென்று ஏதாவது வழிகாட்டினால் எவ்வளவோ உதவிசெய்த மாதிரி."

"வேலை இருக்கிறது; உன்னை நல்ல இடத்தில் அமர்த்துகிறேன்."

என் உறுதிமொழியில் ஓரளவுதான் உண்மை இருந்தது. பெண் பாடசாலையொன்று எனக்குத் தெரியும்; அவ்வளவுதான். ஆனால் ஒரு பெண் பாடசாலையை நிறுவுவதற்கு எனக்கு எத்தனை நாள் பிடிக்கும்; அப்போது வேலைக்குதான் என்ன குறைவு?

"நீங்கள் ஒருதரம் எங்கள் வீட்டிற்கு வந்து இதையெல்லாம்பற்றி அம்மாவிடம் பேசித் தெரிந்து கொள்ளுங்களேன்?" என்றாள் தீபாலி.

"நாளைக்கே வருகிறேன்" என்றேன்.

தீபாலி அகன்றாள். பத்திரிகையில் என் மனம் ஓடவில்லை. மொட்டை மாடியில் ஒரு சாய்வு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு அதில் அமர்ந்தேன். வானில் சிமிட்டும் தாரகைச் சுடர்களை விளித்து நான் "கோடானுகோடி யோஜனை தூரத்திற்கு அப்பாலிருந்து உண்மையில் மாந்தரின் வினைப்பயனை நீங்கள் பின்னிக் கொண்டிருக்கிறீர்களா?" என்று கேட்டேன்.

அதே ஸமயம், முன் அறிவிப்பின்றி விசுவபதி பாபு

வின் நடுப் பிள்ளை ஸ்ரீபதி மாடியில் தோன்றினன். அவனோடு நான் பேசிய விஷயங்களின் ஸாரம் இதுவே.

ஸ்ரீபதி தீபாலியை விவாகம் பண்ணிக்கொள்ள ஆவல் கொண்டிருந்தான். அதற்காகத் தன் குடும்பம், குலம் எல்லாவற்றையும் தியாகம் செய்வதாகக்கூட உறுதி கூறினன். அவன் இந்தமாதிரி காரியம் செய்தால் அவன் முகத்தில் விழிக்கப் போவதில்லையென்று சபதங் கூடச் செய்துவிட்டார் அவன் தந்தை. தனக்காக இவ்வளவு கஷ்டம், அவமானம், தியாகம் செய்வதற்குத் தன்னிடத்தில் அப்படியென்ன மகிமை இருக்கிறதென்று தீபாலி சொன்னாள். அதோடு ஸ்ரீபதி இளம்பிராயத்திலிருந்து செல்வமான குடும்பத்தில் வளர்ந்தவன். தீபாலியைப் போன்ற சமூகம் வெறுக்கும் ஏழைகளின் வீட்டில் வறுமை மிகுந்த வாழ்க்கை அவனுக்குச் சகிக்குமா? இந்தச் சிக்கல் ஒரு முடிவிற்கு வராமல் சுழன்றது. இந்த ஸங்கடத்தின் இடையே மாட்டிக்கொண்டு, வேறு ஒரு வரனை நான் தேடிக்கொண்டு வந்தபொழுது புதிர் இன்னும் கடினமாயிற்று. இதற்காக ஸ்ரீபதி என்னை இந்த நாடகத்திலிருந்து விலகிப் போகும்படி சொல்லிவிட்டான்.

"எப்போது இதில் புகுந்து வேலை செய்ய ஆரம்பித்து விட்டேனே, இனிமேல் பின்வாங்குவது ஏது? அப்படி விலகுவதாயிருந்தால் இந்த முடியை முற்றும் கத்தரித்த பிறகே விலகுவேன்" என்றேன் நான்.

விவாக முஹூர்த்தம் இதனால் மாறிவிடவில்லை. வரன்தான் மாறினன். விசுவபதி பாபுவின் வார்த்தையை நிறைவேற்றினேன். அதனால் என்மேல் அவருக்குப் பிரீதி ஏற்படவில்லை. தீபாலி சொன்னபடி நான் செய்யவில்லை. அதனால் அவள் சந்தோஷமே அடைந்தாள். பள்ளிக்கூடத்தில் வேலை ஏதாவது காலியாக இருந்ததோ

இல்லையோ, என் வீட்டில் காலி இருந்தது. பெண் இல்லாத குறை எனக்கு நீங்கிற்று. என்னைப்போல் விழலாண்டிகள் உண்மையில் ஆண்டிகள் அல்லவென்று தெரிந்துகொண்டான் ஸ்ரீபதி, என் சொத்தைக் கண்டதும். அவனுடைய வாழ்வின் விளக்கு எனது கல்கத்தா மாளி கையிலேயே சுடர்விடத் தொடங்கியது. உரிய காலத்தில் விவாகம் செய்து கொள்ளாததனால் அல்லவோ இவ்வளவு குறைகள் !

கடைசியில் பகவான் கண்ணைத் திறந்தார். நான் கேட்டதற்குமேல் இருமடங்காகக் கிட்டியது. இன்று ஷஷ்டிபூர்த்திக்குக் கிட்டத்தட்ட வந்துவிட்டேன். வீடு நிரம்பப் பேத்திமாரைப் பெற்றுவிட்டேன். பேரனும் பிறந்துவிட்டான். ஆனால் விசுவபதி பாபுவுடன் என்னுடைய கார்பார் அடியோடு நின்றுவிட்டது. காரணம்: பிள்ளை செய்த வேலை அவருக்குப் பிடிக்கவில்லை.

# இனிது முடிந்தது

## முதல் அத்தியாயம்

அபூர்வகிருஷ்ணன் பி. ஏ., பாஸ் செய்துவிட்டுக் கல்கத்தாவிலிருந்து ஊருக்குத் திரும்பினான்.

சிறிய ஆறு. மழைக்குமுன் முக்கால்பாகம் வற்றியே கிடக்கும். இப்போது ஆவணிக் கடைசியில் நீர் நிறைந்து, ஊரின் எல்லைவரையில் பெருகி, மூங்கில் தோப்பைத் தொட்டுக்கொண்டு சென்றது.

சில நாட்களாக அடர்மழை பெய்தபின் அன்று வானம் வெளுத்து வெயில் தலைகாட்டியது.

படகில் ஏறிவரும் அபூர்வகிருஷ்ணனின் மனத்துள் திகழும் காட்சிகளைப் பார்க்க முடியுமானால், அவன் மனத்தினுள்ளும் ஓர் ஆறு, கரை புரண்டு தளும்புவதையும், ஒளிபட்டுப் பளபளப்பதையும் மெல்லிய காற்றில் சலசலப்பதையும் காணமுடியும்.

படகு தகுந்த துறையில் வந்து நின்றது; கரையிலிருந்தே, அபூர்வனின் வீட்டு மேல்மாடி மரங்களின் இடுக்கு வழியாகத் தென்பட்டது. அபூர்வன் வரும் விஷயம் வீட்டில் எவருக்கும் தெரியாது. அதனால் துறைக்கு ஆட்கள் வரவில்லை. படகோட்டி பையை எடுத்துக்கொண்டான். அபூர்வன் அவனை நிறுத்தித் தானே பையைத் தூக்கிக்கொண்டு, சந்தோஷமாகப் படகிலிருந்து இறங்கினான்.

கரை சற்று வழுக்கியது. இறங்கியதுமே, அபூர்வன் பையோடு சறுக்கி விழுந்துவிட்டான். விழுந்ததுதான்

தாமதம், எங்கிருந்தோ இனிமையான சிரிப்பு அலை ஒன்று எழும்பிப் பக்கத்து அரசமரத்தில் இருந்த பறவைகளைக் கிளப்பிவிட்டது.

அபூர்வன் வெட்கத்துடன் பரபரவென்று சமாளித்துக்கொண்டு எழுந்து பார்த்தான். கரையில் பெரிய சரக்குத் தோணி ஒன்றிலிருந்து புதுச் செங்கல் குவியலாக இறக்கியிருந்தனர். அதன்மேல் உட்கார்ந்து ஒரு சிறுமி சிரித்துச் சிரித்து வெடித்துப் போவதைப் பார்த்தான்.

அபூர்வனை தெரிந்துகொண்டான், அண்டை வீட்டுக்காரர் பெண் மிருண்மயிதான் அவள் என்று. தொலைவில் பெரிய ஆற்றின் கரையில் இவர்கள் வீடு. ஆறு கரை பெயர்ந்ததும் ஊரைவிட்டு வந்து மூன்று வருஷங்களாக இந்த ஊரில் இருக்கிறார்கள்.

அந்தப் பெண்ணைப்பற்றிய அவதூறுகளுக்கு ஓர் அளவில்லை. ஊர்ப்புருஷர்கள் அவளுக்குச் செல்லமாக, "பைத்தியம்" என்று பெயரிட்டிருந்தார்கள். ஆனால் ஊர்ப் பெண்களோ அவளைக் கண்டாலே பயந்து கவலைப்பட ஆரம்பித்து விடுவார்கள். ஊரில் இருக்கும் பிள்ளைகள் எல்லாருடனும் விளையாடுவாள். தன் வயதுப் பெண்களை கரித்துக் கொட்டுவதற்கும் ஓர் அளவில்லை. குழந்தைகளுக்கு அந்தப் பெண் பெருந் தொல்லை என்றே சொல்லலாம்.

அப்பனுக்குச் செல்லப்பெண் அல்லவா? அதனால் தான் இவ்வளவு அடங்காத்தனம். மிருண்மயியின் தாய் தன் தோழிகளிடம் கணவனைப் பற்றிக் குறை கூறுவாள், "அப்பாவுக்கு அவளிடம் ஓர் ஆசை. அவர் இருக்கும்போது பெண்ணின் கண்களில் ஜலம் வந்தால் அவருக்குத் தாளாது. நொந்துபோவார் - இதை எண்ணியே அவளை அதட்டுவதில்லை" என்றெல்லாம் சொல்லுவாள்.

மிருண்மயி பார்வைக்கு மாநிறம். பரட்டை மயிர் முதுகுவரையில் புரளும். துருதுருவென்ற இள முகம் - பெரிய கருவிழிகளில் வெட்கமோ பயமோ அடக்கமோ லவலேசமும் இல்லே. நல்ல உயரம், நல்ல ஆரோக்கியமான உடல் - ஆனால் அவள் வயதில் சின்னவளா, இல்லே பெரியவளா என்ற கேள்வி யாருக்கும் தோன்றவில்லே. வயசு ஊராருக்குத் தெரிந்திருந்தால் இன்னும் ஏன் விவாகம் ஆகவில்லே பெண்ணுக்கு என்று அவள் தாய் தந்தையர் மானத்தை வாங்கி இருப்பார்களே! ஊர் ஜமீன்தாரின் படகு துறைக்கு வந்தபோது ஊரார் மரி யாதையுடன் பரபரவென்று காரியம் செய்தனர். பெண் களின் முகத்தில் முட்டாக்குத் திரைவிழுந்தது. ஆனால் மிருண்மயி எங்கிருந்தோ அம்மணமான குழந்தை ஒன்றை இடுப்பில் தூக்கித், தன் பரட்டை மயிர்த் தலேயுடன் துறைக்கு வந்து நின்றாள். வேடர் தொல்லே இராத ஊரில் மான்குட்டி விளையாடுவதுபோல, பயமற்று ஆவ லுடன் நின்று உற்றுக் கவனித்தாள். கடைசியில் தன் வயதான நண்பர்களிடம் போய்ப் புதிதாக வந்த பிராணி யின் நடை உடை பாவனைகளைப் பற்றிப் பெரிதாக விவரித்தாள்.

நம் அபூர்வன் இதற்குமுன் விடுமுறைக்கு வீடு வந்த போது சுயேச்சையாகத் திரியும் இச் சிறுமியைக் கண் டிருக்கிறன். ஓய்விருக்கும்போதும் இராதபோதுங்கூட அவளைப்பற்றி யோசனை செய்திருக்கிறன். உலகத்தில் எத்தனையோ முகங்கள் கண்ணில் படுகின்றன. ஆனால் ஒரே முகம் மட்டும் சொல்லாமல் கொள்ளாமல் நம் உள்ளத்துள் பதிந்து விடுகிறது. அது வெறும் அழகினால் மட்டுமல்ல. அதற்குள்ள தனிக் கவர்ச்சியினால்தான். பெரும்பான்மையோர் முகங்களில் மனிதனின் இயல்பு தெளிவாக மலர்ந்து விளங்குவதில்லே. உள்ளத்தில்

பதியும் முகங்களில் ஆயிரத்தில் ஒன்றுதான் நிலைத்து விடுகிறது. அச்சிறுமியின் முகத்திலும் கண்களிலும் அடங்காத பெண்மை - சுயேச்சையாகத் திரியும் ஒரு காட்டுமானின் தன்மை - வெளிப்பட்டது. அதனால் இந்த உயிர் ததும்பும் முகத்தைப் பார்த்தபிறகு மறப்பது எளிதல்ல.

பிருண்மயியின் சிரிப்பு எவ்வளவு இனிமையாக இருந்தாலும், துரதிர்ஷ்டவசமாக அபூர்வனுக்கு அது சற்று வேதனையைத் தந்தது. அவன் படகோட்டியின் கையில் பையைக் கொடுத்துவிட்டு, முகம் சிவக்க வேகமாக வீட்டுக்குச் சென்றான்.

எல்லாம் நன்றாக அமைந்திருந்தன: ஆற்றங்கரை, மர நிழல், பறவைகளின் இன்குரல், இளவெயில், இருபது வயது - அந்தச் செங்கற் குவியல்கூட. அதன் பேரில் இருப்பவள், இந்தக் கடினமான இடத்திலும் மென்மையான அழகுடன் விளங்கியதுதான் அதிசயம். இத்தகைய நாடகம் முதல் அங்கத்தில் காலை வைத்ததுமே கவித்துவம் நிரம்பிய பிரஹஸனமாகி விடுகிறது. அதைவிடக் கேலிக் கூத்து வேறென்ன வேண்டும்?

## இரண்டாம் அத்தியாயம்

செங்கற் குவியலின் மேலிருந்து வரும் சிரிப்பைக் கேட்டவாறு, மேல் துணியிலும் பையிலும் சேற்றைப் பூசிக்கொண்டு அபூர்வன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

திடீரென்று பிள்ளை வந்துசேரவே அவன் விதவைத் தாயார் சந்தோஷத்தினால் பூரிப்படைந்தாள். அந்தக் கணமே கட்டித் தயிரும், கயல் வகைகளும் வாங்கிவர ஆட்கள் ஓடினர். அண்டை வீட்டுக்காரர்களிடையே ஒரு பரபரப்பு எழுந்தது.

சாப்பிட்டானதும், அம்மா அபூர்வனின் கல்யாணப் பேச்சைக் கிளப்பினுள். அபூர்வன் எதிர்பார்த்த விஷயமேதான். ஏனென்ருல், அது நெடுநாளைய பேச்சு. ஆனல் பிள்ளை புது நாகரிகத்தில் மூழ்கிப் பி. ஏ., பாஸ் செய்யாமல் கல்யாணம் செய்துகொள்ள முடியாது என்று பிடிவாதம் செய்தான். அதற்காக அவன் தாயார் இத்தனை நாள் காத்திருந்தாள். ஆகவே, இனிமேல் சாக்குப் போக்குச் சொல்லுவது முடியாது. "முதலில் பெண் பார்த்தாகட்டும். அப்புறம் நிச்சயம் செய்யலாம்" என்ருன் அபூர்வன். "பெண் பார்த்தாயிற்று. அதற்காக நீ கவலைப்படவேண்டாம்" என்ருள் அம்மா. இந்த விஷயத்தை அபூர்வன் தானே யோசித்து, "பெண்ணைப் பார்க்காமல் எப்படிக் கல்யாணம் பண்ணிக்கொள்வேன்" என்ருன். இதேதடா புது இடக்கு மறுபடியும் என்று அம்மா எண்ணி அதற்கு இசைந்தாள்.

அன்றிரவு அபூர்வன் விளக்கை அணைத்துவிட்டுப் படுக்கையில் படுத்தான். மழையின் இனிய ஓசையையும் இரவின் மோனத்தையும் பீறிக்கொண்டு ஓர் உரத்த சிரிப்பு அவன் காதில் ஒலித்துக்கொண்டிருந்தது. அவனுக்குத் தூக்கம் வரவில்லை. காலையில் கால் சறுக்கி விழாமல் எப்படியாவது சமாளித்திருக்கலாமே என்று அவன் தன்னையே நொந்தான். "அந்தப் பெண்ணுக்கு நான் யாரென்று தெரியவில்லையே. நான் அபூர்வ கிருஷ்ணன்—எத்தனையோ பரீக்ஷைகள் தேறியவன்; கல்கத்தாவில் வெகு நாள் இருந்தவன். ஏதோ துரதிர்ஷ்டம் சேற்றில் விழுந்தாலுங்கூட, என்னைப் பார்த்துச் சிரிக்க நான் ஒன்றும் நாட்டுப்புறத்துப் பிள்ளையல்ல" என்று நினைத்துக்கொண்டான்.

மறுநாள் அபூர்வன் பெண் பார்க்கச் சென்ருன். பெண்ணின் வீடு வெகு தொலைவில் இல்லை. அதே

பெட்டையில் தான். நன்றாக உடை அணிந்தான். வேஷ்டி, அங்கவஸ்திரத்தைவிட்டு, பட்டுஜிப்பா பாயிஜாமா, தலையில் வட்டமான பாகை, பாலிஷ்செய்த புதுப் பூட்ஸ் அணிந்து கொண்டு பட்டுக்குடையும் கையுமாகக்காலையில் வெளிக்கிளம்பினான்.

மாமனாராக வரப்போகிறவரின் வீட்டில் அடிவைத்ததும் தடபுடலாக அவனை வரவேற்றனர். கடைசியில், தக்க சமயத்தில், உடல் நடுங்கும் ஒரு சிறுமியை நன்றாகச் சிங்காரித்துக் கொண்டையில் பூச்சூட்டி, மெல்லிய வர்ணச் சிற்றாடையை உடுத்து, பிள்ளையாண்டானின் முன் நிறுத்தினார்கள். அவள் ஒரு மூலையில் தன் முகத்தை முழங்கால்களுக்கு நடுவில் புதைத்துக்கொண்டு கம்மென்று உட்கார்ந்திருந்தாள். ஒரு வயதான பாட்டி அவளுக்குத் தைரியம் சொல்லப் பின்னாலேயே வந்து சேர்ந்தாள். பெண்ணின் தம்பி ஒருத்தன் தன் குடும்பத்துள் அதிகாரமின்றி நுழையப்போகும் ஆளின் தலைப் பாகை, கடிகாரச் சங்கிலி, அரும்புவிடும் மீசை இவைகளை ஒரே நிலையாகக் கவனித்தான். அபூர்வன் முதலில் கொஞ்ச நேரம் மீசையைத் தடவிக்கொண்டிருந்தபின் கம்பீரமான குரலில், "நீ என்ன படிக்கிறாய்?" என்று கேட்டான். போர்வையினுள் வெட்கப்பட்டுக்கொண்டிருந்த பெண் முதலில் ஒன்றுமே சொல்லவில்லை; இரண்டு மூன்று தடவைகள் கேட்டு, பாட்டி அவள் முதுகில் தட்டிக் தூண்டியதும், மெதுவான குரலில் ஒரேமூச்சாக அச் சிறுமி சொல்லிக்கொண்டே போனாள்—"சாரு பாடம் இரண்டாம் புத்தகம். வ்யாகரணஸாரம் - முதல் பாகம். பூகோள விவரணம், கணக்கு, இந்து தேச சரித்திரம்" என்றெல்லாம். இதே சமயம் வெளியே யாரோ தபதபவென்று வரும் ஓசை கேட்டது. கணப்பொழுதில், இரைக்க இரைக்க, தலையை விரித்துக்கொண்டு மிருண்மயி உள்ளே

நுழைந்தான். அபூர்வகிருஷ்ணனின் பக்கம் பார்க்காமல், பெண்ணின் தம்பி ராகாலனின் கையைப் பிடித்து இழுத்தான். ராகாலன் அப்போது அபூர்வனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு எழுந்திருக்கப் பிடிக்கவில்லை. பாட்டி அடங்கிய குரலில் கூடுமானவரையில் மிருண்மயியை அதட்டினாள். அபூர்வன் கர்வமாகத் தலைப்பாகை அணிந்த தலையை நிமிர்த்தி உட்கார்ந்திருந்தான். வயிற்றுக்கருகில் தொங்கும் கடிகாரச் சங்கிலியை அவன் கைகள் அசைத்தன. கடைசியில், தன் சிநேகிதனைக் கிளப்ப முடியாமல் அவன் முதுகில் ஓர் அறைவைத்துச் சட்டென்று பெண்ணின் 'கோம்டா'வைத் தள்ளிவிட்டுப் புயல்போல மிருண்மயி அறையை விட்டு வெளியேறினாள். பாட்டி என்னவோ முணுமுணுத்தாள். தன் தமக்கையின் 'முக்காடு' சட்டென்று விலகவே, ராகாலன் பகபகவென்று சிரித்தான். தன் முதுகில் விழுந்த அறையை அவன் மதிக்கவே இல்லை. ஏனென்றால் இந்தமாதிரி கொடுக்கல் வாங்கல் அவர்களிடையே நடப்பதுண்டு. முன் ஒருதடவை மிருண்மயியின் தலைமயிர் நடுமுதுகுவரை வளர்ந்திருந்தது. ஒருநாள் ராகாலன் பின்புறமாக வந்து அவள் கூந்தலில் கத்தரியைப் போட்டான். கோபத்துடன் மினி அவன் கையிலிருந்து அதைப் பிடுங்கி மீதியிருந்த மயிரை எல்லாம் டக்டக்கென்று கத்தரித்துவிட்டான், சற்றும் யோசியாமல். அவளுடைய குழற்கற்றை கொடியிலிருந்து அறுபட்டு விழுந்த கறுப்புத் திராக்ஷைக் கொத்துபோலத் தரையில் விழுந்தது. இவர்களிடையே இந்தமாதிரி தண்டனை முறைகள் நடப்பதுண்டு.

அதற்குப்பின் இந்த மௌன நாடகம் வெகுநேரம் நீடிக்கவில்லை. உருண்டையாக இருந்த பெண் ஒருவாறாக எழுந்து நின்று பாட்டியுடன் உள்ளே சென்றாள். அபூர்

வன் ஆழ்ந்த முகத்துடன் மீசையைத் தடவியவாறு வெளியே செல்லப் புறப்பட்டான். வாயிலருகில் சென்று பார்த்தபொழுது 'பாலிஷ்' செய்த புது பூட்ஸ் வைத்த இடத்தில் இல்லை. எங்கிருக்கிறதென்று தேடியும் அகப்படவில்லை.

வீட்டிலிருந்தவர்கள் எல்லாரும் பரபரப்பு அடைந்தார்கள். அதை எடுத்தவர்மேல் வசைமாரி பொழியலாயினர். எவ்வளவோ தேடியும் அகப்படாமல், கடைசியில் வீட்டுக்காரரின் கிழிந்த செருப்பு ஒன்றை மாட்டிக்கொண்டு, பான்ட்லூன், ஜிப்பா, தலைப்பாகையுடன் சேருக இருந்த ஊர்த்தெருவில் இறங்கினான் அபூர்வன்.

குளத்தங்கரையில், தனிமையான பாதையோரத்தில் அந்த உரத்த குரல் சிரிப்பது கேட்டது. மர இலைகளின் நடுவே வனதேவதை ஒன்று குறும்புத்தனமாக, அபூர்வனின் கிழிந்த செருப்புக்களைப் பார்த்து ஏளனம் செய்வது போலிருந்தது.

அபூர்வன் அசடு வழிய இப்படியும் அப்படியுமாகப் பார்த்தான். அதே ஸமயம் அடர்ந்த தோப்பினுள்ளிருந்து அந்த வெட்கமற்ற குற்றவாளி வந்து அவன் எதிரே புதுச் செருப்புகளை வைத்துவிட்டு ஓடப் பார்த்தாள். அபூர்வன் கப்பென்று அவள் கைகளைப் பிடித்துக்கொண்டான்.

மிருண்மயி தன்னை விடுவித்துக்கொள்ள இப்படியும் அப்படியுமாக நெளிந்து பார்த்தாள். ஆனால் முடியவில்லை. குறும்புச் சிரிப்பு உலாவும் அந்த முகத்தின்மேல் கிளைகளினூடாக ஸூரிய கிரணங்கள் வந்து படிந்தன. வெள்ளி வெயில் பட்டுப் பளபளக்கும் தெள்ளிய அருவியின் அடிவரைக்கும் உள்ளதை, வழிப்போக்கன் உற்று நோக்குவது போல, அபூர்வன் ஆழ்ந்த நோக்குடன் அந்த மின் விளையாடும் கண்களையே உற்று நோக்கினான். பின்னர்த் தன்

காரியம் ஆனதுபோல கைப்பிடியைத் தளர்த்தி அவளைப் போகவிட்டான். அவன் கோபத்துடன் மினியை அடித்திருந்தால் அவள் வியப்படைந்திருக்க மாட்டாள். ஆனால் தனிமையான பாதை நடுவில் இந்தப் புதுவிதமான தண்டனையின் அர்த்தம் அவளுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

நிருத்தம் செய்யும் இயற்கை யன்னையின் சதங்கை ஒலி போல், கலகலவென்ற சிரிப்பின் அலை வானிடைப் பரந்தது. ஏதோ யோசனையில் ஆழ்ந்து அபூர்வன் மெல்ல வீட்டை வந்தடைந்தான்.

## மூன்றும் அத்தியாயம்

அன்றெல்லாம் சாக்குப் போக்குச் சொல்லி அபூர்வன் அம்மாவைப் பார்க்க உள்ளே போகவே இல்லை. வெளியே விருந்துக்கு அழைத்திருந்தார்கள். போய்ச் சாப்பிட்டுவிட்டு வந்தான். அபூர்வனைப் போல் படித்த பையன், படிக்காத நாட்டுப்புறத்துப் பெண்ணிடம் தன் கௌரவத்தை நிலை நாட்டப் பாடுவது சற்று விநோதமாக இருக்கலாம். பட்டிக்காட்டுப் பெண் ஒருத்தி அவனை ஸாதாரணமான ஆள் என்று நினைத்துக்கொண்டால்தான் என்ன? கணப்பொழுது அவனைப் பார்த்துச் சிரித்துவிட்டுப் பின்னர் அவன் இருப்பதை மறந்து முட்டாள் பையனான ராகாலனை விளையாட அழைத்தாள். அதனால் என்ன வந்தது? தான் 'விசுவதீபகம்' என்ற பத்திரிகையில் விமர்சனம் எழுதுவதாகவும், தன் பெட்டிக்குள் எஸென்ஸ், பூட்ஸ், ரூபின் கர்ப்பூரம், கடிதம் எழுதும் நீலநிறக் காகிதம், 'ஹார்மோனிய ஸ்வபோதினி', தான் எழுதியிருக்கும் குறிப்புகள் இவையெல்லாம் வெளிச்சத்திற்கு வர இருப்பதை அவளிடம் பிரமாணம் செய்யவேண்டிய அவசியங்

தான் என்ன? ஆனால் மனத்தைத் தேற்றிக்கொள்ளுவ தென்றால் லேசான காரியமா? நாட்டுப் புறத்துச் சிறுக்கி யிடம், ஸ்ரீயுக்த அபூர்வகிருஷ்ண ராய் பி. ஏ., தோல்வி யடையச் சற்றும் தயாராக இல்லை.

ஸாயங்காலமாக உள்ளே போனதும் "அம்மா, "ஏண்டா அபூ, பெண் எப்படி? பிடித்ததோ இல் லையோ?" என்று கேட்டாள்.

அபூர்வன் அசடுவழிய, "பெண் பார்த்தேன், அம்மா. அதில் ஒருத்தியைத்தான் எனக்குப் பிடித்தது" என்றான்.

அம்மா திகைத்துப் போய், "எத்தனை பெண்களையடா பார்த்தாய்?" என்றாள்.

கடைசியில் கொஞ்சங் கொஞ்சமாக அண்டை வீட்டு மஜூம்தாரின் பெண் மினியைத்தான் தன் பிள்ளைக்குப் பிடித்திருக்கிறது என்று தெரிந்தது. இவ்வளவு படித்த பிள்ளை, இப்படியா தேர்ந்தெடுக்கும் பெண்ணை!

முதலில் அபூர்வனுக்குக் கூச்சம் அதிகமாக இருந்தது. ஆனால் அம்மா அதற்குக் கடினமாக ஆக்ஷேபம் செய்த பொழுது அவன் கூச்சத்தை விட வேண்டியதாயிற்று. அவன் ரோஷத்துடன் மிருண்மயியைத் தவிர வேறு யாரையும் கல்யாணம் செய்துகொள்ள முடியாதென்று சொல்லிவிட்டான். மற்றப் பொம்மைகளைப்பற்றி நினைக்க நினைக்க விவாகம் என்றாலே அவனுக்கு வெறுப்பு ஏற் பட ஆரம்பித்தது.

இரண்டு மூன்று நாட்கள் இருவரும் மனஸ்தாபத் துடன் பேசவில்லை. கடைசியில் அபூர்வன் வெற்றியடைந் தான். 'மிருண்மயி சின்னவள். அவள் அம்மாவுக்குச் சரியானபடி சொல்லிக் கொடுக்கத் தெரியவில்லை. கல் யாணமாகித் தன்னிடம் வந்ததும் தன்னால் குணம் மாறி விடும்' என்று அம்மா தேற்றிக்கொண்டாள். மிருண்மயி யின் முகங்கூட அழகாக இருக்கிறது என்று வரவர அவ

ளுக்குத் தோன்றியது. ஆனல் உடனே அவளுடைய குட்டை மயிர் நினைவுக்கு வரும். மீண்டும் அவள் உள்ளம் வெறுப்படையும். நன்ருகப் பின்னி, நிறைய எண்ணெய் தடவினுல் தன்னுல் இந்தக் குறையும் நீங்கும் என்று நினைத்துக்கொள்ளுவாள்.

அபூர்வனின் பிடித்தத்தை எல்லாரும் "அபூர்வமான பிடித்தம்" என்று பெயர் வைத்துவிட்டார்கள்.

பைத்தியக்காரி மினியை எல்லாருக்கும் பிடித்தது. ஆனுலும் தங்கள் பிள்ளைக்கு மனைவியாக வரிக்க அவர்கள் எண்ணவில்லை.

மிருண்மயியின் தகப்பன் ஈசான மஜூம்தாருக்குத் தகுந்த காலத்தில் விஷயம் தெரிந்தது. அவருக்கு ஏதோ ஸ்டீமர் கம்பெனியில் குமாஸ்தா வேலை. தொலைவில் ஆற்றங்கரை ஸ்டேஷன் ஒன்றில் தகரக்கூரை வேய்ந்த கொட்டகையில் மூட்டைகள் நிறுப்பதும், டிக்கட் கொடுப்பதும் அவன் வேலை.

மிருண்மயியின் விவாகப் பேச்சை எடுத்ததும் அவர் கண்களில் நீர் தாரையாக வடிந்தது. அதில் எவ்வளவு துக்கமும் ஆனந்தமும் கலந்திருந்தனவென்று சொல்ல முடியாது.

பெண்ணின் கல்யாணத்திற்கென்று ஈசானபாபு தலைமை ஆபீஸ் துரையிடம் விண்ணப்பம் செய்தான். துரை அல்ப விஷயம் என்று நினைத்து விண்ணப்பத்தை மறுத்து விட்டார். பூஜையின்போது லீவு கிடைக்கும் என்று தெரிவித்து, அதுவரை விவாகத்தை நிறுத்தி வைக்குமாறு ஊருக்குக் கடிதம் எழுதினுன்—ஆனல் அபூர்வனின் தாயார் அந்த மாதத்திலேயே நல்ல நாள் இருக்கிறதென்றும், தாமதம் செய்ய இஷ்டமில்லை என்றும் எழுதிவிட்டாள்.

இரண்டாந் தடவையும் விண்ணப்பம் பலிக்காமற் போகவே ஈசான் வேறு ஆக்ஷேபம் கிளப்பாமல் முன் போல் டிக்கெட் கொடுக்கும் வேலையில் ஈடுபட்டான்.

இந்தப் பக்கம் மிருண்மயியின் தாயாரும் ஊரின் பெரிய பெண்டுகளுமாகச் சேர்ந்து எப்படி இருக்க வேண்டும் என்று இராப்பகலாக மினிக்குப் புத்திசொல்ல ஆரம்பித்தார்கள். விளையாட்டுத்தனம், வேகமாக நடப்பது, உரத்துச் சிரிப்பது, பிள்ளைகளுடன் பேசுவது, எப்படிக் குறைச்சலாகச் சாப்பிடுவது என்றெல்லாம் குறை சொல்லிக் கல்யாணத்தை ஒரு பயங்கரமான விஷயமென்று தோன்றும்படி செய்து தீர்த்தார்கள். இனித் தன் வாழ்வெல்லாம் சிறைத் தண்டனை அனுபவித்துக் கடைசியில் தூக்குமேடைக்குப் போக வேண்டியிருக்கும் என்று ஸந்தேகம் பிடித்துக் கொண்டது மினிக்கு.

முரட்டுக் குதிரை போலத் தலையாட்டிக் கொண்டு, "நான் கல்யாணம் பண்ணிக்கொள்ள மாட்டேன்" என்று பின் வாங்கினாள்.

## நான்காம் அத்தியாயம்

இருந்தும் அவள் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டியதாயிற்று.

அதற்குப் பின் திருத்தும் படலம் ஆரம்பித்தது. ஓர் இரவிற்குள் மிருண்மயியின் உலகமே அபூர்வனுடைய வீட்டு அந்தப்புரத்தினுள் அடங்கிவிட்டது.

மாமியார் திருத்தும் வேலையில் ஈடுபட்டாள். கடுமையாக முகத்தை வைத்துக்கொண்டு, "பாரம்மா, இனி நீ பச்சைக் குழந்தை இல்லை. எங்ககத்தில் அந்தமாதிரி தறுதலைத்தனம் நடக்காது" என்றாள்.

மாமியார் சொன்னவிதத்தில் மிருண்மயி அதை எடுத்துக் கொள்ளவில்லை. இந்த வீட்டில் நடக்காவிட்டால் வேறு இடத்திற்குப் போகவேண்டுமா என்னவோ? அன்று மத்தியான்னமே அவளைக் காணவில்லை. எங்கே எங்கே என்று தேட ஆரம்பித்தார்கள். கடைசியில் நன்றி கெட்ட ராகாலன் அவள் ஒளிந்திருக்கும் இடத்தைச் சொல்லிவிட்டான். அவள் ஆலமரத்து அடியில் இருந்த ராதாகாந்த ஸ்வாமியின் உடைந்த தேரினுள் பதுங்கி இருந்தாள்.

மாமியார், அம்மா, ஊரில் இருந்த பெண்டுகள் எல்லாரும் மிருண்மயியை எப்படித் திட்டியிருப்பார்கள் என்று நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.

இரவில் மேகம் கப்பிக்கொண்டு சோ வென்று மழை கொட்ட ஆரம்பித்தது. அபூர்வகிருஷ்ணன் படுக்கையில் மெல்ல மிருண்மயியின் பக்கம் நகர்ந்து, அவள் காதோடு காதாக, "மிருண்மயி, உனக்கு என்மேல் ஆசையில்லையா?" என்றான்.

"ஊஹூம், உன்மேலே எனக்கு ஆசையே இல்லை" என்றாள் மிருண்மயி பிகுவுடன். அவள் இவ்வளவு நேரமாக அடக்கிவைத்திருந்த கோபமெல்லாம் அபூர்வனின் தலைமேல் போய் விடிந்தது.

அபூர்வன் உள்ளம் குன்றி, "ஏன், நான் என்ன தப்புச் செய்தேனும்?" என்றான். மிருண்மயி, "என்னை ஏன் கல்யாணம் செய்து கொண்டாய்?" என்று பதிலுக்குக் கேட்டாள்.

இந்தத் தவறுக்குத் திருப்தியான பதில் சொல்வது கடினம். ஆனால் இந்த அடங்காத மனத்தை வசம்செய்து கொள்ள வேண்டும் என்று அபூர்வன் தனக்குள் திடம் செய்துகொண்டான்.

மறுநாள் மாமியார் மிருண்மயியின் அடங்காப் பிடாரித்தனத்தைக் கண்டு அவளை உள்ளே பூட்டிவைத்தாள். மிருண்மயி, புதிதாகக் கூட்டில் அடைபட்ட கிளிபோல முதலில் இங்குமங்கும் தப்தப்பென்று அல்லாடினாள். கடைசியில் வெளியே போக வழியிராமல் கோபம் விஞ்சி, படுக்கையின் போர்வையை யெல்லாம் பல்லால் துண்டுதுண்டாகக் கடித்துப் போட்டாள்; தரையின்மேல் குப்புறப் படுத்து உள்ளூர அப்பாவை நினைத்து அழலானாள்.

இதே ஸமயம் யாரோ மெல்ல அவள் பக்கத்திலே உட்கார்ந்து, ஆதரவுடன், புழுதி படிந்த அவள் தலைமயிரை ஒதுக்கினார். மிருண்மயி கோபத்துடன் தலையை உருட்டி அந்தக் கையைத் தூரத் தள்ளினாள். அபூர்வன் அவள் காதண்டைக் குனிந்து, "நான் தெரியாமல் கதவைத் திறந்துவிட்டேன். வா, நாம் குளத்தங்கரைத் தோட்டத்திற்கு ஓடிவிடலாம்" என்றான். மிருண்மயி வேகமாகத் தலையை ஆட்டி அழுதவாறு, "ஊஹூம்" என்றாள். அபூர்வன் அவள் மோவாயைப் பிடித்துத் தூக்கி, "யார் வந்திருக்கா, பாரேன்!" என்றான். ராகாலன், கீழே விழுந்திருந்த மிருண்மயியைப் பார்த்து ஒன்றும் தோன்றாமல் வாயிலண்டை நின்றிருந்தான். மிருண்மயி முகத்தை நிமிர்த்தாமல் அபூர்வனின் கையைத் தூரத் தள்ளினாள். "ராகாலன் உன்னோடே விளையாட வந்திருக்கான். போறயா?" என்றான் அபூர்வன். அவள் வெறுப்புடன், "ஊஹூம்" என்றாள். ராகாலனும் சௌகரியமில்லை என்று தெரிந்து ஓட்டம் பிடித்தான். அபூர்வன் கம்மென்று உட்கார்ந்திருந்தான். மிருண்மயி அழுதுகொண்டே, கடைசியில் களைத்துத் தூங்கிவிட்டாள். அபூர்வன் மெல்ல வெளியே போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டான்.

மறுநாள் மிருண்மயிக்கு அவள் அப்பாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. ஈசான் தன் உயிருக்குயிரான மிருண் மயியின் விவாகத்திற்கு வர முடியாததற்காக ஒரு குரல் அழுது, புது மணமக்களுக்குத் தன் ஆசியை அனுப்பியிருந் தான்.

மிருண்மயி மாமியாரிடம் போய், "நான் அப்பா விடம் போவேன்" என்றாள். மாமியார் திடுமென்று அவள் இப்படிக் கேட்பதற்காக அவளை அதட்டினாள். "அப்பன் எங்கே இருக்கானோ, யாருக்குத் தெரியும்? அப்பாவண்டை போகணுமாம்—பிடிக்கிறதே பிடிவாத மாக இருக்குது!" என்றாள். மிருண்மயி பதில் சொல்லா மற் போய்விட்டாள். தன் அறையினுள் கதவைத் தாழிட்டுக் கொண்டு, எல்லாம் இழந்தவன் பகவானிடம் முறையிடுவதுபோல, "அப்பா, என்னை அழைத்துக் கொண்டு போயேன். எனக்கு இங்கே யாரும் இல்லை. இங்கே இருந்தால் நான் பிழைக்கமாட்டேன்" என்று சொல்லிக் கொண்டாள்.

அன்று நள்ளிரவில் தன் கணவன் தூங்கியதும் மெல்லக் கதவைத் திறந்துகொண்டு மிருண்மயி வெளியே சென்றாள். மேகம் கவிந்துகொண்டு வந்தபோதிலும், நிலாக் காலம் ஆனதால், வழி தெரிந்துகொண்டு போக வேண்டிய வெளிச்சம் இருந்தது. அப்பாவிடம் போக எந்த வழியில் செல்வதென்று தெரியவில்லை. கடிதம் எடுத்துச் செல்லும் 'ரன்னர்'கள் போகும் வழியில் உலகத் தில் எந்த இடத்திற்கு வேண்டுமானாலும் போகலாம் என்று அவளுக்கு ஒரு நம்பிக்கை. மிருண்மயி அந்த வழியில் நடக்கலானாள். நடக்க நடக்க அவள் உடல் தளர்ந்தது. பொழுது விடியும் நேரமாகிவிட்டது. காட்டி னுள் இரண்டொரு பறவைகள் சிறகடித்து மெல்லக் கூவின. மிருண்மயி ஆற்றங்கரை ஓரம் பெரிய கடைத்

தெருவுக்கு வந்து சேர்ந்தாள். இதற்குமேல் எந்தப் பக்கம் போவதென்று தெரியாமல் நிற்கும்பொழுது, யாரோ ஓடிவரும் சப்தம் கேட்டது. கடிதங்கள் நிரம்பிய பையைத் தோளில் போட்டுக்கொண்டு, இரைக்க இரைக்க 'மெயில் ரன்னர்' வந்தான். மிருண்மயி பரபரப்புடன் அவனிடம் போய், "நான் குசிகஞ்ஜ் போக வேண்டும், அப்பாவிடம். என்னை அழைத்துச் செல்வாயா?" என்றாள். "குசிகஞ்ஞ் எங்கேயோ தெரியாது" என்றான் அவன். தூங்கும் மெயில் படகோட்டியை எழுப்பிப் படகில் புறப்பட்டான். அவனுக்குத் துக்கம் விசாரிக்கவோ, இரண்டு வார்த்தை பேசவோ ஒழிவு ஏது?

நாழிகை ஆக ஆகத் துறையிலும் சந்தையிலும் கலகலப்பு ஏற்பட்டது. மிருண்மயி துறையில் இறங்கி ஒரு படகோட்டியை, "என்னைக் குசிகஞ்ஜ் அழைத்துப் போவாயா?" என்று கேட்டாள். அவன் பதில் சொல்வதற்குள் பக்கத்துப் படகோட்டி, "அட யாரு! மினுவா! நீ எங்கிருந்து இங்கே முளைச்சே?" என்றான். மிருண்மயி பொங்கி எழும் ஆவலுடன், "வனமாலி, என்னைக் குசிகஞ்ஜில் அப்பாவிடம் அழைத்துப் போயேன்" என்றாள். வனமாலி அவர்கள் ஊர்ப் படகோட்டி. இந்த அடங்காப் பிடாரிப் பெண்ணை அவனுக்கு நன்றாகத் தெரியும். "அப்பாவிடம் போறயா! நல்லது, வாயேன். நான் அழைச்சிண்டு போகிறேன்" என்றான். மிருண்மயி படகில் ஏறினாள்.

படகோட்டி படகைத் தள்ளினான். புரட்டாசி மாதத்தில் ஆற்றில் வெள்ளம் எதுக்கிப் படகை ஆட்டி வைத்தது. மினிக்குத் தூக்கமாக வந்தது. தலைப்பை விரித்துப் படுத்தாள். இயற்கையின் அன்பில் வளரும் குழந்தைபோல், அந்தத் துஷ்டச் சிறுமி அடித்துப் போட்ட மாதிரி தூங்கினாள்.

எழுந்து பார்த்தால் அவள் புக்ககத்தில் கட்டிலில் படுத்திருந்தாள். அவள் எழுந்ததைக் கண்டு சமையல் காரி திட்ட ஆரம்பித்தாள். அந்தக் குரலைக் கேட்டு மாமியார் வந்து கடுமையான வார்த்தைகளைச் சொன்னாள். மினி கண்களை அகல விழித்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியில், மாமியார் அவள் அப்பன் சரியான பாடம் கற்றுக் கொடுக்கவில்லை என்று ஆரம்பித்தபொழுது, மிருண்மயி வேகமாகப் பக்கத்து அறையினுள் போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டாள்.

அபூர்வன் கூச்சம் பிடுங்கித் தின்ன, "அம்மா, அவளை இரண்டுநாள் பிறந்தகம் அனுப்பினால் என்ன?" என்றான்.

"இதேதடா முன்னேயும் பார்க்கவில்லை ; பின்னேயும் பார்க்கவில்லை" என்று அம்மா அபூர்வனை அதட்டினாள். ஊரில் இத்தனை பெண்கள் இருக்கும்பொழுது இந்த எரி மூஞ்சிக் கள்ளியைத் தெரிந்து எடுத்ததற்காக அவனைக் குத்திக் காட்டினாள்.

## ஐந்தாம் அத்தியாயம்

அன்றெல்லாம் வெளியே மழையும் புயலும்; உள்ளே யும் இதேபோலக் குழப்பம்.

மறுநாள் நள்ளிரவில் அபூர்வன் மிருண்மயியை மெல்ல எழுப்பி, "மினி, அப்பாவிடம் போகிறாயா?" என்றான். மினி கப்பென்று அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு, "போவேனே" என்றாள். அபூர்வன் மெல்ல, "வா, நாம் இரண்டுபேரும் ஓடிவிடலாம். துறையில் படகு ஏற்பாடு செய்திருக்கிறேன்" என்றான்.

மினி நன்றி பொங்கும் உள்ளத்துடன் கணவனைப் பார்த்தாள். பின்னர்ப் பரபரவென்று எழுந்து உடை மாற்றிக்கொண்டு வெளிக் கிளம்பத் தயாரானாள்.

அபூர்வன் அம்மாவின் கவலையை நீக்கக் கடிதம் எழுதி வைத்துவிட்டு, அவளுடன் வெளியே சென்றான்.

அந்த இருட்டில், தனிமையான ஊர்வழியில், முதல் முறையாக, ஆந்தரிகத்துடன் மினி தன் கணவனின் கையைப் பிடித்தாள். அவள் உள்ளத்தில் பொங்கும் ஆனந்தம் அந்த மிருதுவான கையின் மூலமாக அவள் கணவனின் ரத்தத்திலும் பரவிச் சிலிர்ப்பை எழுப்பியது.

படகு அன்றைய இரவே புறப்பட்டது. தாங்க முடியாத ஸந்தோஷம் இருந்தும் மினி சற்று நேரத்திற் கெல்லாம் உறங்கிவிட்டாள். மறுநாள் அல்லவா அவளுக்கு விடுதலை! ஆனந்தம்! இரு கரைகளிலும் ஊர்கள், சந்தைகள், வயல்வெளிகள், காடுகள்—இருபுறங்களிலும் எத்தனையோ படகுகள் போய் வந்துகொண்டிருந்தன. ஒவ்வொரு சின்ன விஷயத்தைப்பற்றியும் ஆயிரந்தடவை கேட்டாள் மினி. இந்தப் படகில் என்ன இருக்கிறது, அவர்கள் எங்கிருந்து வருகிறார்கள், இந்த இடத்தின் பெயர் என்ன—இந்த மாதிரி கேள்விகளுக்குப் பதில் அபூர்வனின் காலேஜ் புஸ்தகங்களில் கிடைக்காது. பி. ஏ., படித்த அறிவு இருந்தாலும் போதாது. நண்பர்கள் கேட்டால் வெட்கப்படலாம். அபூர்வன் ஒவ்வொரு கேள்விக்கும் பதில் சொன்னான். ஆனால் முக்கால்வாசி அவன் பதிலுக்கும் உண்மைக்கும் ஒற்றுமை இல்லை. எள் ஏற்றிச் செல்லும் படகைக் கடலைக்கொட்டை என்றும், பாஞ்ச்பேட்டையை ராய்நகர் என்றும், முன்ஸீப் நியாய ஸ்தலத்தை ஜமீன்தார் மாளிகை என்றும் சொல்ல அவன் சற்றும் தயங்கவில்லை. இதையெல்லாம் உண்மை என்று எடுத்துக்கொள்ளும் பெண்ணின் ஸந்தோஷமும் குறைய வில்லை.

மறுநாள் ஸாயங்காலம் படகு குசிகஞ்ஜை அடைந் தது. தகர வீட்டில் சதுரக் கண்ணாடி லாந்தர் ஏற்றி

வைத்திருந்தது. ஈசான் மஜூம்தார், திறந்த உடம்புடன் நாற்காலில் ஒன்றில் உட்கார்ந்து, தோல் பைண்டு செய்த பேரேட்டில் கணக்கு எழுதிக் கொண்டிருந்தான். இந்த ஸமயத்தில் இளந் தம்பதிகள் அறையினுள் நுழைந்தனர். மினி, "அப்பா" என்று கூப்பிட்டாள். அந்த அறையில் இதைப் போன்ற குரல் இதுவரை ஒலித்ததில்லை.

ஈசானின் கண்களில் நீர் பலபலவென்று உதிர்ந்தது. என்ன செய்வது, என்ன சொல்வது என்று ஒன்றும் தோன்றவில்லை. பெண்ணும் மாப்பிள்ளையும், ராஜாவும் ராஜாத்தியும் போல வந்து நின்றார்கள். இந்தச் சணல் மூட்டைகள் நடுவே அவர்களுக்கு ஏற்ற ஆசனம் எப்படித் தயார் செய்வது என்று அவன் அறிவுக்கு எட்டவில்லை.

அப்புறம் சாப்பாடு. அதுவும் ஒரு கவலைதான். ஏழைக் குமாஸ்தா தன் கையாலேயே பருப்பும் சாதமும் சமைத்துச் சாப்பிடுவான். இன்று இந்த மாதிரி விருந்து நாளில் என்ன செய்வது?—எதைச் சமைப்பது? "அப்பா, நாம் எல்லாருமாகச் சேர்ந்து சமைப்போம்" என்றாள் மினி. அபூர்வன் தன் சந்தோஷத்தைத் தெரிவித்தான்.

அறையினுள் இட வசதி இல்லை, ஆட்களில்லை; சாப்பாட்டுக்குச் சாமான் இல்லை. ஆனால் சிறு சில்லியின் மூலம் நாலு மடங்கு வேகத்துடன் ஊற்றுப் பீறிடுவது போல், வறுமையின் குறுகிய வசதியின் மூலம் சந்தோஷம் முழு வேகத்துடன் பொங்கி வந்தது.

இவ்வாறாக மூன்று தினங்கள் கழிந்தன. இரண்டு வேளைகளிலும் குறிப்பிட்ட நேரத்தில் ஸ்டீமர் வந்து நிற்கும். எத்தனை ஆட்கள்! ஒரே இரைச்சல்!—ஸாயங்காலம் ஆனதும் ஆற்றங்கரையில் ஈ காக்கை இராது; அப்போது எவ்வளவு யதேச்சை. கேட்பார் கிடையாது. மூவருமாகச் சேர்ந்து, பல ஏற்பாடுகள் செய்து, தவறுதலாக ஒன்றுக்கு இன்னொன்றைப் பண்ணி

ஞர்கள். அப்புறம் மினி கைவளைகள் குலுங்க, மாமனர் மாப்பிள்ளைகளுக்கு இலைபோட்டுப் பரிமாறினுள். வீட்டுக் காரியத்தில் பல தவறுகளைக் காட்டி மினியை ஏளனம் செய்வான் அபூர்வன். அதற்கு அவள் வேடிக்கையாகச் சச்சரவு செய்து கோபித்துக் கொள்ளுவாள். கடைசியில் இனி அதிக நாட்கள் இருக்க முடியாதென்று அபூர்வன் தெரிவித்தான். மினி, "இன்னும் சில நாட்கள் இருப்போமே" என்று கெஞ்சினுள். "அவசியமில்லை" என்றுன் ஈசான மஜூம்தார்.

விடை பெற்றுக்கொள்ளும்பொழுது, பெண்ணை மார்பில் அணைத்து அவள் தலையைத் தொட்டுத் துக்கம் தொண்டையை அடைக்க, "அம்மா, நீ உன் புக்ககத்தில் விளக்கேற்றி லக்ஷ்மியாக இரு. என் மினியிடம் யாரும் தவறு கண்டுபிடிக்கக் கூடாது" என்றுன்.

மிருண்மயி அழுதுகொண்டே கணவனுடன் சென்றுள். ஈசான் வெறிச்சென்ற அறையினுள் போய் வழக்கம்போல மூட்டைகள் நிறுக்கலானுன்.

## ஆறும் அத்தியாயம்

இந்தக் குற்றவாளிகள் இருவரும் வீட்டுக்கு வந்ததும், அம்மா ஒன்றும் பேசவில்லை. அவர்களுடைய நடத்தைக்காக யாரையும் கடிந்துகொள்ளவில்லை. அவள் மனத்தை அழுத்திய இந்தச் சுமை வீட்டுக் காரியங்களைச் செய்யும்பொழுது வெளிப்பட்டது.

கடைசியில் பொறுக்க முடியாமற் போகவே அபூர்வன், "அம்மா, காலேஜ் திறந்துவிட்டார்கள். நான் சட்டப் பரிக்ஷைக்குப் படிக்கவேண்டும்" என்றுன்.

அம்மா அலக்ஷ்யமாக, "உன் பெண்டாட்டியை என்ன செய்யப் போகிறுய்?" என்றுள்.

"இங்கேயே இருக்கட்டும்."

"அதெல்லாம் வாண்டாண்டாப்பா. உன்னேடேயே அழைச்சிண்டு போ."

அபூர்வன் ரோஷத்தினுல் உள்ளம் புழுங்கி, "ஆகட்டும்; சரிதான்—சரி" என்ருன்.

கல்கத்தாவுக்குப் போக ஏற்பாடுகள் நடந்தன. போவதற்கு முன்னுள் இரவு அபூர்வன் படுக்கைக்கு வந்து பார்த்தபொழுது மினி அழுதுகொண்டிருந்தாள்.

சட்டென்று அவன் உள்ளத்தை ஏதோ தாக்கியது. வருத்தத்துடன், "மினி, என்னுடன் கல்கத்தாவுக்கு வர உனக்கு இஷ்டமில்லையா?" என்ருன்.

"இல்லை."

"என்மேல் உனக்கு ஆசை இல்லையா?" என்று கேட்டான் அபூர்வன். இந்தக் கேள்விக்குப் பதில் வரவில்லை. பல தடவைகள் இந்தக் கேள்விக்கு அநாயாஸமாகப் பதில் வரும். ஆனுல் ஒவ்வொரு ஸமயம் இதனுள் மனஸ்தத்துவ ஸம்பந்தமான சிக்குகள் இருப்பதால் சிறுமியிடமிருந்து பதில் ஒன்றும் எதிர்பார்க்க முடியாது.

"ராகாலனை விட்டுப் பிரிய உனக்கு என்னவோ போல் இருக்கிறதா?"

"ஆமாம்" என்று பதில் சொன்னுள் மினி.

இந்தப் பி. ஏ., படித்துத்தேறிய இளைஞனின் உள்ளத்தில் சிறுவன் ராகாலன்மேல் ஒரு பொருமை ஊசிபோலப் பொத்தியது. "நான் அநேக நாட்கள் வீட்டுக்கு வரமாட்டேன்" என்ருன். இதற்குப் பதில் ஒன்றும் வரவில்லை. "ஒரு வேளை இரண்டு வருஷங்களுக்கு மேல்கூட ஆகலாம்" என்ருன். மிருண்மயி, "நீங்கள் வரும்பொழுது ராகாலனுக்கு மூன்று தகடுவைத்த ராட்ஜஸ் கத்தி ஒன்று வாங்கிண்டு வரணும்" என்று உத்தரவு போட்டாள்.

அபூர்வன் படுக்கையில் சற்று எழுந்து, "நீ அப்போ இங்கேயே இருப்பாயா?" என்ருன்.

"ஆமாம். அம்மாவண்டைப் போய் இருக்கேன்."

அபூர்வன் பெருமூச்சு விட்டு, "சரி, அப்படியே இரு. நீ என்னை வரச்சொல்லி எழுதும் வரையில் வரப்போவதில்லை. ஸந்தோஷந்தானே?" என்ருன்.

இதற்குப் பதில் சொல்வது அவசியம் என்று மிருண்மயிக்குத் தோன்றவில்லை. அவள் தூங்கிவிட்டாள். அபூர்வனுக்குத் தூங்கப் பிடிக்கவில்லை. தலையணையை உயர வைத்து அதன்மேல் சாய்ந்து உட்கார்ந்தான்.

இரவு வெகு நேரம் கழித்துச் சந்திரன் உதயமானன். நிலவொளி படுக்கையின் மேல் விழுந்தது. அபூர்வன் அந்த ஒளியில் மிருண்மயியைப் பார்த்தான். ராஜகுமாரியை யாரோ வெள்ளி மாயக்கோல் கொண்டு மயக்கியிருப்பதுபோல் தோற்றியது. தங்கக்கோல் கிடைத்தால் நித்திரை செய்யும் அழகியை எழுப்பி மாலை மாற்றிக்கொள்ளலாம். வெள்ளிக்கோல் சிரிப்பு; தங்கக்கோல் கண்ணீர்.

விடிகாலையில் அபூர்வன் மிருண்மயியை எழுப்பி, "மினி, நான் போக நாழிகை ஆகிறது. வா, உன்னை உன் வீட்டில் விட்டு வருகிறேன்" என்ருன்.

மினி படுக்கையிலிருந்து எழுந்ததும், அபூர்வன் அவள் கைகளைப் பிடித்துக்கொண்டான். "இப்போது ஒரு வேண்டுகோள்: நான் பல தடவைகள் உனக்கு உதவி செய்திருக்கிறேன். இன்று போகும்போது எனக்கு ஒரு பரிசு" என்ருன்.

மிருண்மயி வியப்புடன், "என்ன?" என்ருள்.

"நீயாக அன்புடன் எனக்கு ஒரு முத்தம் கொடு."

அபூர்வனுடைய வியப்பான வேண்டுகோளையும் அவன் ஆழ்ந்த முகத்தையும் கண்டு மினி சிரித்தாள். சிரிப்பை அடக்கிக்கொண்டு முத்தம் கொடுக்க முகத்தை நீட்டினாள். அருகில் சென்றதும், அடக்க முடியாமல் பக்கென்று சிரித்தாள். இந்த மாதிரி இரண்டு தடவை செய்தபின், வாயைத் தலைப்பினால் பொத்திக்கொண்டு ஓயாமல் சிரித்தாள். அதட்டலாக அபூர்வன் அவள் காதை நிமிண்டினான்.

அபூர்வனுக்கு ஓர் உறுதி உண்டு. எதையும் கொள்ளையடித்துப் பெறுவது அவனுக்குப் பெரிய அவமானமாகத் தோன்றும். அவன் தெய்வம்போல, பெருமையுடன், தானாகக் கொடுத்த பரிசை ஏற்றுக்கொள்ளுவான். தன் கையால் எதையும் எடுத்துக்கொள்ள மாட்டான்.

மிருண்மயி சிரிக்கவில்லை. அபூர்வன் அவளை விடிகாலையில் வேறு வழியாகப் பிறந்தகத்திற்குக் கொண்டு விட்டான். "யோசித்துப் பார்த்தேன். அவளை என்னுடன் அழைத்துப் போனால் படிப்புக்குத் தடங்கல்; தவிர அவளுக்குத் தோழியரும் யாரும் இல்லை. நீதான் அவள் இங்கே இருக்கவேண்டாம் என்றாயே!—அதனால் பிறந்தகத்தில் விட்டு வந்தேன்" என்றான் அம்மாவிடம்.

மனத்தாங்கலுடனே தாயும் மகனும் பிரிந்தார்கள்.

## ஏழாம் அத்தியாயம்

**பி**றந்தகத்திற்கு வந்த மினிக்கு எதிலும் மனம் செல்லவில்லை. அந்த வீட்டில் எல்லாம் தலைகீழாக மாறிவிட்டனபோல் தோன்றியது அவளுக்கு. பொழுது போகவில்லை. என்ன செய்வது, எங்கே போவது, யாருடன் பேசுவது என்று ஒன்றும் தெரியவில்லை.

திடீரென்று வீட்டிலும், வெளியிலும் மனிதர்களே இல்லை போல் அவளுக்குத் தோன்றியது. மத்தியான வேளையில் சூரியன் அஸ்தமித்த மாதிரி இருந்தது. இன்று கல்கத்தாவுக்குச் செல்ல அவளுக்கு இவ்வளவு ஆசை இருக்கிறதே. ஏன் நேற்றைய இரவு இல்லை? அது அவளுக்கே விளங்கவில்லை. தான் இழந்த பழைய வாழ்வை அனுபவிக்க அவள் திரும்பியபோது, அதன் சுவையே முற்றிலும் மாறிவிட்டது.

ஓர் ஆளை இரண்டாக வெட்டினாலுங்கூட வெட்டுப் பட்ட இடம் தெரியாதவாறு வேலை செய்யும் வாளை, கைத்திறம் வாய்ந்த கம்மியர் தயாரித்தாரெனக் கதை களில் கேள்விப்பட்டிருக்கிறோம். விதியின் வாளும் அதே போலத்தான். மிருண்மயியின் இளமை, யௌவனப் பருவம் இவைகளுக்கிடையே அது பாய்ந்தது. அது அவளுக்குத் தெரியாது. இன்று எவ்வாறோ அது அசைந்தது. இளமையின் அம்சம் யௌவனத்திலிருந்து விண்டது. மினிக்கு வியப்பும் துயரமும் மேலிட்டன.

பிறந்தகத்தில் அவளுடைய பழைய படுக்கை அறை அவளுடையதென்று தோன்றவில்லை. அங்கே இருந்த எல்லாம் வேறாக இருந்தன. அவளுடைய மனம் இன்னொரு வீட்டை நோக்கியது; வேறோர் அறையில் படுக்கை ஒன்றைச் சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருந்தது.

மிருண்மயியை அதற்கப்புறம் வெளியே யாரும் பார்க்கவில்லை. அவளுடைய சிரிப்புக் குரல் கேட்க வில்லை. ராகாலுக்கு அவளைக் கண்டால் பயம். விளை யாட்டின்மேல் அவளுக்குப் புத்தி போகவே இல்லை.

"அம்மா, என்னைப் புக்ககத்தில் கொண்டுவிடேன்" என்றாள் மினி.

இந்தப் பக்கம், பிள்ளை பிரிந்து போகும்போது, அவன் முகம் கவலையுற்றிருந்ததை எண்ணி, அவன் தாயார்

வேதனையில் புழுங்கிப்போனாள். அவன் கோபித்துக் கொண்டு மனைவியைப் பிறந்தகத்தில் விட்டு வந்தது அவளை உள்ளூற உறுத்தியது.

இந்தச் சமயத்தில் ஒரு நாள் தலையில் 'கோம்டா' இட்டுக்கொண்டு, மினி வாடிய முகத்துடன் மாமியாரின் காலில் வந்து விழுந்தாள். மாமியார் அந்தக் கணமே, கண்களில் நீர் துளிக்க அவளைத் தன் மார்பில் அணைத்துக் கொண்டாள். கணப்பொழுதில் இருவரும் ஒன்று கூடினார்கள். மாமியார் மாட்டுப்பெண்ணின் முகத்தைக் கண்டு வியந்தாள். அவள் பழைய மிருண்மயியாக இல்லை. இத்தகைய மாறுதல் ஸாதாரணமாக எல்லாருக்கும் ஏற்படாது. இப்பெரிய மாறுதலுக்கு அமோக சக்தி அவசியம்.

மிருண்மயியின் குற்றங்களை ஒவ்வொன்றாகக் கண்டிப்பது என்று மாமியார் நிச்சயம் செய்திருந்தாள். ஆனால் கண்ணுக்கெட்டாத ஓர் ஆள் சுருக்கமான வழியொன்றைக் கையாண்டு, மிருண்மயிக்குப் புதுப் பிறப்பு ஒன்றை அளித்து விட்டார்.

இப்போது மீனு மாமியாரைத் தெரிந்துகொண்டாள். மாமியாராலும் மினியைப் புரிந்துகொள்ள முடிந்தது. மரத்திற்கும் கிளைகளுக்கும் உள்ள உறவுபோல, வீட்டு வேலைகளுக்கிடையே அவர்கள் இழைந்தனர்.

பரந்த நோக்குடைய பெண்மையின் ஸ்வபாவம் மிருண்மயியின் உடலிலும் உள்ளத்திலும் ஒவ்வொரு புரையிலும் நிறைந்து விளங்கியது. அதனால் அவளுக்கு ஒரு வேதனையே மூண்டது. கார் காலத்தில் நீர் முகந்த முகில்போல் அவள் உள்ளத்தில் கண்ணீர் மல்கிய ஊடல் உலவியது. அந்த ஊடல் மிகுதியால் நிழல் கவிந்த அவள் கண் இதழ்கள்மீது ஓர் அபூர்வமான இருள் தயங்கியது. "எனக்கு என்னைத் தெரியவில்லை என்றால்

நீங்களும் ஏன் என்னைப் புரிந்துகொள்ளவில்லை? ஏன் என்னை அதட்டியிருக்கக் கூடாது? உங்கள் இஷ்டம் போல் என்னை ஆட்டி வைப்பதுதானே! நான் துஷ்டி. உங்களுடன் கல்கத்தாவுக்கு வரமாட்டேன் என்றபோது என்னைப் பலவந்தமாக உங்களுடன் அழைத்துச் செல்வது தானே? ஏன் என் பேச்சைக் கேட்டீர்கள்? என் முரட்டுத்தனத்தை எல்லாம் ஏன் பொறுத்துக்கொண் டீர்கள்?" என்று தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

எல்லாம் அவள் நினைவுக்கு வந்தன; அன்று காலையில் தனிமையான குளத்தங்கரையில், காலை வேளை யில் தன் கையைப் பிடித்தது, ஒன்றும் பேசாமல் தன்னையே ஊடுருவி நோக்கியது யாவும். திடீரென்று அந்த நோக்கின் கருத்து அவளுக்கு விளங்கியது. அன்று பிரிந்து செல்கையில் அபூர்வனின் வாயருகே வந்து திரும்பிய முத்தம்—அந்த அறைகுறையான முத்தம்— இன்று கானல் நீரை மழையென்று எண்ணி அலையும் சாதகம் போல் கறிந்துபோன அந்த அவகாசத்தைக் குறித்து வருந்தியது. அவளுடைய வேட்கை தணிகிற வழியாக இல்லை. இப்போது அவளுக்கு அடிக்கடி 'அந்த சமயத்தில் இப்படிச் செய்திருந்தால்' அந்தக் கேள்விக்கு இந்த மாதிரி பதில் சொல்லியிருந்தால் இப்படி யாகி இருக்குமா?' என்றெல்லாம் தோன்றும்.

அபூர்வனுக்கு அவள் மேல் ஒரு வருத்தம்; மிருண்மயி இன்னும் தன்னைப் புரிந்து கொள்ளவில்லையே! இன்று அவள் உட்கார்ந்து எண்ணமிட்டாள். 'என்ன நினைத்துக் கொண்டு அவர் போய் விட்டாரோ! அடங்காதவள், புத்தி தெரியாதவள், பிடிவாதக்காரி என்று புரிந்து கொண்டிருப்பாரே தவிர, முழு உள்ளத்துடன் அவர் அன்பின் அமுதத்திற்காக ஏங்கியிருக்கும் பெண் என்று

அவருக்குத் தெரியாமல் போய்விட்டதே!' என்று தன்னையே நொந்துகொண்டாள். குறையாக நின்ற அந்த முத்தம்—அன்பின் வெள்ளம்—அபூர்வனின் தலையணையிலேயே தன் கடனைத் தீர்த்துக்கொண்டது.

"நீ கடிதம் எழுதாவிட்டால் நான் வீட்டுக்கு வர மாட்டேன்" என்று அபூர்வன் சொல்லிவிட்டுப் போனான். அதை நினைத்துக்கொண்டு அவள் ஒரு நாள் அறைக் கதவைத் தாழிட்டுவிட்டுக் கடிதம் எழுத உட்கார்ந்தாள். அபூர்வன் கொடுத்த பொன் போல் கரைபோட்ட நீலக் காகிதத்தை எடுத்து வைத்துக்கொண்டு யோசிக்கலானாள். கோணல்மாணலாய்க் கோடுகள் போட்டு, விரல்களில் மசியைத் தோய்த்துக்கொண்டு பெரியதும் சின்னதுமான எழுத்துக்களில், எப்படி ஆரம்பிப்பது என்று தெரியாமல் ஒரு கடிதம் எழுதினாள்: "நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்? எனக்கு ஏன் கடிதம் போடுவதில்லை? வீட்டுக்கு வாருங்கள்."—இதற்குமேல் என்ன எழுதுவதென்று அவளுக்குத் தோன்றவில்லை. வாஸ்தவத்தில் சொல்ல வேண்டியதே இவ்வளவுதான். ஆனால் மனித ஸமூகத்தில் மனத்திலுள்ளதை இன்னும் சற்று அதிகப்படுத்திச் சொல்ல வேண்டியது அவசியம். மிருண்மயிக்கும் அது புரிந்தது. இதற்காக அவள் வெகு நேரம் உட்கார்ந்து யோசித்த பின் இரண்டொரு புது வரிகளைச் சேர்த்தாள்: "இனிமேல் எனக்குக் கடிதம் எழுதுங்கள். எப்படி இருக்கிறீர்கள் என்று எழுதுங்கள். வீட்டுக்கு வாருங்கள். அம்மா சௌக்கியமாக இருக்கிறார். விசு, புண்டி எல்லாரும் சௌக்கியம். நேற்று நம் கறுப்புப் பசு கன்று போட்டது" என்று கடிதத்தை முடித்தாள். அதை உறையிலிட்டு, மேலே ஒவ்வோர் எழுத்திலும் ஆசையின் ஒவ்வொரு துளியையும் கலந்து 'ஸ்ரீயுக்த பாபு அபூர்வகிருஷ்ண ராய்' என்று எழுதினாள். காதல்

எப்படி இருந்தால் என்ன!—வரிகள் நேராகவோ, எழுத்துக்கள் அழகாகவோ, உச்சரிப்புச் சரியாகவோ இல்லை.

உரையின் மேல் பெயரைத் தவிர இன்னும் சில எழுத வேண்டியது அவசியமென்று மினிக்குத் தெரியாது. எங்கேயாவது மாமியார், இன்னும் யார் கண்ணிலாவது படப்போகிறதே என்று கூச்சத்துடன் அதை நம்பிக்கையான வேலைக்காரியிடம் கொடுத்துத் தபாலாபீசுக்கு அனுப்பினாள்.

அந்தக் கடிதத்தினால் பலன் ஒன்றுமில்லை. அபூர்வன் வீட்டுக்குத் திரும்பவில்லை.

## எட்டாம் அத்தியாயம்

தாய் பார்த்தாள். லீவு விட்டும் அபூர்வன் வீட்டுக்கு வரவில்லை. இன்னும் அவனுக்குத் தன்மேல் கோபம் என்று எண்ணிக்கொண்டாள்.

மிருண்மயியும் அவனுக்குத் தன்மேல் வெறுப்பு என்று நிச்சயம் செய்தாள். தன் கடிதத்தை நினைத்துக் கொண்டு அவள் புன்றிக்கொண்டாள். அது துச்சமான கடிதம். அதில் ஒன்றுமே இல்லை. தன் மனத்திலிருப்பதை அதில் வெளியிட முடியவில்லை. அதைப் படித்து இன்னும் அவளைக் குழந்தையென்றே அபூர்வன் நினைப்பான். உள்ளூற வெறுத்திருப்பான். இதை எண்ணும்பொழுது அவள் அம்புபட்டவள்போலத் துடித்தாள். வேலைக்காரியை அடிக்கடி, "அந்தக் கடிதத்தை நீ தபாலில் போட்டாயோடி?" என்று கேட்டாள். அவளைத் தேற்றி வேலைக்காரி, "ஆமாம்மா. என் கையால் போட்டேன். இத்தனை நாளிலே பாபுவுக்குச் சேர்ந்திருக்குமே" என்றாள்.

கடைசியில் அபூர்வனின் தாய் அவளை அழைத்து, "அம்மா, அபூ ஏனோ வீட்டுக்கு வரவில்லை. கல்

கத்தாவுக்குப் போகலாம் என்றிருக்கிறேன். நீயும் வறயா?" என்ருள். மினி, ஆகட்டும் என்று தலையசைத்து, அறையினுள் போய்க் கதவை அடைத்துக்கொண்டு படுக்கையின்மேல் படுத்தாள். தலையணையை மார்பில் அழுத்திக்கொண்டு, புரண்டு சிரித்து, மனத்தில் இத்தனை நாள் கட்டுண்டிருந்த சந்தோஷத்தை வெளிப்படுத்தினுள். ஓய்ந்துபோய் வேதனையுடன் சந்தேகம் குமுற அவள் அழ ஆரம்பித்தாள்.

அபூர்வனுக்குத் தெரிவிக்காமல் இருவருமாக நெக்குருகி அவன் அன்பைப் பெறக் கல்கத்தாவுக்குச் சென்றனர். அபூர்வனின் தாய் தன் மாப்பிள்ளையின் வீட்டில் போய் இறங்கினுள்.

அன்று, மிருண்மயியின் கடிதத்தை எதிர்பார்த்து ஏமாந்தவனுய் ஸாயங்காலமாக அபூர்வன் தன் சபதத்தைக் கலைத்துத் தானே கடிதம் எழுத உட்கார்ந்தான். எந்த வார்த்தையும் அவனுக்குச் சரிப்பட்டு வரவில்லை. அவளை எப்படி அழைப்பது?—அந்த பதத்தில் அன்பும் ஒலிக்க வேண்டும், கோபமும் தொனிக்க வேண்டும். ஏற்ற பதம் கிடைக்காமற் போகவே தாய்ப் பாஷையின் மேல் அவனுக்கு வெறுப்பு ஏற்பட்டது. இதே ஸமயம் தங்கை புருஷரிடமிருந்து கடிதம் வந்தது: "அம்மா வந்திருக்கிருர். இன்றிரவு இங்கேயே சாப்பிடலாம்—எல்லாரும் சௌக்கியம்"

கடைசியில் ஓர் ஆறுதல் வாக்கியம் இருந்தும் அபூர்வனின் உள்ளத்தில் ஒரு ஸந்தேகம். தாமதம் செய்யாமல் தங்கையின் வீட்டுக்குச் சென்ருன்.

பார்த்த மாத்திரமே, "அம்மா, எல்லாம் சௌக்கியந்தானே?" என்ருன். "எல்லாம் சௌக்கியந்தான். நீ லீவுக்கு ஊருக்கு வரவில்லை. அதுதான் உன்னை அழைச்சிண்டு போக வந்தேன்" என்ருள் தாயார்.

"அதற்காக இவ்வளவு கஷ்டம் எதற்கு? பரீக்ஷைக்குப் படிக்கிறேன். அதுதான்......"

சாப்பிடும்போது தங்கை, "அண்ணு, இந்தத் தடவை உன்னேடு உன் ஸம்ஸாரத்தையும் அழைத்துக்கொண்டு வறலேயே, ஏன்?" என்ருள்.

அண்ணன் கம்பீரமாக, "பரீக்ஷைக்குப் படிக்கவேண்டாமா?" என்ருன்.

தங்கை புருஷர் சிரித்து, "அதெல்லாம் சுத்தப் புரட்டு. நமக்குப் பயந்துதான் அழைத்துவரத் துணியவில்லை" என்ருர்.

"பாவம், குழந்தை பயந்து போகும்" என்ருள் தங்கை.

இம்மாதிரி கேலிப் பேச்சுக்களுக்கிடையே அபூர்வனின் மனம் மிகவும் வதங்கியது. அவனுக்கு ஒன்றும் பிடிக்கவில்லை. 'அம்மா கல்கத்தாவுக்கு வந்தாளே! இஷ்டமிருந்தால் மினியும் அவளுடன் வந்திருக்கலாம். அம்மா அவளையும் அழைத்துவர முயற்சி செய்திருப்பாள். அவள் வரவில்லையோ என்னவோ!' இந்த விஷயமாகக் கூச்சத்திஞல் அவன் அம்மாவை ஒன்றும் கேட்கவில்லை. மனிதனின் வாழ்வும், உலகமும் அவனுக்குப் பெரிய சூழ்ச்சியாகவே தோற்றின.

சாப்பிட்டானதும், பெரிய புயற் காற்றுக் கிளம்பி விடா மழை பெய்தது.

"இன்று இங்கேயே இருந்துவிட்டுப் போ, அண்ணு" என்ருள் தங்கை.

"இல்லை. ரூமுக்குப் போகவேண்டும். வேலை இருக்கிறது."

"ராத்திரி என்ன அப்பா வேலை? இங்கே ஒரு ராத்திரி

தங்கினால் நீ யாரிடமும் பதில் சொல்ல வேண்டியிராது. கவலை என்ன?" என்றார் தங்கை புருஷர்.

இப்படி அதிகமாக வற்புறுத்தவே அபூர்வன் இஷ்டத்திற்கு மாறாக, அங்கே இருக்க ஒப்புக்கொண்டான்.

"அண்ணா, ரொம்பக் களைத்திருக்கிறாய். நேரம் ஆக்காதே, போய்ப் படுத்துக்கொள்" என்றாள் தங்கை.

அபூர்வனுக்கும் அதுதான் தோன்றியது. எப்போதடா படுக்கையில் விழப் போகிறோம் என்று இருந்தது அவனுக்கு. ஒன்றுமே பிடிக்கவில்லை.

படுக்கை அறை வாயிலில் வந்து பார்த்தால் உள்ளே ஒரே இருட்டு. "காற்றில் விளக்கு அணைந்துவிட்டது. ஏற்றட்டுமா?" என்றாள் தங்கை.

"அவசியமில்லை. நான் விளக்கு வைத்துக்கொள்வதில்லை" என்றான் அபூர்வன்.

தங்கை போனதும் அபூர்வன் இருட்டில் மெல்லக் கட்டிலை நோக்கிச் சென்றான்.

கட்டிலில் உட்காரப் போகும்பொழுது சட்டென்று வளைகள் குலுங்கிட, இரு மெல்லிய கரங்கள் அவனைத் தழுவிக்கொண்டன. பூவினும் மெல்லிய இதழ்கள், கள்ளன்போல வந்து, கண்ணீரிடையே அவனை முத்தமிட்டன. அபூர்வனுக்கு முதலில் வாரிப் போட்டது. பின்னர் விஷயம் தெரிந்தது. அன்றொரு நாள் சிரிப்பில் ஆரம்பித்த விஷயம் இன்று கண்ணீர்ப் பெருக்கில் இனிது முடிவடைந்தது.

---